# சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக (பகுதிநேரம்)
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


**ஆய்வாளர்**

**ப.யோ. புவனேஸ்வரி**

**[பதிவு எண்: Ph.D/Regn./99/P.T/12/2012/5268]**

நெறியாளர்

முனைவர் **க.அ. ஜோதிராணி**

**எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி.,பி.எட்.,பி.ஜி.டி.ஜே.,சி.ஆர்.டி.,**

**இணைப்பேராசிரியர்**

**முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையம்**

**காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**சென்னை – 600 002**





**முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையம்**

**காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**சென்னை – 600 002**

**நவம்பர் – 2021**

முனைவர் **க.அ.ஜோதிராணி** எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி.,பி.எட்.,பி.ஜி.டிஜே.,சி.ஆர்.டி
**இணைப் பேராசிரியர்,**
**முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையம்,**
**காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**
**சென்னை - 600 002**

# நெறியாளர் சான்றிதழ்

***"சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்"*** என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு ஆய்வாளர் ப.யோ. புவனேஸ்வரி, என்பவர் முனைவர் (பிஎச்.டி.) பட்டப்பேற்றிற்காக (2012-2021) காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி, **முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையத்தில்** ஆய்வு நிகழ்த்தி உருவாக்கியதாகும். இந்த ஆய்வேடு அவருடைய சொந்த முயற்சியில் உருவானது என்பதற்கும், இது வேறு எந்த ஆய்வுப்பட்டத்திற்கும் இதற்கு முன் அளிக்கப்பெறவில்லை என்பதற்கும் சான்று அளிக்கின்றேன்.

இடம் : சென்னை　　　　　　　　நெறியாளர் கையொப்பம்

நாள் :

முனைவர். க.அ. ஜோதிராணி

**ப.யோ. புவனேஸ்வரி**
**முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)**
**முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையம்,**
**காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி),**
**சென்னை - 600 002.**

# ஆய்வாளர் உறுதிமொழி

***"சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்"*** என்னும் தலைப்பில், முனைவர் பட்ட ஆய்விற்காக உருவாக்கப்பட்ட ஆய்வேடானது (பிஎச்.டி) காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி, **முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையத்தில்** (2012 - 2021) இணைப் பேராசிரியர், ஆய்வு நெறியாளர் முனைவர் க.அ. ஜோதிராணி அவர்களின் மேற்பார்வையில் உருவாக்கபட்டுள்ளது. இந்த ஆய்வு எனது சொந்த முயற்சி என்றும், இதற்குமுன் இந்த ஆய்வேடு வேறெந்த பட்டத்திற்காகவும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: சென்னை

ஆய்வாளர் கையொப்பம்

நாள்:

**(ப.யோ. புவனேஸ்வரி)**

# நன்றியுரை

காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி) முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையத்தில் எனது முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி அளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி முன்னாள் முதல்வர் முனைவர் திருமதி. இராம சீதாலஷ்மி அவர்களுக்கு நன்றி. பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வினை முனைந்து செய்திட வாய்ப்பினை நல்கிய இன்னாள் முதல்வர் முனைவர் திருமதி டே. பிரிடா ஞானராணி அவர்களுக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குரிய தலைப்பைத் தேர்ந்தெடுப்பதிலும் ஆய்வுப் பகுப்பு செய்வதிலும், ஆய்வுக்குத் தேவையான ஆதாரங்களைச் சேகரிப்பதிலும், வழிமுறைகளைக் கூறியவர். பெண்ணிய சிந்தனையாளராக இருந்து, என்னை வழிநடத்தியவர். ஆய்வுக்காலத்தில் ஆய்வேடு எழுதும் முறை குறித்து நுட்பமான ஆய்வுக்கு வழிகாட்டிய நெறியாளர். தனது பல்வேறு பணிகளுக்கு இடையிலும், கொரோனா தடுப்பூசியின் தாக்கத்தினால் சோர்வுற்றிருந்த போதும் ஆய்வு சிறப்பாக அமைய நெறிப்படுத்தியவர். என் ஆய்வேடு நேர்த்தியாக அமையும் வகையில் பல்வேறு சான்றாதாரங்களைப் பகிர்ந்தும், ஆய்வு உரையாடல்களை நிகழ்த்தியும், ஆய்வு கருவிற்குரிய பல்வேறு ஆய்வு அணுகுமுறைகளை வகுத்தளித்தவர். எனது நெறியாளர் இணைப் பேராசிரியர் முனைவர் க.அ.ஜோதிராணி அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ள கடமைப் பட்டுள்ளேன்.

ஆய்வுக் காலத்தில் கல்லூரி வேலை நேரங்களைக் கடந்து நெறியாளரின் வீட்டில் ஆய்வுப் பணிகள் நடந்து கொண்டிருந்த போது, பக்கத்துணையாக இருந்த நெறியாளரின் மகள்கள் க. ஜோ. செந்தணல்,

க. ஜோ. தேன்மழை ஆகியோருக்கு என் கனிவான நன்றிகள். நெறியாளரின் உறவினர் நா.ராணி அவர்களுக்கும் என் நன்றி.

ஆய்வேடு செம்மையாகவும் விரைந்து முடிக்கவும் விரும்பிய, நான் பணியாற்றும் பச்சையப்பன் மகளிர் கல்லூரி காஞ்சிபுரம் பேராசிரியர் முனைவர் திருமதி. கோமதி சந்திரன் அவர்களுக்கும் பேராசிரியர் முனைவர் திருமதி. மு.ஞானத்தாய் அவர்களுக்கும், என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

பச்சையப்பன் மகளிர் கல்லூரி காஞ்சிபுரம் முதல்வர் பேராசிரியர் முனைவர் செல்வி.ஸ்ரீமதி இராமலிங்கம் அவர்களுக்கும் தமிழ்த்துறை தலைவர் முனைவர் மு.நஜ்ஜிமா அவர்களுக்கும், முனைவர் மா.பொ.செ. இராணி அவர்களுக்கும் ஆகியோருக்கும் என் நன்றி. என் உடன் பணியாற்றும் சக பேராசிரியர்கள் அனைவருக்கும் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்லூரியில் என் ஆய்வுப் பணியின்போது எனக்கு உற்சாகமூட்டியும், விரைவில் ஆய்வினை முடிக்க ஊக்கப்படுத்தியும், மனம் சோர்வடைந்த போது, தேறுதல் மொழிகள் கூறி வந்த என் தோழிகள் திருமதி த. பொற்கொடி, மற்றும் நெறியாளரின் வழிகாட்டலில் முனைவர் பட்டம் பெற்ற தோழிகள் முனைவர் திருமதி. ஏ.மேனகா முனைவர். திருமதி. மோ.ரூபா, ஆகியயோருக்கும் என் நன்றி. அவ்வாறே ஆய்வுக் காலங்களில் உதவிகரமாய் பயணித்து, ஆய்வு தொடர்பான சிக்கல்களைக் களைந்திடவும் ஆய்வுப்பணிகளில் பெரும் அக்கறையோடு என்னுடன் பயனித்து வந்த சக ஆய்வாளர்களாகிய திருமதி. ஆ. மேகலா, திருமதி. K.அமுதா, திருமதி. பா.முருகேஸ்வரி ஆகியோருக்கு நன்றி. காயிதேமில்லத் அரசினர் மகளிர் கல்லூரியின் விலங்கியல் பேராசிரியர் முனைவர். திருமதி ம.சரசா அவர்களுக்கும் நன்றி.

என்னுடைய வாழ்வின் முன்னேற்றத்தையே தன் வாழ்வின் இலட்சியமாகக் கொண்டு வாழும் எனது ஆருயிர் தந்தை கு.பன்னீர்செல்வம் அவர்களுக்கும், என்னைக் கருவிலும் நினைவிலும்

சுமந்து வாழ்ந்து, நான் ஆய்வேடு முடிக்கும் நாளினை எதிர்பார்த்து காத்திருந்து, ஆய்வேட்டின் இறுதிப் பணிகள் நடந்து கொண்டிருக்கும் போது எங்களை விட்டு பிரிந்து, துயர் கடலில் ஆழ்த்திய என்னை ஈன்ற தாய் திருமதி ப.சரோஜா அவர்களுக்கு எனது நன்றிகளைச் சமர்ப்பித்துக் கொள்கிறேன். குடும்ப வாழ்விற்கு உறுதுணையாய் இருந்த எனது மாமனார் மற்றும் மாமியாருக்கும் எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு காலத்தில் பலவகை உதவிகளையும் செய்து, ஆய்வேட்டை உருவாக்கிட அவ்வப்போது எனக்கு ஊக்கமளித்து, வாழ்க்கைக்குப் பக்கபலமாய், சிந்தனை, செயல் என எல்லா நிலைகளிலும் உயிரோட்டமாய் இருந்த என் அன்பிற்கினிய கணவர் திரு.து. யோகானந் பாபு அவர்களுக்கு நன்றியைக் கூறி மகிழ்கிறேன். ஆய்வுப்பணிக் காலத்தில் எனக்கு ஊக்கமளித்த என் உடன்பிறந்த சகோதரர் திரு.ப.விஜயகுமார் அவர்களுக்கும் மற்றும் என் குடும்பத்தினர் அனைவருக்கும் நன்றிகள் பல.

மேலும், என் வளர்ச்சியில் அக்கறை கொண்டு, எனக்கு ஆறுதல் தேவையான பொழுதும், அறிவுரை தேவையான பொழுதும் மனம் திறந்து வழங்கிய என் அன்பிற்குரிய, இனிய தோழிகள் செல்வி ம.தரணிஸ்ரீ, திருமதி வசுமதி, திருமதி. உஷா மோகன் அனைவருக்கும் நன்றி சொல்ல கடமைப்பட்டுள்ளேன்

ஆய்வுப் பணியின் போது பல நிலைகளிலும் உறுதுணையாய் இருந்த குடும்ப நண்பரும் தோழியுமான திருமதி அனு மனோ அவர்களுக்கும், முனைவர் திரு. பொன். மனோபன் அவர்களுக்கும் என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வுத் தட்டச்சு பணிகளில் உடனிருந்து உதவிய திருமதி அம்சா ஸ்ரீராம் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவையான புத்தகங்களைத் தந்துதவிய உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூலகர் திரு. மு.பெருமாள் சாமி மற்றும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவன தொல்லியல் துறை பேராசிரியர் முனைவர் திருமதி. பா.சுலோச்சனா அவர்களுக்கும், சென்னை தரமணி ரோஜா முத்தையா நூலகத்தாருக்கும், கன்னிமரா நூலகம் சென்னை, சென்னை தரமணி செம்மொழி தமிழாய்வு நிறுவன நூலகத்தாருக்கும், சென்னைப் பல்கலைக் கழக நூலகத்தாருக்கும், சென்னை காயிதேமில்லத் அரசினர் மகளிர் கல்லூரி நூலகர் முனைவர் திருமதி ம.சந்திரா அவர்களுக்கும், காஞ்சிபுரம் பச்சையப்பன் மகளிர் கல்லூரி, நூலகர் திருமதி கு.இந்துமதி அவர்களுக்கும், காஞ்சிபுரம் அண்ணா கிளை நூலகத்தாருக்கும், காஞ்சிபுரம் நேரு கிளை நூலகத்தாருக்கும் என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டின் முகப்பினை வடிவமைத்துக் கொடுத்த ஆசியன் பதிப்பகத்தார் அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வாளர்

**ப.யோ. புவனேஸ்வரி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| நற். | - | நற்றினை |
| கலித். | - | கலித்தொகை |
| குறிஞ்சி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறிஞ்.கலி. | - | குறிஞ்சிக்கலி |
| பா.கலி. | - | பாலைக்கலி |
| குறுந். | - | குறுந்தொகை |
| திருமுருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| நெ. கலி | - | நெய்தற்கலி |
| சிறுபாண். | - | சிறுபாணாற்றுப்படை |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | - | பொருநராற்றுப்படை |
| ம. கலி | - | மருதக்கலி |
| மு. கலி. | - | முல்லைக்கலி |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| பட்டினப் | - | பட்டினப்பாலை |
| மலை. | - | மலைபடுகடாம் |
| புறம். | - | புறநானூறு |
| பரி. | - | பரிபாடல் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| தொல். | - | தொல்காப்பியம் |

| | | |
|---|---|---|
| தொல்.பொருள்.அகத். | - | தொல்காப்பியம்-பொருளதிகாரம், அகத்திணையியல் |
| தொல்.பொருள்.புறத். | - | தொல்காப்பியம்-பொருளதிகாரம், புறத்திணையியல் |
| தொல்.பொருள்.களவு. | - | தொல்காப்பியம்-பொருளதிகாரம், களவியல் |
| தொல்.பொருள்.மரபு. | - | தொல்காப்பியம்-பொருளதிகாரம், மரபியல் |
| குறள் | - | திருக்குறள் |
| தொகு. ஆ | - | தொகுப்பாசிரியர் |
| உரை. ஆ | - | உரையாசிரியர் |
| மொழி. பெ. | - | மொழிபெயர்ப்பாளர் |
| நூற். எண். | - | நூற்பா எண் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| P | - | page |
| Pg | - | pages |

# பொருளடக்கம்


| இயல்கள் | தலைப்பு | பக்க எண் |
|---|---|---|
| | முன்னுரை | 1 |
| 1. | உயிர்களின் தோற்றமும் தாய்வழிச் சமூகப் பகிர்வும் | 15 |
| 2. | சங்க இலக்கியத்தில் பெண்களும் தொழில்களும் | 40 |
| 3. | சமூகப் பொருளாதார உற்பத்தியில் பெண்களின் பங்கு | 132 |
| 4. | பண்பாட்டுக் கலைகளும், பெண் கலைஞர்களும் | 190 |
| 5. | சங்க இலக்கியத்தில் பெண்களின் பதிவுகளும், மறுக்கப்பட்ட உரிமைகளும் | 238 |
| | நிறைவுரை | 290 |
| | துணைநூற்பட்டியல் | 303 |
| | பின்னிணைப்புகள் | 316 |

# முன்னுரை

## ஆய்வு அறிமுகம்:

ஒரு மக்களினத்தைப் பற்றி அறிய அவர்களின் வாழிடம், மொழி, கலாச்சாரக் கூறுகள் போன்றவற்றை ஆய்வு செய்ய வேண்டியது அவசியம். குறிப்பாக மொழியையும் அதில் உள்ள இலக்கியங்களையும் ஆய்வுக்கு உட்படுத்தும் பொழுது, அவ்வினத்தின் வரலாற்றுச் சிறப்புகளை நன்கு அறிய முடியும். உலகச் செம்மொழிகளுள் ஒன்று தமிழ் மொழி. தமிழில் ஆயிரம் ஆண்டுகள் பழமையான இலக்கியங்களும் இலக்கண நூல்களும் இருந்துள்ளன. ஆனால் அத்ததைய இலக்கியங்கள் மற்றும் இலக்கண நூல்கள் பல தற்காலத்தில் கிடைக்கவில்லை. தற்போது கிடைக்கும் முதல் இலக்கியமான சங்க இலக்கியங்களை ஆய்வுக்கு உட்படுத்தும் பொழுது தமிழ் இனத்தின் தொம்மையும் வளமையும் புலப்படும்.

உலகின் செவ்வியல் இலக்கியம் என்ற தனித்த பண்பாட்டு அடையாள சிறப்புகளோடு சங்க இலக்கியம் அமைகிறது. தாய்மைப் பண்பு என்பது செவ்வியல் இலக்கியப் பண்புகளில் முக்கியமானது. கிளை மொழிகளை உருவாக்கும் `வளமை' என்ற மொழி ஆளுமையைக் கொண்டு தமிழ்மொழி அமைந்துள்ளது. பதினோரு வகை செம்மொழிப் பண்புகளில் தாய்மை பண்பு கொண்ட தமிழ் மொழியின் சங்க இலக்கியத்துள் மொழி ஆளுமை மட்டுமல்ல பொருளாதார வளத்தில் தாய்வழிச் சமூகமாக விளங்கியத் தன்மையும் காணமுடிகிறது. தாய் வழிச் சமூகத்தின் சிறப்பினை சங்க இலக்கியம் `பாதீடு' என்ற சொல்லால் குறித்து நிற்கக் காணலாம்.

சமூகத்தின் உயிராதாரமான பொருள் உற்பத்தி வளத்திற்குக் குழந்தை என்னும் மறு உற்பத்தியை அளித்து பொருளாதார வளத்தின் குறியீடாக பெண் இருக்கிறாள் என்பது மனிதகுல வரலாறு. வேட்டைக்கு `கை' முதல் `கருவி'. பல கைகளுக்கான குழந்தைகளின்

உற்பத்திப் பெருக்கம் பொருளாதாரப் பெருக்கத்திற்கு மூலதனமாகவும் மூல ஆதாரமாகவும் இருக்கிறது என்பதையும் அறியமுடிகிறது.

தொடக்கக்கால மனிதனின் வேட்டைக் கருவியாக, முதல் ஆயுதமாக, 'மரக்குச்சியும்' 'கல்லும்' பதிவு கொள்கிறது. பெண், ஆண் என இரு பாலரும் இணைந்து இயங்கியதன் மூலம் வேட்டைத் தொழில் வளர்ச்சி கொண்டது. 'உற்பத்தி' என்ற சொல்லுக்குள் 'பெண்' என்ற சொல் இணைவு கொள்கிறது என்பதை வெளிப்படையாகச் சொல்லிச் செல்கிறது இவ்வாய்வேடு.

மனிதகுல வரலாறு, ஆணை மேல் நிறுத்தியே புனையப்பட்டுள்ளது என்பதை அறிகிறோம். காரணம் எழுத்து ஆணுக்குரியதாக ஆக்கப்பட்டிருந்தது. பெண்ணின் மறு உற்பத்தியாகப் பிறந்தவன் ஆண் என்பதைப் பொது வாசிப்பு அவ்வளவாக பேசவில்லை. சமூகத்தின் எல்லா நிலையிலும் பெண்களின் பங்களிப்பு சிறப்பானதாக இருந்து வந்துள்ளதை இவ்வாய்வேடு முன்மொழிகிறது.

சங்க இலக்கியங்கள் குறித்து அதிக அளவிலான ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. 'பெண்ணிய சிந்தனை' வெளிப்பட வேண்டும் என்ற நோக்கில் தமிழகத்தில் ஆங்காங்கே பாட திட்டத்திற்குள் பெண்ணியப் பார்வையைப் பல்கலைக் கழகங்கள் அனுமதித்துள்ளன. அந்த வகையில் ***சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்*** என்ற தலைப்பில் சங்ககால பெண்ணின் பொருளாதார பங்களிப்பு குறித்து இந்த ஆய்வேடு ஆய்வு செய்து அளித்துள்ளது. சங்ககாலப் பெண்ணின் பதிவுகள் வெளிப்படையாக ஆய்வுலகில் பேசப்பட வேண்டும் என்ற நோக்கில் இந்த ஆய்வு உருவாக்கப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்கள் எழுதப்பட்ட காலத்தில் சமூக பொருளாதார உற்பத்தி நடவடிக்கைகள் எங்ஙனம் இருந்தது. சங்ககால மக்களின் வாழ்க்கையில் பொருளாதார உற்பத்தியில் உழைப்பாளர்களின் இடம் எவ்வாறு பதிவு செய்யப்பட்டிருக்கின்றது என்பது குறித்தும் இந்த ஆய்வேட்டில் ஆராயப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் பெண்களின் சமூக, பொருளாதார உற்பத்தி நடவடிக்கைகள் ஆண்களது சமூக, பொருளாதார உற்பத்தி நடவடிக்கைகளுடன் இணைந்தும் தனித்துவமாகவும் அமைந்த நிலைகளை அறிய வேண்டியது ஆய்வுலகத்தின் தேவையாக அமைகிறது. சங்க காலம் வர்க்க சமூகம் உருவாகிய தொடக்க காலமாகும். எந்த வகையான பொருளாதார உற்பத்திக் கூறுகள் அந்தச் சமூகத்தைத் தீர்மானித்திருக்கின்றன என்பதையும் ஆழமான ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிய தேவை இருக்கிறது. இந்நிலையில் சங்ககாலச் சமூக பொருளாதாரத் தளத்தில் பெண்களின் களம் பற்றி பேசுகிறது இவ்வாய்வேடு.

இலக்கியங்களின் தோற்றம் என்பது ஒரு மொழியின் குறிப்பிடத் தகுந்த வளர்ச்சிக் கட்டம். அவ்வளர்ச்சியைத் தமிழ் மக்கள் சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக வளர்ந்திருக்கின்றனர். எனில், அம்மொழியின் தோற்றம் அதற்கும் பல பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முந்தையதாக இருந்திருக்க வேண்டும் என்பது ஆய்வாளர்களின் கருத்து. இத்தகைய மொழிவழி மரபுத் தொடர்ச்சி கொண்ட சமூக வளர்ச்சியில் பெண்களின் சமூகப் பங்களிப்பு ஆய்வுக்குரியதாகிறது.

சங்ககாலத்துக்கு முந்தைய சமூகத்தில் பெண்கள் பெரும் ஆளுமை பண்புகளுடன் திகழ்ந்துள்ளனர். உலகம் முழுவதிலும் வேட்டைத் தொழிலில் பெண்கள் முதன்மை நிலையில் காணப்பட்டுள்ளனர். அவர்கள் விதைத்தல் முதல் அறுவடை வரை, உலக்கை உள்ளிட்ட பொருட்களை உருவாக்கியது முதல் அவற்றைச் செம்மையான முறையில் பயன்படுத்தி தானியங்களைச் சீர் செய்வது வரை என எல்லா வகையான தொழில்களையும் செய்தளித்துள்ளாள். அதற்கு உலகம் தழுவிய ஆதாரங்கள் பல உள்ளன. ‘ராகுல சாங்கிருத்தியாயன்’ எழுதிய ‘வால்காவிலிருந்து கங்கை வரை’ என்னும் ஆய்வு இதனை நிறுவுகின்றது. சமூக வளர்ச்சியில் ஒரு கட்டத்தில் பெண்கள் ஆண்களுக்கு இணையாக வாழும் நிலைக்கு வந்தனர். பின்பு

ஆணுக்கு கீழாக தாழும் நிலையும் ஏற்பட்டது. இந்நிகழ்ச்சிப் போக்கினை சங்கப் பாடல்கள் வழி இவ்வாய்வேடு நிறுவ முயல்கிறது.

**ஆய்வுத் தலைப்பு**

தொடக்கக் காலத்தில் பெண் சமூக உற்பத்தியில் முதன்மை நிலையை வகித்தாள். மலையில் கற்கருவி கொண்டு மண்ணைக் கீறி பயிரிட்டு வேளாண்மையைத் தொடங்கியவள்; முல்லை நிலத்து வன்புலத்தில், மலைச்சரிவுகளில், மேட்டு நிலங்களில் களைக்கொத்துக் கருவி கொண்டு பயிர் தொழிலை வளர்த்தவள் பெண் என்பதைச் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன. "துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல் நல்கோள் சிறுதினைப் படுபுள் ஓப்பி எல்பட வருதியர் எனநீ விடுத்தலின்" (குறிஞ்சிப். 37-39) குறிஞ்சியில் பரண் அமைத்து நள்ளிரவுகளிலும் தினைப்புனம் காத்தவள்; தொடக்ககால மனிதகுல வரலாற்றில் ஆணைக் காட்டிலும் ஆளுமைப் பண்பு நிறைந்தவள்; என்ற பல நிலைகளில் சிறப்புற்று விளங்கியிருக்கிறாள். ஆனால் இலக்கியங்களில் பெண்ணும் பொருளாதாரமும் என்ற வரலாற்றுப் பகுதி மறைமுகமாக வைக்கப்பட்டுள்ளது. ஆகையால், சங்ககால பெண்களின் சமூக பங்களிப்பை முழுமையாக வெளிப்படுத்த வேண்டும் என்ற சிந்தனையில் ***"சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்"*** எனும் இந்த ஆய்வுத்தலைப்பு தேர்வு செய்யப்பட்டுள்ளது.

மலையிலிருந்து இடம்பெயர்ந்த சாதுவான விலங்குகளைத் தன்னுடன் குடியிருப்புகளில் வளர்த்துப் பாதுகாத்தவள் பெண். குழந்தை என்னும் மறுஉற்பத்தியின் காரணமாக தொழிலுக்குச் செல்ல இயலாத சூழல்களில் ஆண் மேய்ச்சல் தொழில் மேற்கொண்டான். மேய்ச்சலுக்காக கால்நடைகளைப் பிற இடங்களுக்கு கொண்டு செல்ல வேண்டியது ஆணின் பணியானது. இனப்பெருக்கத்தின் வழியாக கால் நடைகள் பெருகிய காலத்தில் கிடைத்த கால்நடை இனங்கள் ஆண்னின் கைப்பொருளாக மாறியது. இந்த இடைவெளியின் வரலாறுதான் பெண்களை உடைமையற்றவர்களாக மாற்றிய இடமாகும். மேய்ச்சல்

தொழிலில் ஈடுபட அனுமதிக்காத சமூகச் சூழலில் பெண்ணை இருத்தலில் வைத்த இடமும் இது என்பதை விளக்க இத்தலைப்பு தெரிவு செய்யப்பட்டுள்ளது.

நெடுந்தூர பயணத்திற்கு பெண்கள் செல்லவில்லை. காரணம் ஆண் மேய்ச்சலுக்காக வேறு இடங்களுக்குச் சென்ற போது, குடில்களில் கால்நடைகளைப் பாதுகாக்கும் பணி பெண்களுடையதானது. பருவ காலத்துக்கு ஏற்ப தாம் வாழும் எல்லைக்கு உட்பட்ட வன் புலத்து மேட்டு நிலங்களில் மலை நெல், தினை, சாமை என தானியங்களைப் பயிரிட்டு குடும்பத்தின் பொருளாதார தேவையை நிறைவேற்றியவர்கள் பெண்கள் ஆவர்.

குழந்தைகளை வளர்ப்பதும், பாதுகாப்பதும், பொருளீட்ட கற்றுக் கொடுப்பதும் பெண்களாக இருந்துள்ளனர். கருவிகளைப் பயன்படுத்தக் கற்றுக் கொடுத்தும், அடுத்த தலைமுறைக்கு வேளாண்மைத் தொழிலைக் கடத்தியிருக்கிறாள் பெண். இது சமூக பொருளாதார களத்தில் பெண்களின் இன்றியமையாத பங்கு என்பதை அறிவோம். ஆநிரையின் செல்வங்களைக் கவர்வதான தொடக்கக் கால போர் தொழிலுக்கு வளர்ந்த குழந்தைகளை ஆற்று படுத்துவதும் பெண்களின் பெரும் பணியாக இருந்துள்ளது. முல்லை நிலத்தில் ஆற்றியிருந்து சமூகக் கடமைகளைச் சிறப்பாக செய்த ஆளுமையாக பெண் இருந்தாள் என்பதை விளக்கவும் ***சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும் என்ற*** இத்தலைப்பு துணைபுரிகிறது.

## ஆய்வு நோக்கம்

பெண் குடும்பப் பணியிலும் பொருள் உற்பத்தி நடவடிக்கையிலும் முதன்மையானவளாக வாழ்ந்திருந்த வரலாற்றுப் பதிவை சங்க இலக்கியப் பாடல்கள் வழி கண்டறிந்து முன்வைக்க வேண்டும் என்பது ஆய்வின் நோக்கம்.

சமூகம் என்பதில் ஆண் பெண் இருவரது பங்களிப்பும் முக்கியத்துவம் வாய்ந்தது. அந்த வகையில் பெண்களின் முக்கியத்துவம்

சங்க இலக்கியப் பதிவுகளில் எத்தகைய பங்கினை வகுத்தளித்துள்ளது அல்லது எந்தெந்த காலத்தில் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது. எந்தெந்த காலகட்டத்தில் அது முக்கியத்துவத்தை இழந்தது என்பதை ஆய்வது ஆய்வேட்டின் இலக்கு. சமூகச் சூழலில் பெண்களுக்கு அளிக்கப்பட்ட கடமைகள், உரிமைகள், உரிமை இழந்த நிலை மற்றும் உரிமை தவிர்க்கப் பட்டதற்கான காரணங்களை ஆராய்வதும் ஆய்வேட்டின் நோக்கமாக அமைகிறது.

### ஆய்வு கருதுகோள்

சங்கச் சமூகம் வர்க்கம் தோன்றிய தொடக்க காலம் ஆகையால், பெண்கள்மீது சமூகத்தில் சுமத்தப்பட்ட அடிமைமுறைகள் அனைத்தும் முல்லை நிலத்திலேயே கருக்கொண்டிருக்க வேண்டும் என்றும், அதேசமயம் தற்காலத்தின் இழிநிலையோ மத்தியகாலத்தின் இறுக்க நிலையோ சங்ககாலத்து பெண்மீது நிகழ்த்தப்பட்டிருக்க வாய்ப்பு குறைவு என்னும் கருதுகோள் இவ்வாய்வேட்டில் முன் வைக்கப்பட்டுள்ளது.

காலந்தோறும் பெண்ணின் உழைப்பை முழுவதுமாகப் பயன்படுத்திக் கொண்ட இச்சமூகம் அவர்களுக்கு கொடுக்க வேண்டிய முக்கியத்துவத்தைக் கொடுக்கவில்லை என்ற கருத்தையும் இவ்வாய்வேடு கருதுகோளாகக் கொண்டுள்ளது.

### ஆய்வு அணுகுமுறை

தமிழ்ச் சமூகத்தின் குறிப்பிட்ட காலகட்டத்தின் இயக்கப் போக்கை பெண்களின் வாழ்வியல் நிலை வழி ஆராய்வதால் இவ்வாய்வேட்டில் வரலாற்றுமுறைத் திறனாய்வு, உளவியல் பகுப்பாய்வு, சமூகப் பொருளாதார பண்பாட்டு அணுகுமுறைகள் ஆய்வு அணுகுமுறைகளாக மேற்கொள்ளப் பட்டிருக்கின்றன.

சமூகத்தின் முழு அமைப்பையும் புரிந்து கொள்ள வரலாற்று முறைத் திறனாய்வு சிறந்தது. எனவே ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் குறிப்பிட்ட காலகட்டத்தில் வாழ்ந்த பெண்களின் வாழ்நிலையை

ஆராயும் இவ்வாய்வு வரலாற்றுமுறை திறனாய்வு வழியாக முறைப்படுத்தப்பட்டுள்ளது.

சமூகத்தின் சரிபாதி எண்ணிக்கையில் இருப்போர் பெண்கள். சங்க காலத்திலும் பெண்களின் எண்ணிக்கை ஆண்களுக்கு இணையாகவே இருந்துள்ளது. அவர்தம் வாழ்க்கைமுறை, உற்பத்தியில் அவர்களின் பங்களிப்பு, சமூகத்தில் அவர்களுக்கு வழங்கப்பட்ட மதிப்பு போன்றவற்றை தெள்ளிதின் அறிய சமூகவியல் பண்பாட்டு அணுகுமுறையும் இவ்வாய்வேட்டில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு மூலங்கள்

ஆய்விற்கான மூலங்கள் இரு நிலைகளில் திரட்டப்பட்டுள்ளன.

அவை,

1. முதன்மை ஆதாரங்கள்
2. துணைமைச் சான்றாதாரங்கள் என்பனவாகும்.

## முதன்மை நூல்கள்

பண்டைத் தமிழரின் வாழ்வு குறித்த தரவுகளை வரலாறாகத் தந்துள்ளது சங்க இலக்கியம். எட்டுத்தொகை பத்துப்பாட்டு எனும் பதினெட்டு நூல்களும் சங்க இலக்கியங்கள் என வரையறுக்கப் பட்டுள்ளது. ஆக, சங்கப் பாடல்களின் வழி பெண்களின் சமூகப் பொருளாதார வளர்ச்சியை அறிய எட்டுத் தொகை மற்றும் பத்துப்பாட்டு ஆகிய பதினெட்டு நூல்களும் முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

## துணைமைச் சான்றாதாரங்கள்

தமிழின் பழமையான இலக்கண நூல் தொல்காப்பியம். அதற்கு பிற்பட்ட இலக்கண நூல்களாக நன்னூல் மற்றும் யாப்பருங்கலக் காரிகை ஆகியனவும், துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வு நூல்களும், ஆய்வுக் கட்டுரைகளும், ஆய்வேடுகளும் இரண்டாம் நிலைத் தரவுகளாக

அமைந்துள்ளன. மேலும் கல்வெட்டுகள், சுவடிகள், அகராதிகள், நிகண்டுகளும் ஆய்வின் துணைமைச் சான்றாதாரங்களாக அமைகின்றன.

### ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியங்கள் குறித்து ஆய்வு செய்த தமிழ் மற்றும் ஆங்கில ஆய்வாளர்களும், சமூகம் பொருளாதாரம் குறித்த ஆய்வாளர்களும் இவ்வாய்வேட்டின் முன்னோடிகளாக அமைகின்றனர்.

- க. கைலாசபதி எழுதிய பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்.
- பெ. மாதையன் எழுதிய சங்ககால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும.
- கார்த்திகேசு சிவதம்பி எழுதிய பண்டைத் தமிழ்ச் சமூகம்.
- நா. வானமாமலை எழுதி மார்க்சீய அழகியல்.
- ஃபிரெடரிக் எங்கல்ஸ் எழுதிய குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்.
- ராகுல சாங்கிருத்தியாயன் எழுதிய வால்காவிலிருந்து கங்கை வரை.
- க. அ. ஜோதிராணி எழுதிய சங்க இலக்கியத்தில் விளிம்பு நிலை மக்களின் வாழ்வியல் நிலை

ஆகிய நூல்கள் இவ்வாய்வுக்கு முன்னோடி நூல்களாக அமைகின்றன.

### ஆய்வின் பயன்

தொடக்க காலத் தமிழ் மக்களின் வாழ்வியல் நிலையை, பண்பாட்டுக் கூறுகளை அறிந்து அவற்றில் காணப்படும் தொழில்வழி பொருளாதார வளத்தைக் கண்டறிவதும், சங்ககாலப் பெண்களின் வரலாற்றை இளைய தலைமுறைக்குக் கொண்டு சேர்ப்பதும், சங்ககாலத்தில் தொடங்கிய பெண் அடிமை நிலையைச் சுட்டிக் காட்டுவதும் இவ்வாய்வேட்டின் பயனாக அமைகிறது.

பல்வேறு தொழில் முறைகளை விளக்குதல் வழி, சமூகப் பொருளாதார வளத்தில் பெண்ணின் ஆளுமையை விளக்கிக் கூறல் இவ்வாய்வேட்டின் பயன்பாடாகிறது. தற்கால பெண்கள் முன்னோர் வழி உணர வேண்டிய சமூகப் பொறுப்புகள், சமூகக் கடமைகள், சொத்துடைமையற்ற உரிமை மறுப்பு வடிவங்களை அறிதல் என்ற சமூகப் பயன்பாட்டு ஆய்வு நிகழ்த்தப்பட்டிருக்கின்றது. சமகால பொருளாதார நிலையில் தன்னிறைவு கொள்ளும் பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதை அறிய செய்வதும், சங்க இலக்கியத்தில் உரிமையற்ற பெண்கள் பரத்தை பிரிவு என பொருளற்றவர்களாய் ஒதுக்கப்பட்ட நிலையையும் விளக்கி, பொருளாதாரத்தில் ஆளுமையாளர்களாக இருக்க வேண்டிய தேவையையும், சமூக பொருளாதார உற்பத்தியில் அவர்களது இலக்கைச் சுட்டிக் காட்டுவதும் இவ்வாய்வேட்டின் பயனாகும்.

**ஆய்வேட்டின் கட்டமைப்பு**

***"சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்"*** என்னும் இவ்வாய்வேடு முன்னுரை நிறைவுரை நீங்கலாக ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது.

இயல் 1 - உயிர்களின் தோற்றமும் தாய்வழிச் சமூகப் பகிர்வும்

இயல் 2 - சங்க இலக்கியத்தில் பெண்களும் தொழில்களும்

இயல் 3 - சமூக பொருளாதார உற்பத்தியில் பெண்களின் பங்கு

இயல் 4 - பண்பாட்டுக் கலைகளும், பெண் கலைஞர்களும்

இயல் 5 - சங்க இலக்கியத்தில் பெண்களின் பதிவுகளும் மறுக்கப்பட்ட உரிமைகளும்

## ஆய்வுப் பகுப்பு விளக்கம்

## இயல் - 1 :

***"உயிர்களின் தோற்றமும் தாய்வழிச் சமூகப் பகிர்வும்"*** என்னும் முதல் இயலில் உயிர்களின் தோற்றம் தொடங்கி அதில் மனிதனின் பரிணாம வளர்ச்சி குறித்து விளக்கப்பட்டுள்ளது. மேலும் மனிதன், மனித சமூகமாக வாழ ஒருங்கிணைந்த நிலைகள் விளக்கப்பெற்றுள்ளன. எத்தகைய உற்பத்தி முறைகளை மேற்கொண்டு சங்ககாலச் சமூகம் வளர்ந்து வந்தது என்பது விளக்க முறைத் திறனாய்வின் வழி ஆராயப்பட்டுள்ளது.

உயிர்களின் தோற்றம் - மனிதனின் தோற்றம் - வரலாற்றுக்கு முந்தைய காலம் - காட்டுமிராண்டிக் காலம் - அநாகரிகக் காலம் - நாகரிகக் காலம் - மொழியின் தோற்றம் - சைகை மொழி - பேச்சு மொழி - எழுத்து மொழி - சங்கப் பதிவில் தாய் வழிச் சமூகம் - சங்கப் பதிவில் பெண் தலைமை - தந்தைவழிச் சமூகம் ஆகிய உட் தலைப்புகளின் கீழ் இவ்வியல் ஆராயப்பட்டுள்ளது.

## இயல் - 2 :

***"சங்க இலக்கியத்தில் பெண்களும் தொழில்களும்"*** என்னும் இரண்டாம் இயலில் சங்க காலத்தில் எந்தெந்த நிலங்களில் எந்தெந்த தொழில்களைப் பெண்கள் நேரடியாக மேற்கொண்டனர் என்பது குறித்து விரிவாக ஆராயப்பட்டுள்ளது. மேலும் அவர்கள் எந்தெந்த தொழில்களில் சிறந்து விளங்கினர். எந்தெந்த நிலங்களில் பெண்களுக்கும் உற்பத்திக்குமான தொடர்புகள் குறையத் தொடங்கின போன்ற கருத்துக்கள் இவ்வியலில் விவாதிக்கப்படுகின்றன.

சங்கப் பொருளாதாரம் - குறிஞ்சிப் பொருளாதாரம் - உற்பத்தி முறை - மக்கள் - கருவிகள் - உணவுகள் - முல்லைப் பொருளாதாரம் - உற்பத்தி முறை - கால்நடை வளர்ப்பு - விவசாயம் - மக்கள் - கருவிகள் - உணவுகள் - மருதப் பொருளாதாரம் - வேளாண்மை - மக்கள் - கருவிகள் - உணவுகள் - நெய்தல் பொருளாதாரம் - மக்கள் -

கருவிகள் - உணவுகள் - சங்கம் உணவு சேகரித்தலில் பெண் - வேளாண்மையில் பெண் - காட்டெரிப்பு - உழுதல் - கலப்பை - விதைத்தல் - நாற்று நடுதல் - தினைப்புனம் காத்தல் - களையெடுத்தல் - அறுவடை - கால்நடை வளர்ப்பில் பெண் - வீட்டுப் பணிகளில் பெண் - தானியங்களைச் சீர் செய்தல் - உணவு சமைத்தலில் பெண்கள் - மோர் கடைதல் - புலைத்தி - அரண்மனையில் பெண்கள் - ஏவல் மகளிர் - பாசறைப் பெண்டிர் - தோழியர் - வணிகத்தில் பெண் - மோர் விற்றல் - உப்பு விற்றல் - மீன் விற்றல் - கள் உற்பத்தி மற்றும் விற்பனை - உணவுப் பண்டம் விற்றல் - நெசவு - புழங்கு பொருட்கள் தயாரித்தல் - பொதுப் பெயர்களில் மறைந்துள்ள பெண்கள் என்னும் உட் தலைப்புகளில் இவ்வியல் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் - 3 :**

***"சமூக பொருளாதார உற்பத்தியில் பெண்களின் பங்கு"*** என்னும் மூன்றாம் இயலில் நேரடியான உடல் உழைப்பு உற்பத்தி நடவடிக்கைகள் அன்றி வேறு வகைகளில் அவர்கள் உற்பத்தி நடவடிக்கைகளுக்கு உறுதுணையாக இருந்து இயங்கியுள்ள விதம் விளக்கப்பட்டுள்ளது. மேலும் சமூகத்தில் சம அளவில் இருந்த பெண்கள், உற்பத்தி நடவடிக்கையில் இருந்து விலக்கம் பெற்ற காலகட்டம் குறித்தும் இவ்வியல் ஆராயப்பட்டுள்ளது.

அகமும் புறமும் - சங்ககால மகளிர் நிலை - களவில் தோழி - அறத்தொடு நிற்றல் - கற்பில் தோழி - களவில் செவிலி - கற்பில் செவிலி - குழந்தை வளர்த்தலில் செவிலி - குடும்ப பொறுப்பு - திருமணம் - புனர் உற்பத்தி - கணவரைப் பேணுதல் - சுற்றம் ஓம்பல் - விருந்தோம்பல் - ஆற்றியிருத்தல் - வளமையின் குறியீடு - வழிபாட்டில் பெண்கள் - மந்திரச் சடங்குகளில் பெண்கள் - போர் - வீரமூட்டுதல் - நடுகல் - நிலப்பரப்பு விரிவாக்கத்தில் பெண்கள் என்னும் உட் தலைப்புகளோடு இந்த இயல் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் - 4 :**

***"பண்பாட்டுக் கலைகளும் பெண் கலைஞர்களும்"*** என்னும் நான்காம் இயலில் சங்க காலத்தில் காணப்பட்ட பெண் கலைஞர்கள் மற்றும் அவர்கள் மேற்கொண்ட கலை பண்பாட்டு நடவடிக்கைகளைச் சங்க இலக்கியப் பாடல்கள் மூலம் ஆராய்கிறது. மேலும் சங்ககாலக் கலை வளர்ச்சியும் அதில் பெண்களின் பங்களிப்பும் குறிப்பிடத்தக்க அளவில் இருந்துள்ளதையும் இவ்வியல் நிறுவுகிறது. பெண் கலைஞர்களின் தனித்துவம் இவ்வியலில் இனங்காணப்பட்டுள்ளது.

பண்பாடு - பண்பாட்டு வரையறைகள் - ஆடை - அணிகலன்கள் - இலக்கியங்கள் - சடங்கு வழிபாடு சார் கலைகள் - போர் சார் கலைகள் - மகிழ்ச்சி சார் கலைகள் - தொழில் சார் கலைகள் - பெண் கலைஞர்கள் - விறலியர் - வெறியயர்தல் - பெண்பாற் புலவர்கள் - கலை சார் பொருட்கள் ஆகிய உட் தலைப்புகளின் கீழ் நான்காவது இயல் ஆராயப்பட்டுள்ளது.

**இயல் - 5 :**

***"சங்க இலக்கியத்தில் பெண்களின் பதிவுகளும் மறுக்கப்பட்ட உரிமைகளும்"*** என்னும் ஐந்தாம் இயலில் ஒவ்வொரு நிலத்திலும் பெண்கள் எவ்வகையான உழைப்பு உற்பத்தி காரணிகளாக இருந்தனர் என்பது சங்கப்பாடல்களின் கூற்றுகள் வழி ஆராயப்பட்டுள்ளது. தொடக்க காலத்தில் பெண் கலைஞர்கள் உருவாகிய சமூகச் சூழல், அவர்கள் இடபெயர்வு சமூகமாக மாறிய சூழல், பின் வறுமை எய்திய சமூகக் சூழல், இழி நிலை அடைந்த சூழல் என எல்லா சமூக சூழல்களும் சங்க இலக்கியப் பாத்திரங்களின் கூற்றுகள் மூலம் ஆராயப்பட்டுள்ளன.

கூட்டு வாழ்க்கையில் பெண் பதிவுகள் - தோழி கூற்றில் வரைவு - தலைவி கூற்றில் தலைவன் சிறப்பு - தலைவன் கூற்றில் தலைமகள் இயல்பு - உடைமைச் சமூகத் தோற்றத்தில் பெண் பதிவுகள் - தோழி மற்றும் தலைவி கூற்றில் ஏறுதழுவல் - தோழி கூற்றில் பிரிவாற்றல் - தலைவி கூற்றில் பிரிவுத் துயர் - தலைவன் கூற்றில் பிரிவுத் துயர் -

தலைமக்கள் கூற்றில் மிக்கக் காமத்து மிடல் – தலைவி கூற்றில் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் – உடைமைச் சமூகத்தில் பெண் பதிவுகள் – தலைவி கூற்றில் பரத்தமை கடிதல் – தலைவி கூற்றில் பாணன் – தோழி கூற்றில் பரத்தமை கடிதல் – பாணர் கூற்றில் பரிசில் நீட்டித்தல் – பேரரசு காலத்தில் பெண் – முது பெண்டிர் கூற்றில் அரசியை தேற்றுதல் – புலவர் கூற்றில் பாரி மகளிர் – புலவர் கூற்றில் மறமகளிர் – மறமகள் கூற்றில் மரணத்தின் துயரம் – கைம்மை நோன்பு – உடன்கட்டை – பெண்களுக்கு மறுக்கப்பட்ட அக வெளிப்பாடுகளும் மீறல்களும் – விறலி பரத்தையாக மாறுதல் ஆகிய உட்தலைப்புகளின் கீழ் இவ்வியல் ஆராயப்பட்டுள்ளது.

**முடிவுரை**

ஒவ்வொரு இயலிலும் பெறப்பட்ட ஆய்வு முடிவுகளை இப்பகுதி நிறைவுரையாக *சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகபொருளாதார வளர்ச்சியும் பெண்களும்* என்ற ஆய்வின் வழி அளிக்கிறது. பெண்கள் நூற்றுக்கணக்கான தொழிலாளர்களாக வாழ்ந்து, சமூகத்தின் பொருள் வளமைக்குப் பெரும் பங்காற்றியுள்ளனர் என்ற தரவுகளின் தொகுப்பை இவ்வாய்வேடு முன் வைத்துள்ளது. தமிழ் இலக்கிய வரலாற்றில் பெண்கள் சங்க காலம் தொட்டு இயங்கி வருகின்றனர். ஒப்பீட்டளவில் ஆண்களைவிடக் குறைவான பெண் புலவர்கள் இருந்திருப்பினும், தற்கால நிலையுடன் ஒப்பிடும் போது அது குறிப்பிடத் தகுந்த வளர்ச்சி நிலை என்று கொள்ளமுடிகிறது. இருப்பினும் பொருளாதார உற்பத்தியின் வளர்ச்சி நிலை இலக்கிய வளர்ச்சிக்கு இணையாக இல்லை என்ற உண்மையை இவ்வாய்வு நிறுவ முனைகிறது.

சங்க இலக்கியப் பதிவுகளின் வழியாக வேட்டைச் சமூகம் தொடங்கி எல்லா நிலங்களிலும் பெண்கள் பொருளாதார உற்பத்தியில், நூற்கணக்கான கைத்தொழில் சார்ந்த பங்களிப்பை ஆண்களுக்கு இணையாக சமநிலையில் அளித்துள்ளமை அறியமுடிகிறது. முல்லை நிலத்து மேய்ச்சல் தொழில்சார் கால்நடை இன உற்பத்தியின் பெருக்கம் உடைமைச் சமூகத்தை தோற்றுவித்திருந்தாலும் மருதநிலம் ‘பரத்தை’

என்ற உடைமையற்ற இழிவு நிலை எய்திய பெண் சமூகத்தை உருவாக்கி இருந்ததை ஆய்ந்தறிய முடிகிறது. மருதநில பொருளாதார உற்பத்தி முறை பெண்களைப் பொருளுடைமை அற்றவர்களாகவும் சமஉரிமை அற்றவர்களாகவும் ஆக்கியிருக்கிறது என்பதை ஈண்டு ஆய்ந்தறிய துணிகிறது.

இறுதி பகுதியில் துணைநூற்பட்டியலும், பின்னிணைப்பு பகுதியில் சங்கப் பெண்பாற் புலவர்களின் பாடல் எண்களும், அருஞ்சொற் பொருள் விளக்கங்களும், சங்க கால இசைக்கருவி மற்றும் பெண்பாற் தொழில்கள் தொடர்பான புகைப்படங்களும் இணைக்கப்படுகின்றன. மேலும் மேலாய்வுக் களங்களும் சுட்டப்பட்டுள்ளன.

# இயல் 1

## உயிர்களின் தோற்றமும் தாய்வழிச் சமூகப் பகிர்வும்

சங்ககாலத்தில் வாய்மொழி இலக்கியங்கள் பல இருந்திருப்பினும், புலவர்களால் எழுதப்பெற்ற நூல்களின் தொகுதியாக கிடைக்கப்பெறும் முதல் இலக்கியம் சங்க இலக்கியமாகும். மொழி, இலக்கியம், பண்பாடு, கலை என எல்லா நிலைகளிலும் தமிழகப் பரப்பு சிறப்புற்று இருந்துள்ளது என்பதைப் புலவர்கள் பாடல்களில் பொதிந்து வைத்துள்ளனர். ஒரு சமூகத்தின் சிறப்புக்கும் வளர்ச்சிக்கும் அடிப்படையாக அமைவது அச்சமூகத்தின் உற்பத்தி உறவாகும். மனிதகுல வரலாற்றில் காட்டுமிராண்டி காலம் தொட்டு நாகரிக காலம் வரையிலான நிகழ்வுப் போக்குகள் அமைந்த விதத்தைப் பல தொல்லியல் அறிஞர்கள், சமூக விஞ்ஞானிகள், இயற்பியல் மற்றும் உயிரியல் அறிஞர்கள் ஆய்வு செய்துள்ளனர்.

சங்ககால சமூகத்தின் சிறப்புக்குத் *தாய்வழிச் சமூகத் தலைமைத்துவமும், தலைவன் தலைவி என்ற பொதுப் பாண்மையும்,* ஐவகை நிலப் பகுப்பின் அடிப்படையில அமைந்த *உழைப்பும், தொழில் வகைப் பிரிவும்* என குறிப்பிட்டுச் சொல்லலாம். மனிதகுலத்தின் வளர்ச்சிப் போக்குத் தமிழகத்தில் எங்ஙனம் நிகழ்ந்திருக்கும் என்பதை அறிய சங்க இலகக்கியத்தையும் அச்சமூகத்தையும் மேலை அறிஞர்கள் துணை கொண்டு இவ்வியல் ஆராய்கிறது.

மனிதனின் தொடக்கக்கால வாழ்வு குறித்த நிகழ்வுப் போக்கை உலகின் பல்வேறு பகுதிகளில் இருந்து கண்டெடுக்கப்பட்ட தொல்லியல் சான்றுகளின் அடிப்படையில் அறிஞர்கள் உருவாக்கியுள்ளனர். அத்தரவுகளின் அடிப்படையில் சங்கச் சமூகத்தை ஆராய்வதன் வழி தமிழ்ச் சமூகத்தின் படிநிலை வளர்ச்சி குறித்தப் பொதுக் கண்ணோட்டத்தை உருவாக்க முடியும். சங்ககால மனிதனாக இருந்தாலும் தற்கால மனிதனாக இருந்தாலும் அவன் உலக மாந்தரின் வழித்தோன்றல் என்னும் நிலையில், உயிரின் தோற்றம் தொடங்கி மனிதத் தோற்றம், சமூக உருவாக்கம், அதன் படிநிலைகளில் சங்க

காலத்தின் இருப்பு, அதன் இருப்பில் இயங்கிய பலவகைப் பொருளாதார முறைகள் போன்றவற்றை ஆய்வு செய்வது அக்காலச் சமூகம் குறித்த ஆழமான புரிதலை உருவாக்கும்.

**உயிர்களின் தோற்றம்**

சுற்றிக் கொண்டிருக்கும் சூரியனில் இருந்து பிரிந்த ஒரு நெருப்புப் பிழம்பு குயவனின் சுற்றிக் கொண்டிருக்கும் சக்கரத்தில் இருந்து பிய்த்தெரியப்பட்ட மட்பாண்டத்தைப் போல சுற்றிக் கொண்டே இருந்தது. பெரும் கால இடைவெளியில் இந்தப் பிழம்பு பூமியாக உருமாறிக் கொண்டிருந்தது. அதன் மேற்பரப்பிலும் உட்பரப்பிலும் பல வேதியல் மற்றும் இயற்பியல் மாற்றங்கள் ஏற்பட்டு வந்துள்ளன. ஒரு மாபெரும் கால இடைவெளியில் வேதிப் பொருட்களுக்கு இடையில் ஏற்பட்ட இயற்பியல் மாற்றங்களால் உயிர்களின் தோற்றம் உருப்பெற்றது. உயிரிகளின் தோற்றத்தை எளிமையாக புரிந்து கொள்ளும் வகையில் அஜய் கன்சால் பின்வருமாறு விளக்குகிறார்.

*கடலில் எண்ணற்ற வேதியல் மாற்றங்கள் சுமார் ஒரு பில்லியன் ஆண்டுகளுக்கு எல்லையற்று நிகழ்ந்து கொண்டிருந்தன. இப்படிப்பட்ட வேதியல் மாற்றங்கள் எல்லையற்று நிகழ்ந்து கொண்டிருந்த போது, பச்சையம், நீயூக்ளிக் அமிலம் போன்றவை ஒரு விபத்தாகவே தோன்றின. முதலில் இந்த மந்திரம் போன்ற சேர்மங்கள் சில இடங்களிலேயே தோன்றியிருக்க வேண்டும். ஒன்று ஒருமுறை தோன்றியதும், நியூக்ளிக் அமிலத்தின் ஒவ்வொரு அணுத்திண்மமும் அநேகமாக ஒவ்வொரு மணிநேரத்திலும் சுமார் ஒரு பில்லியன் ஆண்டுகளுக்குப் பல்கிப் பெருகியிருக்க வேண்டும். நீலப்பச்சை பாசி ஒரு சிக்கலான ஒரு செல் உயிரியாக உருவாக சுமார் ஒரு பில்லியன் ஆண்டுகளை எடுத்துக் கொண்டது*[1]

அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, ப. 191.

என ஒரு செல் உயிர்களின் தோற்றம் குறித்து விளக்குகிறார். இதற்கான ஆதாரங்களை விஞ்ஞானிகள் கண்டெடுத்துள்ளனர். இங்ஙனம் உருவான ஒரு செல் உயிரிகள் வளர்ச்சியடைந்து இருவகை உயிர்களாகப் பிரிந்தன. ஒன்று தமது தேவைகளைத் தாமே நிறைவேற்றிக் கொள்ளும் பச்சயம் கொண்ட உயிர்கள். இரண்டாவது ஒட்டுண்ணிகள். இவைகளால் தாமாகவே உணவு தயாரிக்க முடியாது, ஆகையால் பச்சயம் கொண்ட உயிர்களிடம் உணவை எடுத்துக் கொண்டு விலங்குளாக வளர தலைபட்டதை அறிவியல் உலகம் வெளிப்படுத்தி உள்ளதை அறியமுடிகிறது. இந்த விஞ்ஞான உண்மையைக் கண்டறிய ஆய்வாளர்கள் பெரும் முயற்சிகளை மேற்கொண்டனர். பல சிக்கலான சவால்களைச் சந்தித்தனர். விஞ்ஞானிகள் மேற்கொண்ட கடின ஆய்வுகளைக் குறித்து பின்வரும் கூற்று விளக்குகிறது.

> உயிர் வாழ்பவற்றிடையே விஞ்ஞானிகளால் இந்த மாற்றத்தைக் காணமுடியாது. ஏனெனில் ஒவ்வொரு மாற்றத்துக்கும் பல்லாயிரம் ஆண்டுகள் பிடிக்கும். மிருகங்களின் தோற்றத்தை அறிய அவர்கள் புதைபடிவ ஆராய்ச்சியில் இறங்கி, உலகம் முழுவதும் வரலாற்றுக்கு முந்தைய புதை படிவங்களை ஆராய்ந்தனர். இவற்றின் காலத்தை அறிய கார்பன் வெளியீட்டை கணக்கிடுதல் போன்ற பல நுணுக்கங்களை அவர்கள் கண்டு பிடித்தனர். இவற்றை வைத்து, அந்த புதைப் படிவங்கள் பூமியில் உயிருடன் இருந்த காலத்தை அவர்களால் நிர்ணயிக்க முடிந்தது.[2]

அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, ப. 187.

இப்படி பல அறிவியல் அறிஞர்களின் கடின உழைப்பாலும் ஆர்வம் மிகுந்த ஈடுபாட்டாலும் பல அரிய வியக்கத்தக்க உண்மைகள் வெளிப்பட்டு வந்துள்ளன. ஒரு செல் உயிர்கள் ஒரு செல் உயிரினக் குழுக்களாகவும், பல செல்களை உடைய உயிரினங்களாகவும் தோற்றம் பெற்றன. இவற்றில் இருந்து தொடக்கால உயிரினங்களான படர்வகை செடிகளும், தாடையற்ற மீன்களும், சிறகுகளில்லாத பூச்சிகளும், தவளைகளும் தோன்றின. சுமார் நான்கு மில்லியன் ஆண்டுகளுக்கு

முற்பட்ட புதை படிவங்களை விஞ்ஞானிகள் கண்டெடுத்துள்ளனர். இங்ஙனம் பெரும் போராட்டத்திற்குப் பிறகு உயிர்களின் தோற்றம் குறித்து தற்கால அறிவியல் அறிஞர்கள் மற்றும் தொல்லியல் அறிஞர்கள் பல தகவல்களைக் கண்டறிந்துள்ளமையைக் காணமுடிகிறது.

## மனிதனின் தோற்றம்

மனிதத் தோற்றம் சுமார் இரண்டு இலட்சத்திலிருந்து நான்கு லட்சம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது. இக்காலத்தைய மூதாதையரை குரங்கு மனிதன் என்கிறது நவீன அறிவியல். ‘தக்கன தப்பி பிழைக்கும்’ என்னும் ‘டார்வின்’ கோட்பாட்டின் படி மனித இனம் உள்ளிட்ட அனைத்து உயிர்களும் பரிணாம வளர்ச்சி அடைந்துள்ளன என்பதை அறிவியல் நிருவியுள்ளது. இப்பரிணாம வளர்ச்சியின் படிநிலையில் ஏற்பட்ட சின்ன மாற்றத்திற்கும் பல ஆயிரம் தலைமுறைகள் தேவைப்பட்டன. இவ்விதி எல்லா உயிரினங்களின் வளர்ச்சிக்கும் பொதுவானது என்பதைப் பினவரும் கூற்றின் மூலம் அறியலாம்.

> இது மெதுவாக நடந்த நிகழ்வு. பல்வேறு மனித உறுப்புகளின் அளவு உட்பட அநேகமாக உடல் உருவாக்கத்தின் ஒவ்வொரு கட்டத்துக்கும் ஆதாரபூர்வமான சான்றுகளை விஞ்ஞானிகள் வைத்துள்ளனர். மனோ வளர்ச்சியைப் பொறுத்தவரையில் வரலாற்றுக்கு முந்தைய மக்களின் சிந்தனை வளர்ச்சியை அவர்களது கலை உருவாக்கங்களின் மூலம் குறிப்பாக அறிந்துள்ளனர். வரலாற்றுக்கு முந்தைய மனத்தின் போக்கை அறிய அவர்கள் பல, தொன்மக்களின் சிந்தனை முறைகளிலிருந்து சான்றுகளைப் பெற்றுள்ளனர்.[3]

அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை,பக்.193-194.

உயிரியல் தன்மையிலும் சமூக முறையிலும் மனிதனின் தோற்றத்தை ஆங்காங்கே அறிவியல் அறிஞர்கள் விளக்கி வந்துள்ளனர். அவர்களுள்

`எங்கல்ஸ்' குறிப்பிடத்தக்கவர். மனிதக் குரங்குகள் என அழைக்கப்பட்ட மனித மூதாதையர் தட்டையான நிலப்பரப்பில் நடக்க வேண்டி இருந்த போது அவர்கள் கைகளைப் பயன்படுத்தவில்லை. நிமிர்ந்த நடை மனிதக் குரங்கு மனிதனாக மாறியதற்கு ஒரு முக்கியமான காரணியாகும். மேலும் நிமிர்ந்த நடை தெளிவான பார்வையை அவர்களுக்கு வழங்கியது. நிமிர்ந்த நடை கொண்ட இவர்களின் கை சுதந்திரம் அடைந்தது. அச்சுதந்திரத்தைக் கொண்டு கைகள் கருவிகளைப் பிடித்து உணவு சேகரிக்கத் தொடங்கின. இவ்வகையில் குரங்கை மனிதனாக மாற்றியத்தில் உழைப்புக்கு பெரும் பங்கு உண்டென்று நிறுவியுள்ளார் எங்கல்ஸ்.

> உழைப்பு மனிதனையே சிருஷ்டித்தது என்று நாம் கூறவேண்டிய அளவுக்கு அது மானுட வாழ்வு முழுவதற்கும் முதன்மையான அடிப்படை நிபந்தனையாக உள்ளது.[4]

எங்கல்ஸ், மனிதக் குரங்கு மனிதனாக மாறிய இடைநிலைப் படியில் உழைப்பின் பாத்திரம், ப.3.

தொடக்க கால மனிதனுக்குக் `கை' என்பது உழைப்புக்கான உறுப்பாக மூலதனமாக மாறியது. அதே பொழுதில் உழைப்பின் விளை பொருளாக அக்கைகள் வளர்ச்சி கொண்டன. கையின் வளர்ச்சியோடு இதர உறுப்புகளும் வளர்ச்சி கண்டன. குறிப்பாக மூளை பெரும் வளர்ச்சி அடைந்தது. மேலும் இவர்களிடம் அந்தக் காலத்தில் சமூக உணர்வு தோன்றியிருந்தது எனவும் ஒரு தெளிவில்லாத பேச்சு மொழி இருந்தது எனவும் எங்கல்ஸ் விளக்குகிறார். மனித மூதாதையரின் இவ்வொட்டுமொத்த வளர்ச்சிக்கும் அடிப்படையாக அவர்கள் மேற்கொண்ட உழைப்பு அமைந்ததை அவர் விளக்குகிறார்.

மனிதன் தன் உழைப்பின் உதவியால் தன்சூழலோடு போராடி குரங்காக இருந்த தன்னை மனிதன் என்னும் நிலைக்கு உயர்த்தினான். `தனி மரம் தோப்பாகாது' என்பது போல இவ் வளர்ச்சி ஒரு தனிப்பட்ட மனிதனால் உருவானதல்ல என்பதையும், கூட்டு மனிதனால் இயன்றது என்பதையும் அறியமுடிகிறது. இவ்வேளையில் பொதுவாகவும்,

குறிப்பாகவும் மனிதன் என்ற பொதுச் சொல்லுக்குள் பெண் இருப்பதை அறிவோம். பெண் மூலதனக் கருவாக இருக்கிறாள் என்பதையும், மனிதன் உருவாக முதல் உற்பத்திக் கருவி எனும் இடத்தில் முதல் மூலதனமாக இருக்கிறாள் என்பதையும் அறிந்து கொள்கிறோம்.

### வரலாற்றுக்கு முந்தைய காலம்

எழுதப்பட்ட வரலாறுகள் மூலமாக அறியவரும் மனிதகுல வரலாற்றை வரலாற்று காலம் என்றும், எழுதப்பட்ட வரலாற்றுக்கு முன் வாழ்ந்த மனிதகுல வரலாற்றை வரலாற்றுக்கு முந்திய காலம் எனவும் அறிஞர்கள் குறித்துள்ளனர். வரலாற்றுக்கு முந்திய காலம் எங்கல்ஸ் கூற்றுப்படி மூன்று கால கட்டங்களைக் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது. மனித சமூக வரலாற்றில் முதலாவது மனித இனத்தின் குழந்தைப் பருவமான காட்டுமிராண்டி காலகட்டம், அதாவது குகைகளில் வாழ்ந்த காலகட்டம். இரண்டாவது காலகட்டம் குழந்தை, கையை ஊன்றி எழுவதும் விழுவதுமாக வளர்வது போன்று மனித இனம் கையைப் பயன்படுத்தி சவால்கள் நிறைந்த எதிர்ககாலத்தை நோக்கி வளர்ந்த அநாககரிக காலகட்டம் அதாவது குடும்பமாக வாழும் காலகட்டம். மூன்றாவது காலகட்டம் குழந்தை தன்னம்பிக்கையும் துடிப்பும் கொண்ட இளைஞனாக உருவெடுப்பது போன்று மனித குலம் பல சவால்களைச் சந்தித்து கூட்டுழைப்பின் உறுதியையும் எழுச்சி உணர்வையும் அடைந்த நாகரிக காலகட்டமாகும். அதாவது பொருளாதார வளர்ச்சிக்கான உற்பத்திக் கருவிகள் வளர்ந்த காலம். வணிகம், அரசு, உருவாக்கப்பட்ட காலமாகும்.

### காட்டுமிராண்டி காலம்

அதிக அளவில் மரத்தை வசிப்பிடமாகவும் பெயரளவு தரையை இருப்பிடமாகவும் கொண்ட குரங்குகளை மனித இனத்தின் குழந்தைப் பருவம் என வர்ணிக்கிறார் எங்கல்ஸ். அத்தகைய பருவத்தில் ஓரளவு ஒழுங்கான ஓசை ஒலிப்பு கொண்ட பேச்சை உருவாக்கியிருந்தனர் அம்மக்கள். இதனை மொழி எனக் கூற இயலாது. இவர்களது உணவுத் தேவையைக் காடுகளால் நிறைவேற்ற முடியாத நிலையில் இவர்கள்

நீர்நிலைகளை நோக்கி இடம் பெயர்ந்தனர். மீன் இனங்களை உண்ணப் பழகினர். நீர்நிலைகளின் வழித்தடங்களைப் பின்பற்றி நெடும் பயணங்களை மேற்கொண்டனர். இக்காலகட்டத்து மனிதனின் புதை படிவங்கள் பரவலாக உலகின் எல்லா பகுதிகளிலும் கிடைத்துள்ளதைக் காணமுடிகிறது. இக்காலகட்டத்தைப் பின்வருமாறு விளக்குகிறார்.

> மக்கள் ஐம்பது அல்லது நூறு பேர் கொண்ட குழுக்களாக, நாடோடிகளாக வாழ்ந்தனர். பெரும்பாலும் நெருப்பையும், கற்கருவிகளையும் பயன்படுத்தினர். அவர்கள் இன்னும் பயிரிடத் தொடங்கவில்லை. பெரும்பாலும் வேட்டையாடியும் காட்டுக் கனிகளைச் சேகரித்தும் வாழ்க்கை நடத்தினர். மனித குழுக்கள் எப்போதும் நல்ல கனிகளும் மிருகங்களும் கிடைக்கும் இடங்களைத் தேடின. அவர்கள் இன்னும் மொழியையும், உடையையும், நெறிகளையும், மதத்தையும் கண்டுபிடிக்கவில்லை. ஏராளமான காலத்துக்கு மனித இனம் இப்படிப்பட்ட வாழ்க்கை முறையையே கடைப்பிடித்தது. இந்தக் காலகட்டத்தில் வாழ்ந்த மக்கள் ஏற்கனவே கற்பனைத் திறனை வளர்த்துக் கொண்டுவிட்டதாக மனிதவியலாளர்கள் நம்புகின்றனர்.[5]

அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, ப.16.

இத்தகைய நாடோடி காட்டுமிராண்டி மக்களிடம் 'மொழி' என்னும் முழுமையான பொருளில் மொழி உருவாகவில்லை எனினும் ஒரு சீரான பேச்சு உருவாகிவிட்டிருந்ததை எங்கல்ஸ் சுட்டுகிறார். இச்சிறிய அளவிலான பேச்சு ஒலிக்கூறு அவர்களுக்குள் ஒருவித கூட்டுவாழ்க்கை உருவாகிவிட்டதைச் சுட்டிச் செல்கிறது. இவர்களது பேச்சு கூட்டு வாழ்வை ஒருங்கிணைத்தது. ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்கு இவர்கள் இடம் பெயர்ந்து செல்ல வேண்டிய தேவை இருந்ததால் இவர்களின் வாழ்க்கை நிலை அடுத்த கட்டத்திற்கு முன்னேற முடிந்தது.

காட்டுமிராண்டி காலகட்டத்தின் கடைசி காலத்தில் இவர்கள் வேட்டைச் சமூகமாக, நாடோடிச் சமூகமாக வளர்ச்சி பெற்றனர்.

இவர்களிடம் உற்பத்திக் கருவிகளாக, பொருளீட்டும் கூர்மையான வில்லும், அம்பும் கண்டுபிடிக்கப்பட்டிருந்தன. இக்காலகட்டத்தில்தான் அவர்களின் தேவைக்கு அடிப்படையான தொடக்ககால பொருட்கள் உருவாக்கப்பட்டன.

மரக் கலயங்கள், நாரைக் கொண்டு கைகளால் துணி நெய்தல், நாணல் புல் கூடை முடைதல், பட்டைத் தீட்டப்பட்ட கற்கருவிகள், நெருப்பு, கோடரி, ஓடம் போன்றவை காலத் தேவைபடி உருவாக்கப்பட்டன என எங்கல்ஸ் கூறுகிறார். மேலும் இக்காலத்திலேயே வீடு கட்டுவதற்கான மரப் பலகைகள், சிந்தனைக்கு உட்பட்ட வடிவங்களாக உணவுப் பொருள் சேமிக்கும் பொருட்கள் செய்யப்பட்டுள்ளன என்பதையும் ஊடவே இணைத்துப் பார்க்க வேண்டிய தேவையாகிறது. இக்கால மக்களின் உறுதியான ஆயுதமாக வில்லும் அம்பும் அமைந்தது மனித குல வரலாற்றில் சிறப்பான நிலையாக அமைந்ததை அறியலாம்.

**அநாகரிக காலம்**

பல இடர்களுக்குப் பின் அநாகரிக நிலைக்குத் தொடக்க கால மனித இனம் வளர்ந்தது. மட்பாண்டங்களைத் தயாரித்தல் இக்கட்டத்தின் முக்கியமான தொடக்கப்பணியாகும். இக்கட்டம் வரை நிலப்பரப்பு வேறுபாடின்றி எல்லா இடத்திலும், மனிதகுலம் ஒரே மாதிரியாக இருந்தது. ஆனால் இக்காலகட்டத்துக்குப் பிறகு மனிதன் *விலங்குகளைப் பழக்குதல், வளர்த்தல், பயிரிடுதல்* போன்ற செயல்களைச் செய்ய வேண்டியிருந்தது. இந்நிலை பெரிதும் நிலப்பரப்பைச் சார்ந்ததாக இருந்தது. எல்லா இடங்களிலும் பழக்கக்கூடிய எல்லா விலங்குகளும், பயிரிடக்கூடிய எல்லா தானியங்களும் கிடைக்கப் பெறவில்லை. அந்தந்த நிலப்பரப்புக்குத் தக்க விலங்கினங்களும் பயிர் வகைகளும் அமைந்ததால் இக்கால கட்டத்துக்குப் பிந்தைய மக்களின் வளர்ச்சியில் வேறுபாடு காணப்பட்டது. அதனால் தான் மருதநிலத்தை உருவாக்கிடும் தேவை தோன்றியது. நன்செய் நிலமும் உருவாக்கப்பட்டது. இது அநாகரிக காலத்தின்

தொடக்கமாகும். இதன் அடுத்த கட்டத்தில் உருவாகிய முக்கிய வளர்ச்சியை எங்கல்ஸ் பின்வருமாறு விளக்குகிறார்.

> கிழக்கு மண்டலத்தில் மிருகங்களைப் பழக்குவதிலிருந்து இது தொடங்குகிறது. மேற்குக் கண்டத்தில் உணவுக்குரிய பயிர்களை நீர்ப்பாசனத்தின் மூலம் சாகுபடி செய்தல், அடோபுகளையும் (சூரிய வெப்பத்தில் காய்ந்த செங்கற்கள்) கல்லையும் உபயோகித்து கட்டடங்கள் கட்டுதல் ஆகியவற்றிலிருந்து இது தொடங்கியது.[6]

எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.33.

இத்தகைய வளர்ச்சி எல்லா இடங்களிலும் ஒன்று போல அமையவில்லை. ஆங்காங்கே நில அமைப்புக்கும் தட்பவெப்ப நிலைக்கும் ஏற்ப வளர்ச்சியில் ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டன. குறிப்பாக பூமியின் கிழக்குப் பகுதியில் இக்காலகட்டத்தில் பாலும் இறைச்சியும் தரக்கூடிய மிருகங்களை பழக்கினர் மக்கள். கால்நடை வளர்ப்பு மந்தை என்னும் அளவுக்குப் பெரிய அளவில் உருவாக்கப்பட்டுவிட்டன. இந்த மேய்ச்சல் பொருளாதாரம் இக்காலகட்டத்தில் இந்தியாவில் காணப்பட்டதாகவும் சுட்டுகிறார் எங்கல்ஸ்.

மேய்ச்சலில் பெரிதும் ஈடுபட்டிருந்த ஆரியர் மற்றும் செமைட்டுகள் என்கிற மக்கள் இனமும் கால்நடைகளுக்குத் தீவனம் அளிக்கும் காரணத்திற்காக பயிரிட்டதைக் காணமுடிகிறது. பின்னர் மனிதனுக்குப் பயன்படும் வகையில் பயிரிடுதல் நடைபெற்றுள்ளது. இக்காலகட்டத்தில் இறைச்சி, பால் போன்றவை கொடுத்த வளர்ச்சி மனித மூளையில் முக்கிய முன்னேற்றத்தைக் கொடுத்துள்ளதையும் அறியமுடிகிறது. கால்நடைகளின் பயன் பொருளாதார வளர்ச்சியில் குறிப்பிடத் தகுந்தது என்பதை அறிவோம்.

### நாகரிக காலம்

இக்காலத்தைத் தொகுத்துக் கூறினால் *நாகரிக காலத்தில்தான் இரும்பின் பயன்பாடு கண்டறியப்பட்டுள்ளது.* எழுத்துக்களைக் கண்டுபிடித்தல், இரும்பு *கலப்பை, மண்வெட்டி, கோடரி* போன்றவை

உருவாக்கப்பட்டு பயன்டுத்தப்பட்டன. இவை காடுகளை வெட்டி அழித்து விவசாயம் செய்ய உதவின. இதற்கு முந்தைய காலகட்டங்கள் அனைத்திலும் மனித சமூகம் அடைந்த அனைத்து முன்னேற்றத்தைக் காட்டிலும் இந்த நாகரிக காலகட்டத்தில் அதிகப்படியான வளர்ச்சியை அடைந்தனர். இதனைப் பின்வரும் கூற்றின் மூலம் விரிவாக அறியலாம்.

> இக்கட்டத்தில் உற்பத்தியின் முன்னேற்றம் முந்திய கட்டங்கள் அனைத்தின் மொத்த உற்பத்தியைக் காட்டிலும் அதிகமாகும். வீர யுகத்தைச் சேர்ந்த கிரேக்கர்களும், ரோமாபுரி நிறுவப்படுவதற்குச் சற்று முன்பிருந்த இத்தாலிய இனக்குழுக்களும், டாசிட்டஸ் காலத்திய ஜெர்மானியர்களும், வைக்கிங்குகளின் காலத்திய நார்மன்களும் இக்கட்டத்தைச் சேர்ந்தவர்கள்.[7]

எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.36.

*சங்ககாலத்தைச் சேர்ந்த தமிழர்களும் இக்கட்டத்தைச் சேர்ந்தோர் என்பதை ஊகிக்கலாம்.* சங்க காலத்தில் குறிப்பிடப்படுவது போன்று காடுகளை அழித்து வேளாண்மை செய்வதும் இக்கால கட்டத்தில் பல இடங்களில் உருவாகியுள்ளதை சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. கிரேக்கம், ரோமாபுரி, ஜெர்மன் ஆகிய பிரதேசங்களிலும் இவ்வளர்ச்சி முன் பின்னாக வளர்ந்து வந்துள்ளன. வேளாண்மை என்பது பல வகைகளில் விரிவடைந்த தொழிலாகும். இந்தத் தொழிலுடன் *இரும்புக் கருவிகள், மாவு அரைக்கும் திரிகை, துருத்திகள், குயவனின் சக்கரம், எண்ணெய் மற்றும் மது தாயரித்தல், உலோக தயாரிப்பு ஒரு கலையாக வளர்தல், பார வண்டிகள், தேர்கள், கப்பல் கட்டுதல், மதில் சுவர்களுடன் கூடிய மாளிகைகள்* போன்றவை இக்காலத்தில் படிபப்படியாக உருவாகி வளர்ந்துள்ளதைக் காணமுடிகிறது. இக்காலகட்டத்தில் தமிழகத்தில் உழவு மற்றும் நெசவுத் தொழிலோடு உருவாக்கப்பட்ட பலவகைப் பொருட்களைப் பின்வரும் கூற்று விளக்குகிறது.

தச்சர் வீடுகட்டுதல், கப்பல், கட்டுமரம், படகு முதலிய கட்டுதல், தேர்களைச் செய்தல் முதலிய வேலைகளில் ஈடுபட்டனர். கருப்பஞ் சாற்றினின்றும் வெல்லக்கட்டி வடித்தல் கிராமப் பணிக்களரிகளில் நடைபெற்ற ஒரு பொதுத் தொழில். வாசமிகுந்த சந்தன மரங்களை வெட்டுதலும் முத்துக் குளித்தலும் நடைபெற்றன. இவற்றைப் பற்றிய குறிப்புகள் தமிழிலக்கியத்தில் எண்ணிறந்தன. கடற்கரையோரங்களில் வாழ்ந்து வந்த மீனவர்கள் மீன் பிடிக்கும் தொழிலை ஒரு கைத் தொழிலாகவே மேற்கொண்டனர். மீன் பிடிப்போர் தமது தூண்டிலின் ஒரு நுனியில் அகப்பட்ட மீன்களைப் பிடித்து இட்டுக் கொள்ளுதற்கு ஒரு சிறு தோற்பை இருந்தது. உப்புக் காய்ச்சுதல், கடற்கரைகளில் மேற்கொள்ளப்பெற்ற மற்றொரு முக்கியமான தொழில்.[8]

ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், பக். 304 – 305.

மனிதகுலம், இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்தும் அளவிற்குக் கருவிகளை உற்பத்தி செய்து கொள்ளுதல் என்னும் நிலைக்கு வளர்ந்தது. அநாகரிக காலம் என்பது காலநடை வளர்ப்பு, நிலத்தில் பயிரிடுதல் ஆகியவை குறித்த அறிவைப் பெற்ற கட்டமாகும். இயற்கையின் உற்பத்தித் திறனை மனிதனின் ஆற்றலால் பெருக்கிக் கொள்ளும் வழிமுறைகளைக் கற்ற காலகட்டமும் இதுவாகும். நாகரிக காலத்தில் இயற்கைப் பொருட்களை மேலும் அதிக அளவில் பயன்படுத்துவது பற்றியும் தொழில்கள் மற்றும் கலைகள் பற்றிய அறிவைப் பெற்ற கட்டமாக அமைந்துள்ளது. இந்தக்கால கட்டத்தில் தமிழகம் சிறப்பான வளர்ச்சி கண்டுள்ளது.

தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
வூரா நற்றே ருருட்டிய புதல்வர்
தளர்நடை வருத்தம் வீட[9]

பெரும்பாண். 248 – 250

என்ற வரிகளில் தச்சர்களின் பிள்ளைகள் தச்சு வேலைகளைப் பழகியிருந்தமைச் சுட்டப்படுகிறது. இதன்மூலம் தலைமுறை தலைமுறையாக தச்சுத் தொழில் வளர்ந்துள்ளதை அறியமுடிகிறது. இது போன்று இதர தொழில்களிலும் அதிக வளர்ச்சியைத் தமிழகம் கண்டிருந்ததற்கு சங்கப் பாடல்கள் சான்றுகளாக அமைகின்றன. இது தமிழரின் பொருளாதார வளர்ச்சி கண்ட மாற்றம்.

## மொழியின் தோற்றம்

தொடக்கக் கால மனிதனுக்குத் தான் வாழ்ந்த சூழல் சாதகமாக இல்லை. அதை அவன் தனக்குச் சாதகமாக்கிக் கொள்ள போராடிக் கொண்டிருந்தான். இந்த போராட்டத்தின் ஒரு கட்டத்தில் மொழி உருவாகியது. கூட்டாக வாழ்ந்த மனிதன் தன் சூழைலைக் கூட்டாகவே சாதகப் படுத்த வேண்டியிருந்தது. இந்நிலையில் அவனுக்குக் கற்பனையும் மொழியும் அவசியமானது.

## சைகை மொழி

மனிதனின் தொடக்ககால உற்பத்தி மிகச் சிறிய அளவாக இருந்தது போல அவனது மொழியும் சைகை மொழி என்னும் ஒரு சிறிய எல்லைக்குள் இருந்தது. பழங்களையும் கொட்டைகளையும் சேகரித்தல் என்னும் நிலையில் இருந்த மனிதனுக்குச் சைகை மொழி போதுமானதாக இருந்தது. உணர்ச்சி மேலீட்டால் இயல்பூக்கமாக வெளிப்பட்ட சைகையை நாளடைவில் ஒருங்கிணைத்து கருத்து பரிமாற்றத்திற்கான ஒரு முறையான மொழியாக உருவாகியிருக்கலாம்.

இன்ன சொற்களுக்கு இன்ன பொருள் என்பது போல இன்ன சைகைக்கு இன்ன பொருள் எனப் புரிந்து கொண்டு வாழ்ந்திருக்கலாம். ஒரே உற்பத்தி உறவில் வாழ்ந்த மனிதனுக்கு அவரவர் சைகை மொழியைப் புரிந்து கொள்வதில் கடினம் இருந்திருக்காது. இருப்பினும் சைகை மொழியை மட்டும் பயன்படுத்தி அக்கால மக்கள் தமது தேவைகளைத் தீர்த்துக் கொள்ள முடியவில்லை. ஆகையால் இது நீடிக்கவில்லை. இக்கால மனிதனின் அடுத்தகட்ட முயற்சியாகக்

குரல்வளையைப் பயன்படுத்தி பேச முயன்றுள்ளதைக் காணமுடிகிறது. சைகை மொழி மனிதனால் மட்டும் பயன்படுத்தப்பட்டது என்பதைப் பின்வரும் கூற்று உணர்த்துகிறது.

> சைகை மொழிகள் விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் எட்டாதவை. பழங்கால மனிதர் சைகை மொழிகளைத் தக்கவாறு பயன்படுத்தும் ஆற்றல் பெற்றிருந்தமையாலேயே குரலில் எழும் ஒலிகளையும் தக்கவாறு பயன்படுத்தக் கற்றனர்.[10]
>
> மு. வரதராசன், மொழி வரலாறு, பக். 216-217.

மனிதர்கள் எதிரெதிரே கண்ணுக்கு எட்டும் தூரம் இருந்தால் மட்டும் இம்மொழி பயனளிக்கும். உணவு சேகரிக்கும் மனித கூட்டம் ஒன்றாக இருந்து செயல்பட்டுள்ளனர். அக்காலகட்ட மக்கள் தங்கள் தேவையை சைகை மொழி கொண்டு பூர்த்தி செய்து கொண்டனர்.

### பேச்சு மொழி

மனிதனின் உணவு சேகரித்தல் முறை மேலும் பெருக்கம் அடையும்போது அவன் காண முடியாத மனிதனுக்கும் சொல்ல வேண்டிய செய்திகள் உருவான போது குரலை எழுப்பி பேச முயன்றான். தான் காட்டில் பார்த்துவிட்டு வந்த விலங்கை அவன் மற்றொரு பொழுதில் கற்பனை செய்ய வேண்டியிருந்தது. அது கற்பனை மொழியாக அமைந்தது.

> ஒரு கட்டதில் மனித இனம் கற்பனையின் உதவியுடன் வியக்கத்தக்க ஒரு திறனைக் கண்டறிந்தது. மொழியின் மூலம் பேசும் நுட்பம், ஒருவருக்கொருவர் எண்ணங்களைப் பரிமாறிக் கொள்ளக் கூடிய கலை போன்றவை மனித வாழ்க்கையை முற்றிலுமாக மாற்றியது. இந்தக் கண்டுபிடிப்புக்குப் பிறகுதான் அவர்களால் கடவுளையும் பேய்களையும் கண்டறிய முடிந்தது. இதுதான் பிந்தைய அறிவியல் முன்னேற்றங்களை நோக்கி எடுத்து வைத்த பெரும் அடி வைப்பு. அதன் உதவியுடன் மனிதர்கள் பூமியின் தோற்றத்தையே மாற்றிவிட்டனர்.[11]
>
> அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, ப. 17.

இத்தகைய மொழியும், கற்பனையும் அவன் வாழ்ந்த கூட்டம் மொத்தத்திற்கும் பயனாக அமைந்தது. கற்பனை அவர்களை உள்ளிருந்து இயக்கியது. அது வெளிப்பட்ட விதம் மொழியாக அமைந்தது. மொழி என்பது வெறும் தகவல் மட்டும் பரிமாற்றும் கருவியன்று, மனிதர்கள் தொடர்பு கொள்ளவும் ஒருவரை ஒருவர் ஏதோ ஒன்றைச் செய்ய வைக்கவும் *சமூகம் உற்பத்தி செய்த கருவி மொழி*. இதனை கிஸ்டோபர் காட்வெல் பின்வருமாறு கூறுகிறார்.

> Language is a social prodect, the instrument whereby men communicate and persuade each other [12]

Christopher Caudwell, Illusion and Reality. P. ix.

கூட்டுழைப்பை மேற்கொண்ட மனிதனுக்கு மொழி சாத்தியமானது. கூட்டாக உழைத்த மனிதனுக்குப் பேசுவதற்கான தேவைகள் உருவாயின. அம்மக்களுக்கு இடையில் ஒரு உறவு இருந்தது. அவ்வுறவு ஒருவன் மரம் என்று கூறினால் அக்குழுவில் உள்ள அனைவரது கற்பனையிலும் அடிமரம், கிளை, இலைகள், பூக்கள், காய்கள், கனிகள் கொண்ட மரம் என்னும் பொருள் தெரிந்தது. இவ்வுறவு அவர்களுக்கு தேவையானதொரு மொழியை உருவாக்கி அளித்தது. அவ்வுறவைத் தாண்டி அவர்களின் மொழிக்குப் பொருள் இல்லை.

ஒரு மக்கள் குழு தங்களுக்குள் ஏற்படுத்திக் கொள்ளும் இவ்வுறவை சமூக விஞ்ஞானம் உற்பத்தி உறவு என்கிறது. இந்த உற்பத்தி உறவு வளர மொழியின் தேவையும் வளர்கிறது. இத்தேவை அக்கால மக்களுக்குத் துல்லியமானதொரு உறுப்பை வழங்கியது. அது சீரான முறையில் பேச முயன்ற குரல்வளை ஆகும். குரல்வளையின் தாக்கத்தால் வாயின் உறுப்புகள், வளர்ச்சியடைந்து மூளையின் வளர்ச்சியிலும் முன்னேற்றதை அளித்தது. கூட்டுழைப்பு, உறுப்புகளை வழங்கியது. பதிலுக்கு உறுப்புகள் கூட்டுழைப்புக்குத் தங்களது கொடைகளை வழங்கின. இங்ஙனம் மனிதனும் மொழியும் சிறப்பான வளர்ச்சி நிலையை எட்டினர் என்பதைத் தெளியமுடிகிறது.

கைகள், பேச்சு, உறுப்புகள், மூளை இவற்றினுடைய ஒருங்கு இணைப்பான வினைப்பாட்டினால் - ஒவ்வொரு தனி மனிதனிடத்தில் மட்டுமின்றிச் சமூகத்திலும் கூட - மனிதர்கள் மேலும் மேலும் சிக்கல் மிகுந்த காரியங்களை நிறைவேற்றத் திறன் பெற்றனர். மேலும் மேலும் உயர்ந்த குறிக்கோள்களைத் தங்களுக்கு நிர்ணயித்துக் கொள்வதும் அவற்றை அடைவதும் அவர்களுக்குச் சாத்தியமாயிற்று.[13]

எங்கல்ஸ், மனிதக் குரங்கு மனிதனாக மாறிய இடைநிலைப் படியில் உழைப்பின் பாத்திரம், ப.15.

மொழி மற்றும் மனிதன் இவ்விரண்டும் ஒன்றின் பயனால் மற்றொன்று வளர்ந்தும் வளர்த்தும் வந்துள்ளன. தொடக்கத்தில் மொழியின் தன்மை எளிமையானதாக இருந்துள்ளது. குகை வீட்டில் வாசல் உண்டு. ஆனால் கதவு, தாழ், பலகனி, சமையலறை, நடை, கூடம் போன்ற பகுப்புகள் இல்லாதது போல் மொழியிலும் எழுத்து, சொல், அசை, சீர், சொற்றொடர் முதலிய பாகுபாடுகள் இல்லை. ஆனால் குகை வீட்டிலிருந்த மனிதன் கூட்டுழைப்பின் பலனால் கற் கோபுரங்களையும் அரண்மனைகளையும் கட்டும் நிலையை வந்தடைந்தது போலவே மொழியிலும் வியக்கத்தக்க வளர்ச்சியை அடைந்தான். அவ்வளர்ச்சிக்கான அடிப்படை அவனிடம் தொடக்கக் காலத்தில் இருந்து காணப்பட்ட ஒன்றாகும். இதனைப் பின்வரும் கூற்று தெளிவுபடுத்துகிறது.

தொல் பழங்காலத்திலேயே, அடிமைக் காலகட்டத்திற்கு முன்பே இன்றைய நவீன மொழியின் முக்கிய கூறுகள் இருந்திருக்கும் என நாம் ஊகிக்கலாம். அது சதாரண மொழியாக, மிகச் சொற்பமான சொற் தொகுதியைக் கொண்டதாக இருப்பினும், தனக்கேயுரிய இலக்கண அமைப்பை அது மிகவும் புராதானமாக இருப்பினும், இலக்கண அமைப்பு என்ற ஒன்றைக் கொண்டதாகவே இருந்தது.[14]

ஸ்டாலின், மார்க்ஸியமும் மொழியில் தேசிய இனப் பிரச்சினைகளும், ப.55.

தொடக்கக் கால மொழியில் இலக்கண அமைப்பு இருந்துள்ளது எனும் இக்கருத்து மனிதனின் சமூகஉறவு பலமாக அமைந்திருந்ததை விளக்குகிறது. இலக்கணம் என்பது அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு மொழி அமைப்பைச் சுட்டும் சொல்லாகும். அனைவரும் ஒப்புக் கொள்வதற்கு ஒரு குறிப்பிட்ட உற்பத்தி முறை அவசியம். தொடக்கக் கால மனிதனிடம் சிறிய அளவுடையதாக இருப்பினும் ஒரு உற்பத்தி ஒழுங்கு இருந்துள்ளதைக் காணமுடிகிறது. அது ஒருவரை ஒருவர் அனுசரித்து வாழ வைத்துள்ளது. இத் தொடக்ககால மொழி அவர்களை அடுத்த கட்டத்துக்கு நகர்த்தி வந்துள்ளது.

## எழுத்து மொழி

பேச்சு மொழியைப் பயன்படுத்தி ஒரு மனிதன் கேட்கும் தொலைவில் உள்ள ஒரு மனிதனுக்கு ஒன்றைத் தெரிவிக்கலாம் ஆனால் எழுத்து மொழி என்பது அது எழுதப்பட்ட காலத்தையும் கடந்து பிற கால மக்களுக்கும் பயனை வழங்குவதாக அமைகிறது. எழுத்து மொழி தோன்றியதற்கு அடிப்படைக் காரணமாக மனிதனின் கற்பனை திறன் இருந்துள்ளது. மனிதன் எழுதிய தொடக்க கால எழுத்துகள் தற்கால அகழ்வாய்வுகளில் காணக் கிடைக்கின்றன. அக்காலத்தில் ஓலைகளில் எழுதப்பட்ட சங்க இலங்கியங்கள் இக்காலத்தில் கிடைக்கின்றன. ஓலைச் சுவடிகள் பயன்படுத்தப்பட்ட விதத்தைப் பின்வருமாறு விளக்குகிறார்.

> உலர்ந்த, நறுக்கித் தரிக்கப்பட்ட, நீண்ட, குறுகிய பனை ஓலைத் துண்டுகளில் (ஒரு அடி நீளம், ஈரங்குல அகலம்) மாணவர்கள் எழுதினர். அவை ஒரு மூலையிலோ இரு மூலைகளிலுமோ துளையிடப்பட்டன. அவற்றிற்குப் பக்கம் இட்டு அவற்றை ஒன்றாகப் கோத்துக் கெட்டியான கயிறுகளால் பிணித்தனர். பல பக்கங்களை இவ்வாறு சேர்த்துக் கட்டிய பின் அக்கட்டுக்களை அதே அளவுள்ள இரு பலகைகளுக்கிடையே இட்டுக் கட்டினர். இப்பக்கங்கள் ஓலை எனப்பட்டன. அக்கட்டிற்குச் சுவடி என்பது பெயர். அவர்களது எழுதுகோல் நீண்ட கூரிய, ஆனால் திரண்ட

ஊசி போன்றது. அது ஒரு மரப்பிடியில் செருகப்பட்டது. அதனை ஊசி அல்லது எழுத்தாணி என்றனர்.[15]

ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், ப. 431.

இத்தகைய சுவடிகளில் எழுதப்பட்ட சங்ககால இலக்கியங்களில் கிடைக்காமல் அழிந்தவை ஏராளம். இருப்பினும் எழுத்து மொழி என்னும் வளர்ச்சி மனித குல வரலாற்றில் அதி முக்கியமான சிறப்பு நிலையாகும். எழுத்து மொழி தமிழகத்தில் சிறப்பாக வளர்ந்தமைக்கு சங்க இலக்கியங்கள் சான்றாக அமைவதைக் காணமுடிகிறது.

**சங்கப்பதிவில் தாய்வழிச் சமூகம்**

தாய்வழிச் சமூகத்தில் தாய் பல்வேறு நிலைகளில் தலைமை பெற்றிருந்தாள். *இத் தலைமை பண்பு கொண்ட பெண்களைச் சங்க இலக்கியம் முதுபெண்டிர் எனக் குறிக்கிறது.* புராதன தமிழ்ச் சமூகத்தில் இவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. வேட்டையாடிய பொருளைச் சமமாகப் பாதீடு செய்வது இவளது முக்கிய பணியாகும். ஆதிப் பொதுவுடைமைச் சமூகக் காலத்தைச் சேர்ந்த பெண்களின் வாழ்க்கை அகமண முறையாக இருந்துள்ளது. இதனைப் பின்வரும் கூற்று விளக்குகிறது.

ஒரே தாயின் சகோதரிகளும், அவரின் பிள்ளைகளும் அவர்களின் பேரன் பேத்திகளும் ஒரே இரத்தஉறவு குழுவாக (Kinship band) வாழத்துவங்கினர். இப்படி எண்ணற்ற இரத்தவுறவுக் குழுக்கள் ஆங்காங்கே வாழ்ந்து கொண்டிருந்தனர்.[16]

ஏ. தனசேகரன், ஆதியிலிருந்து சாதி வரை. ப. 35.

இத்தகைய அகமண உறவை சங்க இலக்கியப் பதிவுகளில் காணமுடியவில்லை. எனினும் தாய்வழிச் சமூகத்தின் எச்சங்களைச் சங்கப்பதிவுகளில் காணமுடிகிறது. குறிப்பாகத் தாய் வழிச் சமூகத்தில் இருந்து தந்தை வழிச் சமூகமாக மாறிய காலகட்டமாகிய தந்தையை முன்னிருத்தும் சேய்வழி அழைத்தல் முறையைச் சங்க இலக்கியங்களில்

காணமுடிகிறது. இச் சேய்வழி அழைத்தலைப் பின்வரும் கூற்று தெளிவாக விளக்குகிறது.

> பண்டைக்காலத்தில் தாய்த்தலைமை முறை பரவலாக ஓங்கி இருந்த போது திருமணத்திற்குப் பின் கணவன் மனைவியின் வீட்டிற்குச் சென்று வாழ்ந்து வந்தான் அல்லது அவ்வப்போது சென்று வருபவனாக இருந்தான். இந்நிலையில் மாமியார் தன் மருமகனைத் தன் குடும்பதைச் சேர்ந்த ஒருவன் என மதிக்காமல் அவளது மக்களையும் சகோதரியின் மக்களையும் மட்டுமே பெரியதாக மதித்தாள். அவர்களே அக்குடியின் கால்வழியினர் என்பதால் அவர்கள் அனைவரும் முதன்மை உறவினர் (Primary kin) என்ற வட்டத்திற்குள் முக்கியத்துவம் பெற்றிருந்தனர். மருமகனும் அவனுடைய உறவினர்களும் இரண்டாம் நிலை உறவினராகவே (Secondary kin) கருதப்பட்டனர். இதனால் தாய் வழிக் குடும்பத்தைச் சேர்ந்த முதனிலை உறவினர்கள் அக்குடும்பத்தின் மருமகனைக் குறிப்பிட்டுக் கூற முற்பட்ட போது இக் குழந்தைகளின் தந்தை என்றே குறிப்பிட்டனர். மக்களின் வழி தந்தை குறிப்பிடப்படுவது தாய்வழிச் சமூகத்தின் கூறாகவும், இது பிந்தைய நிலைகளில் எச்சக்கூறாகவும் தொடர்ந்து காணப்பட்டது என்கிறார் டைலர்.[17]

பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், பக். 49-50.

தாய்வழிச் சமூகத்தின் இச்சேய்வழி அழைத்தல் தற்காலத்திலும் காணப்படுவதை அறியமுடிகிறது. இயல்பாகப் பெண்கள் தங்கள் அக்கம் பக்கத்து வீட்டு ஆட்களிடம் பேசும் போது தன் மக்களின் பெயரைச் சொல்லி, மணி அப்பா அல்லது கயல் அப்பா எனக் குறிப்பதைக் காணமுடிகிறது. பழைய சேய்வழி அழைத்தல் எச்சத்தின் நீட்சி இன்றுவரை பழக்கதில் உள்ளதைக் காணமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள *அகுதை தந்தை, அரிவையர் தந்தை, இயினன் தந்தை, இவள் தந்தை, இளையோள் தந்தை, குறுந்தொடி தந்தை, கொடிச்சியர் தந்தை, சுடர்நுதல் தந்தை, சேந்தன்*

*தந்தை, நல்லோள் தந்தை, நெடுமொழித் தந்தை, புதல்வர் தந்தை, மடந்தையர் தந்தை, மைந்தர் தந்தை* போன்றவை தாய்வழிச் சமூகத்தின் எச்சங்களுக்குக் காட்டுகளாக உள்ளன. இதனை எட்வர்ட் பர்னட் டைலரின் எஞ்சி நிலைத்தவைக் கோட்பாட்டின் வழி அறியமுடிகிறது. பல நிகழ்வுகள் தொடக்க காலத்திலிருந்து அதன் சமூகப் பயன்பாடு முடிந்துவிட்ட பின்னரும் பின்வரும் காலங்களில் தொடர்ந்து நிகழும் தன்மையை எஞ்சி நிலைத்தவை கோட்பாடு என்று விளக்குகிறார் டைலர்.

**சங்கப் பதிவில் பெண் தலைமை**

சமூகத்தில் வீரர்களைக் குறிக்கும்போது அவர்களது தாயின் பெயரால் சுட்டப்பட்டனர். இதற்குப் பல புறநானூற்றுப் பாடல்கள் சான்றாக அமைகின்றன. *சிறுவர் தாயே பேரிற் பெண்டே* (புறம். 270), *செம்முது பெண்டிர் காதலஞ்சிறாஅன்* (புறம். 276), *வானரைக்கூந்தல் முதியோள் சிறுவன்* (புறம். 277), *முளரி மருங்கின் முதியோள் சிறுவன்* (புறம். 278), *என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருவனும்* (கலித். 9) என சிறப்பெய்திய வீரர்களையும் சிறுவர்களையும் சுட்டினர். மேலும். பெண்களை முதுவாய் ஒக்கல், முதுவாய்ப் பெண்டிர், பெருமுது பெண்டிர், தொல்முது பெண்டிர், முதுசெம் பெண்டிர், பேரிற் பெண்டு, செம்முது பெண்டு, இற்பொலி மகடூஉ போன்ற பெயர்களால் குறித்ததிலிருந்து பெண் தலைமை வகித்த நிலையைத் தந்தை வழிச் சமூகத்தால் முற்றிலுமாக துடைத்தழிக்க முடியவில்லை என்பதைக் காணமுடிகிறது.

குறிஞ்சி நிலத்தில் பெண்ணும் ஆணும் இணைந்தே வேட்டையாடி விலங்குகளைத் தங்களது குடிசைக்குக் கொண்டு வந்தனர். ஆண் வேட்டைக்குச் சென்று வந்தாலும் அதை பங்கிட்டுக் கொடுக்கும் பணி பெண்ணுக்கு அளிக்கப்பட்டிருந்தது. இதனைப் பின்வரும் பாடலடிகளில் காணப்படும் பகுக்கும் என்ற சொல்லாட்சி சுட்டி நிற்கிறது. சங்க இலக்கியம். உணவைப் பாதீடு செய்யும் நிகழ்ச்சியையும் தாய் வழிச் சமூகத்தின் எச்சமாகக் கருத இடமுள்ளது.

*கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை*
*தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி கிழங்கொடு*
*காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்*[18]

நற். 85.

என்றும்

*கானவன் வில்லின் தந்த வெண் கோட்டு ஏற்றை*
*புனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி*
*குடி முறை பகுக்கும் நெடு மலை நாட*[19]

நற். 336.

என்றும்

*உள்ளது தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்*
*நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்*
*இற்பொலி மகடூஉ*[20]

புறம். 331.

என்றும் இம்மூன்று பாடல்களில் தாய்வழி சமூகத்தின் கூறுகளைக் காணமுடிகிறது. தொடக்கக் காலம் தொட்டே உணவைத் தன்னைச் சேர்ந்த குழுவுக்குப் பகுத்துக் கொடுப்பது பெண்ணின் வேலையாக இருந்துள்ளது. மேற்கண்ட பாடல்களில் காணப்படும் பெண்கள் தாய் வழிச் சமூகம் உச்சத்திலிருந்த பெண்ணைப் போல் இல்லாவிடினும், குடும்ப அளவில் அவளுக்கான உயர்நிலை பெரிதாகக் குறைந்து விடவில்லை என்பதை அறியமுடிகிறது. `பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' என்பதாக சங்க காலத்திய பெண்கள் இருந்ததைப் பின் வந்த தமிழ் இலக்கியங்கள் வழி மொழிந்து பண்டைய பண்பாட்டைப் பதியம் செய்து இன்றளவும் பாதுகாத்து வந்திருப்பதை அறிவோம். இருப்பினும் முல்லைக் காட்டு வழிக் குடும்பம் பெண்ணை இரண்டாம் நிலைக்குத் தள்ளியதன் தொடக்கப் புள்ளியாக அமைந்தது.

சங்க இலக்கியப் பாடல்களில் தாய் வழிச் சமூகத்திற்கான கூறுகளும் தாய் வழிச் சமூகத்தின் எச்சங்களும் இருந்துள்ளதை ஆங்காங்கே அறியமுடிகிறது. இத்தொகை நூல்கள் கி.மு. 200 மற்றும் கி.பி. 200க்கு இடைப்பட்ட காலகட்டத்தில் எழுந்த பாடல்களின் தொகுப்பு எனும் கருத்து பெரும்பாலும் ஏற்கப்பட்டுள்ளது. தாய்வழிச் சமூகக் கூறுகளைக் கொண்டுள்ள பாடல்கள் இக்காலகட்டத்தின் தொடக்கப் பகுதியில் உருவாகியிருக்கலாம். காடுகளில் குழுக்களாக வாழ்ந்த பெண்கள் தலைமைப் பண்பும் உயர் மதிப்பும் பெற்று விளங்கியுள்ளனர்.

**தந்தைவழி சமூகம்**

காலப் போக்கில் முல்லை நிலத்தில் உருவான மேய்ச்சல் பொருளாதாரம் கொஞ்சம் கொஞ்சமாகப் பெண்ணை இரண்டாம் நிலைக்குத் தள்ளி ஆண்களை முதல் நிலைக்குக் கொண்டுவந்துள்ளது. இது ஆண்கள் திட்டமிட்டு மேற்கொண்ட செயல் அல்ல. வரலாற்று வளர்ச்சிப் போக்கில் உருவானது. முல்லை நில வாழ்வின் தொடக்கத்தில் பொதுச் சொத்தாக இருந்த கால்நடைகள் சில காரணங்களுக்காக ஆண்களுக்கு மிகக் குறைந்த அளவில் அளிக்கப்பட்டன. மிகக் குறைந்த அளவாயினும் அது தனியுடைமை ஆகையால், பொதுவில் இருக்கும் அதிகபடியான கால்நடைகள் வழங்காத அதிகாரத்தை இச்சிறிய தனிவுடைமை ஆண்களுக்கு வழங்கியது. இந்நிலையின் வளர்ச்சிப் போக்கினைப் பின்வருமாறு விளக்குகிறார் செல்வராசு.

> சமூகத்தில் மேல் நிலையிலிருந்த பெண்கள் ஆண்களை அடிமைகளாக வைத்திருந்துள்ளனர். மேல்நிலையிலிருந்த பெண்களுக்கான சொத்து கால்நடைகளேயாகும். எனவே அடிமைகளாக வைக்கப்பட்டிருந்த ஆண்கள் கால்நடைகளை மேய்ப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளனர். இவ்வடிமைகள் ஏதேனும் தவறிழைக்கும் பட்சத்தில் அதுவரை அவர்கள் கால்நடை மேய்த்ததற்குக் கூலியாக ஒரு சில கால்நடைகளோடு

விரட்டப்பட்டுள்ளனர். இவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாக கால்நடைகளுக்கு ஆண்கள் உரிமையுடையோர்களாக மாறிய நிலையில் பெண்கள் அடிமைப் படுத்தப்பட்டுவிட்டனர்.[21]

அ. செல்வராசு, ஆண் ஆளுமையில் பெண் கற்பு, ப. 4.

மேற்கண்ட கூற்று, தாய்வழிச் சமூகம் தந்தைவழிச் சமூகமாக மாறிய முற்கால நிலையை விளக்குகிறது. சங்கப் பாடல்களில் முல்லை நிலப் பாடல்களில் அதிக அளவில் கற்பு வலியுறுத்தப்படுவதை இதனோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம். முல்லை சான்ற கற்பின் மெல்லியள் குறுமகள் (அகம். 274), முல்லை சான்ற கற்பின் மெல்லியள் (சிறுபாண். 30), என்னும் பாடலடிகள் மூலம் *ஆணாத்திக்கத்தின் தோற்றக் கூறுகள்* முல்லை நிலத்தில் உருவாக்கம் பெற்றுள்ளமையை அறியமுடிகிறது. மேலும் இவ்விடத்தில் ஒரு தார மணமுறையும் உருவாகியுள்ளது. தங்களது கால்நடைகளுக்கான வாரிசுகளாகத் தங்கள் மக்கள் இருக்க வேண்டும் என்னும் அடையாளத்திற்காக ஒரு தார மணமும் உருவாக்கப்பட்டுள்ளது. முல்லை நிலத்துக்குரிய உரிப்பொருளாக இருத்தல் இருத்தல் நிமித்தம் கூறப்பட்டுள்ளது. இதுவும் ஒருவகையில் கற்பை வலியுறுத்தும் நிலையைக் காணமுடிகிறது. இங்ஙனம் தாய்வழிச் சமூகம் காலப் போக்கில் தந்தைவழிச் சமூகமாக மாற்றம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

**முடிவுரை**

அறிவியல் பெரு வளர்ச்சி கண்டுள்ள இக்காலம் வரை உயிர்களின் தோற்றம் குறித்தும் மனித இனத் தோற்றம் குறித்தும் கற்பனைக் கதைகள் நிலவுவதைக் காணமுடிகிறது. ஆனால் விஞ்ஞானிகள் தங்கள் பெரும் உழைப்பை அறிவியல் துறைக்கு வழங்கி உயிர்களின் தோற்றம் மற்றும் மனிதனின் தோற்றம் குறித்த ஒரு திட்டவட்டமான கோட்பாடுகளை உருவாக்கியுள்ளனர். முழுமையான பரிசோனை முறையில் இவ்வுண்மைகள் நிரூபிக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

அதுபோல சமூக அறிவியல் மனித சமூகத்தை நுணுகி ஆராய்ந்துள்ளது. அது எழுதப்பட்ட வரலாற்றுக்கு முந்தைய மனித சமூகத்தைக் காட்டுமிராண்டி காலகட்டம், அநாகரிக காலகட்டம், நாகரிக காலகட்டம் என பகுத்து ஆய்ந்துள்ளதை அறியலாம்.

சங்க இலக்கியத்தில் காணகூடிய தொடக்கக் கால சமூகம் எழுதப்பட்ட வரலாற்றுக்கு முந்தைய மனிதன் வாழ்ந்த காலகட்டத்தில் இருந்து தொடங்குவதைக் காணமுடிகிறது. குறிஞ்சி நில உற்பத்தியின் கடைசி கட்டத்தில் வாழ்ந்த மனிதனின் வாழ்வோடு ஒத்தமைகிறது. முல்லை நில உற்பத்திமுறையின் பிற்காலம், நாகரிக காலகட்டத்தின் முற்காலத்தை ஒத்ததாக உள்ளது. மருத நில மற்றும் நெய்தல் நில உற்பத்தி முறைகள் அரசு உருவாகிய தொடக்கக் கால கட்டத்தோடு கச்சிதமாகப் பொருந்துகிறது.

கூட்டுழைப்பின் பயனாய் மனிதன் பெற்ற 'மொழி' மற்றும் இலக்கியங்கள் மனிதனுடையதாய் இருந்தன. கூட்டுழைப்புத் தன்மை மாறி உற்பத்தியின் பலன் அவனிடம் இருந்து பிரிக்கப்பட்டபின் அவன் உருவாக்கிய மொழியும், இலக்கியங்களும் அவனிடம் இருந்து பிரிக்கப்பட்டுவிட்டன. அவ்வாறே கூட்டுழைப்பினின்று பெண்ணும் தனித்து விலக்கப்பட்டாள். தாய்வழிச் சமூகத்திற்கு அடிப்படையாய் அமைந்த உற்பத்தி முறை காலப் போக்கில் தந்தை வழிச் சமூகம் உருவாவதற்கு ஏற்ற புதிய உற்பத்தி முறையாக மாற்றம் கண்டதையும் அறியமுடிகிறது.

முல்லை நிலத்தில் தொடங்கிய அடிமை முறை, அரசு உருவாக்கம் பெற்ற மருத நிலத்தில் கோலோச்சியது. மொழி, மனிதன், உலகம் உள்ளிட்டவைகள் கடவுளர்களால் உருவாக்கப்பட்டது எனினும் கருத்தியல் உருவானதுடன், உழைப்பின் பலன் மனிதர்களுக்கானதல்ல அதனை அவர்கள் பெறுவதற்கான உரிமையைக் கோரக்கூடாது என்னும் கருத்தை வலியுறுத்துவதாகவும் அமைந்துள்ளது. தொடக்கத்தில் உற்பத்தி முறையின் விளைவாய் இக்கருத்துகள் தானாக உருவாகின.

ஆனால் தற்கால முதலாளித்துவ சமூகம் தனது சுரண்டலை மறைக்க இருக்கருத்தைக் கேடயமாகப் பயன்படுத்தி வருவதையும் காணமுடிகிறது.

சங்க காலத்துப் பொருளாதார வளர்ச்சியில் பெண் உடமையற்ற நிலைக்குத் தள்ளப்பட்டதையும், உழைப்பிற்குரிய முதல் மூலதனமாக மனிதவகை உற்பத்தியில் பெரும் பங்கு வகித்த பெண்ணின் உரிமை இழப்பையும் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன.

சங்க இலக்கியம் ஒரு வரலாற்று நூல் இல்லை எனினும், அது ஒரு வரலாற்று நூலின் பாத்திரத்தை வகிப்பதை மறுக்க முடியாது. ஆங்காங்கே காணப்படும் சங்கம் குறித்த செய்திகள் பேரரசுகளின் வளர்ச்சியைச் சுட்டி நிற்பதைக் காணமுடிகிறது. பேரரசுகள் போர்களின் மூலம் செல்வம் குவிக்கும் தங்கள் பணிகளைச் சிறப்பாகத் தொடங்கிவிட்டதை மூவேந்தர் குறித்த சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

ஒரு நாட்டின் உற்பத்தி பெருக்கமே, சமூக பொருளாதார வளர்ச்சி என்பதாகும். சமூக பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படை மனித உற்பத்தி. மனிதகுல வரலாற்றில் அவ்வுற்பத்தியே, நாட்டுவளத்தின் பொருளாதார வளர்ச்சி குறியீடாக 'குழந்தைபேறு' என்னும் தாய்மைக்குரியவளாக போற்றி மதிக்கப்பட்டாா். சமூக உற்பத்தியில் பெண் உயர்ந்தவளானாள் என்பதை குடிமுறைபடுத்தும் (நற் – 85) வது பாடல் எடுத்தியம்புகின்றது.

ஆகவே மனித உற்பத்தி முதல் மூலதனக் கருவாக பெண் இருந்திருக்கிறாள் என்பதையும் மனிதகுல வளர்ச்சி இல்லாமல் நாட்டு வளர்ச்சி இல்லை என்றும், அன்றைய பொருளாதாரம் உயிர்களின் தோற்றம் தொடங்கி, பின் சமூக உருவாக்கம், அதன் படிநிலைகள் என சங்ககாலத்தின் பலவகை, தொழில்களும், உற்பத்தியும், பொருளாதார வளர்ச்சி முறைக்கு காரணம் என்பதை இந்த ஆய்வேடு விளக்கி நிற்கிறது.

## சான்றெண் விளக்கம்

1. அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, ப.191.
2. அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, ப.187.
3. அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, பக். 193- 194.
4. எங்கல்ஸ், மனிதக் குரங்கு மனிதனாக மாறிய இடைநிலைப் படியில் உழைப்பின் பாத்திரம், ப. 3.
5. அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, ப.16.
6. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.33.
7. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.36.
8. ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், பக். 304 - 305.
9. பெரும்பாண். 248 - 250
10. மு. வரதராசன், மொழி வரலாறு, பக். 216-217.
11. அஜய் கன்சால், மொழி. ஆ. கி. ரமேஷ், கடவுள் உருவான கதை, ப. 17.
12. Christopher Caudwell, Illusion and Reality. P. ix.
13. எங்கல்ஸ், மனிதக் குரங்கு மனிதனாக மாறிய இடைநிலைப் படியில் உழைப்பின் பாத்திரம், ப. 15.
14. ஸ்டாலின், மார்க்ஸியமும் மொழியில் தேசிய இனப் பிரச்சினைகளும், ப.55.
15. ந. சுப்ரமண்யன், சங்ககால வாழ்வியல், ப. 431.
16. ஏ. தனசேகரன், ஆதியிலிருந்து சாதி வரை. ப. 35.
17. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், பக். 49-50.
18. நற். 85.
19. நற். 336.
20. புறம். 331.
21. அ. செல்வராசு, ஆண் ஆளுமையில் பெண் கற்பு, ப. 4.

# இயல் 2

## சங்க இலக்கியத்தில் பெண்களும் தொழில்களும்

பழந்தமிழரின் வாழ்க்கையில் முதல் தொழில் வேட்டைத் தொழில் முதற்பொருள் நிலம். 'வாழ்தல்' எனும் தேவையில் தொழில் செய்தாக வேண்டும் என்ற அடிப்படையில் கூட்டு வாழ்க்கையை மேற்கொண்ட மக்களிடம் அடுத்து தோன்றியது மேய்ச்சல் தொழில். உடல் உழைப்பிற்கான திறனுடன் பொதுவான நிலம், மலை, காடு, கடல், பாலை என ஐவகை நிலங்களிலும் நூற்றுக்கணக்கான உற்பத்திக் கருவிகளோடு ஆயிரக்கணக்கான தொழில் வளத்தை பெருக்கினர்.

ஆண், பெண் இருபாலரும் இணைந்தே வேட்டைத் தொழில் முதல் பல தொழில்கள் செய்துள்ளனர் என்பதை விளக்கி அதில் பெண் எங்ஙனம் நாட்டின் சமூக பொருளாதார தொழில் வளர்ச்சிக்கு உதவியுள்ளாள் என்பதை சங்க இலக்கியப் பாடல்களினின்று முன் வைக்கப்பட்டுள்ளது. இவ்வாய்வேடு குறிஞ்சி நிலத்தில் வேளாண்மையில் திணை, வரகு, சாமை, பயிரிடப்பட்ட பணியை பெண்கள் மேற்கொண்டமையை அழல் ஏர் (அகம்-188) பின் இரும் கூந்தல் (மு.கலி.111) நாற்று நடுபணியை (நற்-60) நெல் உரலில் இட்டு இடித்த பதிவு (மலை-121) இது போன்று ஐவகை நிலங்களிலும் சமூக பொருளாதார வளர்ச்சியில் பெண்கள் முன்னின்றனர் என்பதை இவ்வியல் ஆராய்ந்தளித்துள்ளது.

ஐந்து நிலங்களிலும் காணப்பட்ட பொருளாதார உற்பத்தி முறைகள் குறித்து பொதுவான நிலையில் இவ்வியலில் விவாதிக்கப்படுகிறது. மேலும் பொருளாதார உற்பத்தியில் பெண்களின் பங்களிப்பு என சிறப்பான நிலையிலும் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

## சங்கப் பொருளாதாரம்

சங்க காலத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படை மனித உற்பத்தி அடுத்து நிலம். இதனை தமிழக வரலாறு சுட்டும் ஐவகை நிலப்பாகுபாட்டின் மூலமும் அறிவோம். ஐவகை நிலங்கள் என பகுக்கப்பட்டாலும் அவை ஒன்றோடு ஒன்று தொடர்பில்லாத தனித்த அலகுகளாக இல்லை. சமூக மனிதனின் படிநிலை வளர்ச்சியில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் பாகுபாட்டின் வழி மனிதன் முன்னேறி வந்த நிலையை அறியமுடிகிறது. இத் தொகுப்பில் காணப்படும் பாடல்கள் சுமார் 400 ஆண்டுகால மனித குல வரலாற்றை எடுத்தியம்புகின்றன.

## குறிஞ்சி பொருளாதாரம்

குறிஞ்சி என்பது மலையும் மலை சார்ந்த இடமும் ஆகும். நிரந்தரமான இடம் இல்லாமல் காடுகளில் உணவுக்காகச் சுற்றித் திரிந்த தொன்மைக்கால மனிதர்கள் அல்ல சங்ககாலக் குறிஞ்சி நில மக்கள். காட்டு வாழ்வில் அதிகப்படியான வளர்ச்ச அடைந்த மனித இனமாக வாழ்ந்தனர். இவர்கள் மற்ற நால்வகை நிலங்களோடும் பொருளாதாரத் தொடர்பு கொண்டிருந்தனர். வேட்டை இனம் அல்லது தொல்குடி இனமாகிய இவர்கள் தங்களது இனக்குழு வாழ்வின் மேன்மையை இழந்துவிடாமல் காத்து வாழ்ந்தனர். இவர்களிடத்து பழைய இனக் குழுவாழ்வின் ஆதிப் பொதுவுடமைப் பண்பு நிலவியதைக் காணமுடிகிறது.

## உற்பத்தி முறை

உற்பத்தி அடிப்படையில் இந்நிலத்து மக்களை மூன்று பகுதிகளாகப் பிரித்து விளக்குகிறார் பக்தவத்சல பாரதி. வேட்டை தொழில் மட்டும் செய்யும் ஒரு வகைப் பிரிவினர். இவர்கள் காடுகளில் இயற்கையாகக் கிடைக்கும் பொருட்களை எடுத்து பயன் கொண்டவர். இரவில் நீருண்ண வரும் பன்றிகளை ‘அடார்’ என்னும் கருவி மூலம் பிடித்து உணவாகப் பயன்படுத்தினர். புதர்களில் வலையைப் போட்டு

வைத்து நாயின் உதவியுடன் முயல்களைப் பிடித்தனர். மேலும் பறவைகளுக்கு வலை விரித்து பிடித்துத் தங்களது உணவுத் தேவையை நிறைவு செய்து கொண்டனர்.

வேட்டைத் தொழில் மட்டும் செய்யும் வேட்டுவர்கள் பழங்கள், கிழங்குகள், தேன், புல்லரிசி, மூங்கிலரிசி, போன்றவற்றைச் சேகரித்தனர். அவர்கள் ஆணும் பெண்ணுமாக இணைந்து காடுகளில் உணவு சேகரிக்கும் பணிகளில் ஈடுபடுவர். மேலும் சிறுவர்களும் இவர்களுக்கு உதவும் வகையில் தங்களது பங்களிப்பைச் செய்துள்ளனர். கூட்டுழைப்பு மேற்கொண்டு கிடைத்த உணவைப் பகிர்ந்து உண்டு வாழ்ந்தமையைப் பின்வரும் புறநானூற்றுப் பாடல் விளக்குகிறது.

புது வரகு அரிகால் கருப்பை பாரக்கும்
புன்தலைச் சிறார் வில்லெடுத்து ஆர்ப்பின்[1]

புறம். 322.

இங்ஙனம் குறிஞ்சி நிலத்துச் சிறார் வரகினைத் தின்ன வரும் எலிகளைப் பிடித்துப் பகுத்து உண்டமையை மேற்கண்ட பாடல் வரிகள் விளக்குகின்றன. வேட்டையோடு சிறிய அளவிலான விவசாயப் பணிகளிலும் ஈடுபட்டோர் இரண்டாவது வகையினர் ஆவர். இவர்கள் எதிர்கால உணவுத் தேவையைப் பூர்த்தி செய்ய சேமிக்கப்பட்ட விதைகள் விதை தானியங்களாகின. *மலைப் பகுதிகளில் பயிரிடும் திணைக் குடியினராக இந்தப் பிரிவினர் வளர்ந்தனர்*. இவர்கள் பயிரிட முடியாத காலங்களில் வேட்டைத் தொழிலை மேற்கொண்டனர். ஆகையால் வேட்டையை முற்றிலுமாகக் கைவிடாமல் வாழ்ந்துள்ளனர். இவர்கள் பொதுவாக வெண்ணெல், அவரை, வரகு போன்றவற்றைப் பயிரிட்டனர்.

மூன்றாவது பிரிவு மக்கள் வேட்டையாடுதல், ஆநிரை கவர்தல், கொள்ளையடித்தல் போன்ற தொழில்களைச் செய்துள்ளனர். எயினர் எனப்படும் வேட்டுவர்கள் வேட்டை விலங்குகள் கிடைக்காத பொழுது காட்டு வழிகளில் வழிப்பறி செய்தனர். இவர்கள் ஆநிரைகளோடு *தீக்கடைக்கோலையும், வில்லையும், மத்தையும் கன்றுக் குட்டிகளையும்*

கவர்ந்து சென்றுள்ளதை அறியமுடிகிறது. குறிஞ்சி நில மக்களின் பொருளாதாரம் ஒரு கலப்பு பொருளாதாரம் என்பதை பின்வரும் கூற்று விளக்குகிறது.

> சங்ககாலத்தில் வேட்டையாடி உணவு சேகரிக்கும் இனக்குழுச் சமூக வாழ்க்கை தொடர்ந்து கொண்டிருந்த போது இவர்களில் ஒரு பிரிவினர் வேந்துவிடு தொழிலிலும் ஈடுபடத் தொடங்கினர். இதனால் சமூகப் பொருளாதார முறைகளில் கிளைச் சமூகம் தோன்றி அதுவே பின்னாளில் தனித்துவமான குழுவாகவும் மாறிவிட்டது.[2]

பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 68.

சிறய அளவில் இருந்தாலும் குறிஞ்சி நில மக்களிடம் கலப்பு பொருளாதாரம் இருந்துள்ளதைக் காணமுடிகிறது. ஒவ்வொரு பொருளாதார நடவடிக்கையும் தனித்து வளரத் தலைப்பட்டது. அதில் குறிப்பிடத் தக்கது வேந்துவிடு தொழில் ஆகும். உடனடி பலன் தரக்கூடிய வேந்துவிடு தொழில் வேட்டையாடுதல் போன்றவற்றை இம்மக்கள் மேற்கொண்டாலும், தாமதமாகப் பலன் தரக்கூடிய மலை விவசாயம், கால்நடை வளர்ப்பு போன்றவற்றையும் அம்மக்கள் மேற்கொண்டு வந்துள்ளதை அறியமுடிகிறது. கூடுமான வரையில் எல்லா வகையான பொருளாதார நடவடிக்கைகளையும் மேற்கொண்டதால் இவர்களால் உணவுத் தன்னிறைவை அடைய முடிந்துள்ளது. காட்டை எரித்து பயிரிட்டதைப் பின்வரும் சங்கப்பாடல்கள் விளக்குகின்றன.

> யாஅம் கொன்ற மரம் சுட்ட இயவில்
> பைந்தாள் செந்தினை விளைந்து கதிர்விட்டது[3]

குறுந். 198.

> மரம் கொல் கானவன் புனம்துளர்ந்து வித்திய
> பிறங்கு குரல் இறடி ஆகிவிட்டது[4]

குறுந். 214.

என்னும் இச்சங்கப் பாடல்கள் மூலம் காட்டை எரித்து அதைப் பண்படுத்தி வேளாண்மை செய்ததை அறியமுடிகிறது. பாரியின் பறம்பு நாட்டில் திணைப்புனம் விவசாயம் நடைபெற்றதை அறியமுடிகிறது. மேலும் ஐங்குறுநூற்றில் (252, 259, 266, 270, 295) ஆகிய பாடல்களிலும் அகநானூற்றில் (140, 194) ஆகிய பாடல்களிலும் நற்றிணையில் (122, 209) ஆகிய பாடல்களிலும் குறுந்தொகையில் (198, 514) ஆகிய பாடல்களிலும் புறநானூற்றில் (120, 159, 168, 231) ஆகிய பாடல்களிலும் திணைப்புன விவசாயம் குறித்து பல செய்திகள் இடம்பெற்றுள்ளன.

திணைப் புனம் காத்தல் என்பது ஒரு முக்கிய வேலையாக அன்று இருந்துள்ளது. இத்தொழிலைப் பெண்களும் மேற்கொண்டிருந்தனர். கதிர்களைக் கொத்த வரும் கிளி உள்ளிட்ட பறவைகளிடமிருந்து பயிரைக் காக்க *தட்டை, கிணை, அரிப்பறை, தண்ணுமை* போன்ற ஒலியெழுப்பும் இசைக் கருவிகளைப் பயன்படுத்தியுள்ளமையை அறியமுடிகிறது. மேலும் பயிரை உண்ண வரும் விலங்குளை வேட்டையாடுவதும் இங்கு நடைபெற்றுள்ளது. இவ்வேட்டை, பயிரைப் பாதுகாத்தோடு உணவுக்கும் பயன்பட்டது. இங்ஙனம் ஒரு கலப்பு பொருளாதார நடவடிக்கை குறிஞ்சி நிலத்தில் நிலவியதை அறியமுடிகிறது.

**மக்கள்**

இந்நில மக்களுள் *வேடர், பழையர்,* போன்றோர் வேட்டைத் தொழிலை மட்டும் செய்தோராவர். வேட்டையுடன் கூடிய விவசாயமும் செய்தோரைக் *கானக் குறவர், குன்றக் குறவர், புனக்குறவர், பல்கிளைக் குறவர், மலைஉறை குறவர், குடிக் குறவர், கானவன், சிறுகுடிக் கானவன், புனவன், நாடன், குன்றவர்* எனக் குறிக்கிறது சங்க இலக்கியம்.

குறிஞ்சி நிலத்தின் மூன்றாம் நிலை மக்கள் *எயினர், ஆறலைக் கள்வர், மழவர், மறவர், வாள்குடி மறவர்* என கூறப்பட்டுள்ளனர். இவர்களுள் மழவர்கள் ஆநிரைக் கவர்தலுக்காக தனித்தத் தேர்ச்சி

பெற்றிருந்தனர். இதனைக் *கடுங்கண் மழவர், வண்கண் மழவர், செங்கண் மழவர், கூர்ம்படை மழவர், கல்லா மழவர்,* என அழைக்கப்பட்டதன் வழி அறியலாம். இவ்வகை மக்கள் வேந்துவிடு தொழிலையும் மேற்கொண்டோர் ஆவர். இங்ஙனம் மக்கள் அவர்களின் தனித்தன்மையான தொழில்முறை அடையாளங்களோடு இனம் காணப்பட்டனர்.

**கருவிகள்**

உலகின் முதற் கருவி என்ற வரலாற்றை புரட்டினால் `கூரிய கற்கள்' என்ற அரிய கருவியை தொடக்க கால வேட்டைச் சமூகத்தின் முதல் மனிதன் பயன்படுத்தினான் என்பதை மனித குல வரலாறு நமக்குச் சொல்லிச் செல்லும். மனித குல வரலாற்றின் தொடக்க கால மக்களின் தொழில் கருவியாக கூரிய கல்லை வரையறுக்கலாம். இம்மக்கள் கூரிய கல்லைக் கொண்டே தம் வேட்டைத் தொழிலை முன்னெடுத்துச் சென்றனர். காட்டில் கிடைத்த விலங்குகளை வேட்டையாட அவனுக்கு இன்னும் நுட்பமான கருவி தேவைப்பட்டது. அத்தேவையைத் தன் அனுபவ அறிவின் வழி முயன்று பெற்றான். அது ஈட்டி என்னும் முக்கியத்துவம் வாய்ந்த ஆயுதமாகும். இது போன்ற வேட்டைச் சமூக கற் கருவிகள் பல தற்கால அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட வண்ணம் உள்ளன.

*வில், அம்பு, கவண், வேல், வலை, கண்ணி, சுருக்கு வார் பொறி* போன்றவை இவர்களின் கருவிகளாகும். இவற்றுள் வில் அம்பு இவர்களது ஆயுதங்களில் முதலிடம் பெற்றிருந்தது. இதனை *வில்லேர் உழவர்* என்னும் தொடர் விளக்குகிறது. மேலும் `அடார்' என்னும் ஒருவகை கருவியைப் பயன்படுத்தி பன்றிகளைப் பிடித்துள்ளமையைப் பின்வரும் கூற்று விளக்குகிறது.

> தினைப்புனத்திற்கு வரும் பன்றிகளை அடார் எனும் அமைப்பு மூலம் பிடித்தனர். இப்போதைய எலிப்பொறி போன்றதொரு அமைப்பைக் கல்லால் அமைத்துள்ளனர். இதைக் கொண்டு பன்றியைப் பிடித்தனர்.[5]

பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 61.

வேட்டை தொழிலை அடுத்து மேற்கொள்ளப்பட்ட காட்டெரிப்பு வேளாண்மையில் *குத்துக் கம்பு, தோண்டுகழி, களைக்கொட்டு* போன்ற கருவிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கருவிகள் விவசாயத் தோற்றத்தில் முக்கிய பங்காற்றியுள்ளன. உற்பத்தி கருவிகளின் வளர்ச்சி அச்சமூகத்தை அடுத்த கட்டத்திற்கு மாற்றும் தன்மையைப் பெற்றிருந்தன என்பதை இதன்மூலம் தெளியமுடிகிறது.

**உணவுகள்**

*உடும்பு, நுணல், ஈயல், முயல், பன்றி, முள்ளம்பன்றி, மான், புலி, யானை,* போன்றவற்றின் இறைச்சியை வேட்டைப் பொருளாதாரம் வழங்கியது. *கிழங்கு, வரகு, தினை,* எள் போன்றவை காட்டெரிப்பு வேளாண்மையின் மூலம் பெறப்பட்ட உணவுகளாகும். தாவர வகை உணவும் மாமிச வகை உணவும் இவர்களது உணவில் சமமாக இருந்துள்ளன. `கள்' இவர்களது உணவில் முக்கிய இடம் பெற்றுள்ளது

**முல்லை பொருளாதாரம்**

மலைகளில் மிக அரிதாகவே கிடைத்த உணவுகள் போதாமையின் நிலையறிந்து இடப்பெயர்வு தேவையை உணர்ந்து முல்லை உருவானது. பின்னர் மலைமேடுகளும் புன்செய் நிலமாகின. முல்லை நிலங்களில் கீற்றுகள் வேய்ந்து வாழும் இல்லங்களாக்கினர். எதிர்கால உணவுத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள, உணவுப் பொருட்களை சேமிக்கும் வழக்கதை உருவாக்கிக் கொண்டனர்.

சிந்திக்கும் ஆற்றல் பெருகிய இனகுழுக்கள் பெருகின, குடும்பங்களாகின. காடுகளில் ஆங்காங்கே வாழும் குழுக்கள் திசைச் சார்ந்த இனக்குழுக்களாகின. அதனால் தாங்கள் வாழும் மலை சார்ந்த மலைச் சரிவு மேட்டு நிலங்களைத் தங்களுக்குரிய சிறு விளைநிலப்பகுதியாக ஆக்கிக் கொண்டனர். எனினும் இனக்குழுக்களின் `பாதீடு' சார்ந்த சிந்தனை முறையானது தமிழப் பண்பாட்டில் தனித்துவமானது.

காடும் காடு சார்ந்த இடமும் முல்லை எனக் கூறுகிறது தொல்காப்பியம். இதற்கான உரிப் பொருளாக இருத்தலும் இருத்தல் நிமித்தமும் கூறப்படுகிறது. மரங்கள் அடர்ந்த காட்டுப் பகுதி *முல்லை, புறவு, வன்புலம், கானம்* என்னும் பெயர்களைப் பெற்றுள்ளது. மேய்ச்சல் பகுதி *விடுநிலம்* என அழைக்கப்பட்டது. தரிசு நிலம் கொல்லை எனப்பட்டது. மரங்களை அழித்து உருவாக்கப்பட்ட புதிய பயிர் நிலங்கள் `இதை' என்ற சொல்லால் குறிக்கப்பட்டன. பழைய விளை நிலங்கள் `முதை புனம்' (குறுந். 155) என்றும் அழைக்கப்பட்டன. இம்மக்களின் வாழிடம் குரம்பை என்றும் காட்டு நாடு என்றும் அழைக்கப்பட்டன. இத்தரவுகள் அனைத்தும் சங்கப் பாடல்களில் இருப்பதைக் காணமுடிகிறது.

**உற்பத்தி முறை**

ஆயர் குலம் என்பது உலகம் முழுவது மேய்ச்சலுக்காகக் கால்நடைகளை வேறு வேறு இடங்களுக்கு ஓட்டிச் சென்று ஆங்காங்கே தங்கும் வழக்கம் உடையது. ஆனால் சங்க காலம் காட்டும் முல்லை நிலத்தோர் மேய்ச்சல் தொழிலுடன் விவசாயமும் மேற்கொண்ட மக்கட் தொகுதியினர் ஆவர். ஆகையால் இவர்கள் அன்றன்றைக்கு வீடு திரும்பும் மேய்ச்சல் தொழிலை மேற்கொண்டிருந்தனர். அதோடு விவசாயத்தையும் கவனித்துக் கொண்டனர். நீண்டகாலம் நீடிக்கும் மேய்ச்சல் தொழிலையும் இம்மக்கள் மேற்கொண்டனர்.

**கால்நடை வளர்ப்பு**

காடுகளில் தங்கி வாழ்ந்த இடையர்களைக் *காடுறை இடையர்* என சங்க இலக்கியம் குறிக்கிறது. இவர்கள் எருமை, பசு, ஆடு, காளை போன்றவற்றை வளர்த்தனர். ஆடுகளில் வெள்ளாடு , செம்மறி ஆடு ஆகிய இரண்டையும் வளர்த்துள்ளனர். மாடுகளை வளர்த்த ஆயர்கள் *நல்லினத்தாயர்* என்றும், *கோவினத்தாயர்* என்போர் பசுக்களை வளர்த்தோர் என்றும், *புல்லினத்தாயர்* ஆடுகளை வளர்த்தோர் என்றும் அறியமுடிகிறது. இப் பெயர்களில் காணப்படும் அர் விகுதியில் ஆண் பெண் இருபாலரும் குறிக்கப்படுவதை அறிவோம். இவர்கள் பருவ

நிலைக்கு ஏற்ப வேறு வேறு இடங்களில் கால்நடைகளை மேய்த்துள்ளனர். இதனைப் பின்வரும் நெடுநல்வாடை வரிகள் விளக்குகின்றன.

ஆர்கலி முனைஇய கொடுங்கோற் கோவலர்
ஏறுடை இனநிரை வேறுபுலம் பரப்பில்
புலம்பெயர் புலம்பொடு கலங்கிக் கோடல்[6]

நெடுநல். 3-5.

இப்பாடலில் மழைக்காலத்துக்குப் பிறகு மேட்டுநிலங்களுக்கு ஓட்டிச் சென்று கால்நடைகள் மேய்க்கப்பட்டதைக் காணமுடிகிறது. முல்லை நிலப் பகுதியில் *ஏறு தழுவல், குரவையாடுதல்* போன்ற கலைகள் காணப்பட்டன. பசுக்கூட்டங்கள் அதிகமாக இருந்த இடங்கள் *பல்லான் குன்றம்* என்றழைக்கப்பட்டது. கால்நடைகளை வளர்த்தல் என்பது முல்லை நில மக்களின் ஒரு முக்கியத்துவம் வாய்ந்த தொழிலாக இருந்துள்ளதைக் காணமுடிகிறது.

**விவசாயம்**

கால்நடை வளர்த்தல் என்பதோடு ஒத்திசைவான வகையில் இம்மக்கள் விவசாயம் மேற்கொண்டுள்ளனர். நீர் ஆதாரத்திற்கு வானத்தை நம்பியிருந்தனர். இவர்கள் பயிரிட்ட பகுதி வன்புலம் எனப்பட்டது. ஆயர் மக்களுக்கு இது ஒரு துணைப் பொருளாதாரமாக அமைந்தது. நீர்வளமும், நிலவளமும் ஒருங்கே அமைந்த இடத்தில் மேய்ச்சலுடன் கூடிய புன்செய் விவசாயத்தையும் செய்தனர். இதனைப் பின்வரும் நற்றிணைப் பாடல் விளக்குகிறது.

கொல்லைக் கோவலர் குறும்புனஞ் சேர்ந்த
குறுங்காற் குரவின் குவியிணர் வான்பூ
ஆடுடை இடைமகன்.[7]

நற். 266. 1-3.

தரிசாக இருந்த முல்லை நிலப்பகுதிகளாகிய *முதையல்* என்னும் இடத்தை *கலப்பை கொண்டு உழுது* பயிரிட்டுள்ளனர். இவர்கள் *கொல்லைக் கோவலர்* என அழைக்கப்பட்டனர். *விதையர் கொன்ற முதையல் பூமி* (நற். 121.) என்னும் வரியில் முதையல் என்னும் முல்லை நிலத்தில் விதைத்து பயிரிட்டோர் விதையர் என அழைக்கப்பட்டிருக்கலாம் என்பதை அறியமுடிகிறது. குறிஞ்சி நிலத்தைப் போலவே முல்லை நிலத்திலும் காட்டை எரித்து வேளாண்மை செய்துள்ளமையை அறியலாம். பின்வரும் பெரும்பானாற்றுப்படைப் பாடலில் முல்லை நிலத்தின் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது.

குடிநிறை வல்சிச் செஞ்சா லுழவர்
நடைநவில் பெரும்பகடு *புதவிற் பூட்டிப்*
பிடிவா யன்ன மடிவாய் நாஞ்சி
லுடுப்புமுக முழுக்கொழு மூழ்க வூன்றித்
தொடுப்பெறிந் துழுத துளர்படு துடவை
யரிபுகு பொழுதி னிரியல் போகி
வண்ணக் கடம்பி னறுமல ரன்ன
வளரிளம் பிள்ளை தழீஇக் குறுங்காற்
கறையணற் குறும்பூழ் கட்சிச் சேக்கும்
வன்புலம்[8]

பெரும். 197-206.

இங்கு சுட்டப்படும் முல்லை நிலம் மருத நிலத்திற்கு அருகில் அமைந்தது எனக் கூறப்பட்டுள்ளது. பயிரிடற்கு அரிய வன்புலமாக இருப்பினும் அம்மக்கள் தம் உழைப்பின் உறுதியால் செழிப்பான விளைச்சலைப் பெற்றுள்ளமையை அறியமுடிகிறது. முல்லை நிலத்தில் பயிரிடுவோரின் குடியிருப்பு குறித்து கூறப்பட்டுள்ளது. இம்மக்களின் உழவு நிலம் இவர்களது குடியிருப்பிற்கு அருகில் அமைந்துள்ளதையும் காணமுடிகிறது. அவ்வயல்களில் நுகத்தடி பூட்டப்பட்ட எருதுகளைக் கொண்டு உழுது, விளைவித்து களை பறித்து பயிர் விளைவிப்பர்.

அறுவடைக்காலத்தில் அவர்கள் எழுப்பும் பேரிரைச்சலுக்கு அஞ்சி அருகில் இருந்த மரங்களில் குஞ்சு ஈன்ற பறவைகள், பறக்க இயலாத தம் குஞ்சுகளை அழைத்துக் கொண்டு கானகத்திற்குச் சென்று வாழும் தன்மையுடயது எனக் கூறப்பட்டுள்ளது. புன்செய் வேளாண்மை குறித்த மாதையனின் கூற்று குறிப்பிடத் தக்கது.

> புன்செய் வேளாண்மை குறிஞ்சி, முல்லை எனும் இரு திணைகளிலும் முக்கிய வேளாண்மையாய் இருந்துள்ளது. குறிஞ்சி நிலப் பகுதிகளை ஆண்ட குறுநிலமன்னர் பற்றிய பாடல்களில் புன்செய் வேளாண்மையின் சிறப்பும் பாடப்பட்டுள்ளது. பாரியின் பறம்பு நாடு `மென்தினை யாணர்த்து' (புறம் 199: 4) எனத் தினை எனும் புதுவருவாய் உடையதாய்ப் புகழப்பட்டுள்ளது. பேகன் நாடும் தினையைப் புது வருவாயாக உடைய நாடாகக் காட்டப்பட்டுள்ளது (புறம் 168 : 6-7) தினை 80 இடங்களில் சங்க இலக்கியங்களில் வந்துள்ளது. பெரும்பாலும் இது குறிஞ்சித் திணையிலும் சிறுபான்மை பிற திணைகளிலும் (முல்லை - மது. 271, கலி. 108. 33, நெய்தல் - நற். 267 : 4, குறு. 397 : 1) வந்துள்ளது. நெய்தல் திணையில் உவமையாக `உணங்கு தினை துழவும் கைபோல' (267), `தினைமருள் திரள்வீ' (397) எனவும் ஆளப்பட்டுள்ளது.[9]

மாதையன். பெ, சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப. 27.

தினை என்னும் புன்செய் நிலப் பயிர் விளைவிக்கப்பட்ட விவரத்தை மேற்கண்ட கூற்று விரிவாக விளக்குகிறது. பன்றிகள் காந்தள் கிழங்கினைக் கிளறி உண்ட இடம் உழுத நிலம் போல் இருந்தமையால் அதில் தினை விதைத்துப் பயிரிடப்பட்டுள்ளது. மேலும் பாரியின் பறம்பு நாட்டில் முறைப்படுத்தப்பட்ட விவசாயத்தில் தினை விளைவிக்கப்பட்டு உள்ளமையை அறியமுடிகிறது.

முல்லை நிலத்தில் வரகு அதிக அளவில் பயிரிடப்பட்டுள்ளது. நீர் வளமற்ற, மழை பொழிவின் போது அதிக அளவு நீரைத் தேக்கி வைக்க முடியாத நிலமாக முல்லை நிலம் இருந்துள்ளது. இந்நிலத்தில்

பயிரிடப்பட்ட உணவுப் பொருள் அவ்வூர் மக்களுக்குப் போதுமானதாக இல்லை என்றும் அறியமுடிகிறது. குறிஞ்சியின் ஒரு பகுதி மக்களைப் போலவே முல்லையின் ஒரு பகுதி மக்களும் வேந்து விடு தொழிலை மேற்கொண்டுள்ளனர். குறிஞ்சி நிலத்தைப் போல் முல்லை நிலப் பொருளாதாரமும் ஒரு கலப்புப் பொருளாதாரமாகும்.

**மக்கள்**

*எருது வளர்த்தோர் அண்டர்* எனவும், பசு, ஆடு, எருமை, காளை போன்றவற்றை வளர்த்தோர் ஆயர் எனவும் ஆடுகளை வளர்த்தோர் இடையர் எனவும் அழைக்கப்பட்டனர். இவர்களுள் *கோவலர் என்று அழைக்கப்பட்டோர் சமூகப் படிநிலையில் உயர்ந்தோராக இருந்துள்ளனர்.* இவர்களது *குடிசைகள், முற்றம், பந்தல், வேலி* ஆகியவை கொண்டிருந்தன எனக் கூறப்படுகிறது. ஆனால் இடையர் குடிசை பற்றிய செய்திகள் ஏதும் காணப்படவில்லை. சங்க கால முல்லைத் திணை மக்களைப் பற்றி பின்வரும் கூற்று சிறப்பாக விளக்குகிறது.

> ஆயர் குடிகளில் அண்டர், ஆயர், இடையர், கோவலர், பூழியர் ஆகியோர் ஆநிரை மேய்த்தனர். பொதுவர் மேய்ப்பவர்களாக விளங்கினார்கள். சங்க இலக்கியங்களில் ஆயர் 25 இடங்களிலும் கோவலர் 39 இடங்களிலும், இடையர் 10 இடங்களிலும் அண்டர் 4 இடங்களிலும் குறிக்கப்பெறுகின்றனர். இவற்றைப் பார்க்கும் போது ஆயர், இடையர், கோவலர் ஆகியோரே முக்கியமான முல்லைத் திணைக் குடிகளாக அறியப் பெற்றனர்.[10]

பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 101.

என்னும் கூற்றின் மூலம் முல்லைத் திணை மக்கள் பல பெயர்களில் வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. சங்க கால முல்லை நிலத்தில் வாழ்ந்த பெண்கள் பொருளாதாரத்தில் தங்களது பங்களிப்பினை வழங்கியுள்ளனர். பால், மோர், வெண்ணெய், நெய் போன்றவற்றைக் கொடுத்துப் பண்டமாற்றாக நெல், பசு, எருமை போன்றவற்றைப் பெற்று வந்துள்ளமையை அறியமுடிகிறது. அக்காலகட்டத்தில் கால்நடைகள்

பணத்தின் பாத்திரத்தை வகித்தன என எங்கல்ஸ் கூறுகிறார். மக்களின் பொருளாதாரத் தேவைக்கான பொருளாகப் பார்க்கப்பட்டன.

> கால்நடை என்ற பண்டமே மற்ற எல்லாப் பண்டங்களையும் மதிப்பிடுவதற்குரிய பண்டமாக ஆயிற்று. மற்ற பண்டங்களுக்கு மாற்றுப் பண்டமாக அது எங்கும் மறுப்பில்லாமல் பெற்றுக் கொள்ளப்பட்டது. சுருக்கமாகக் கூறினால் அது பணத்தின் செயலை மேற்கொண்டது. இந்தக் கட்டத்தில் அது பணத்தைப் போலவே பயன்பட்டு வந்தது.[11]

எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப. 257.

கால்நடை வளர்ப்போரின் சொத்தாக கால்நடைகள் கருதப்பட்டன. இனக்குழுவின் கட்டுப்பாட்டில் இருந்த கால்நடைகள் தனிநபர்களின் கைகளுக்கு வந்ததும் அதைப் பண்ட மாற்றுக்காகப் பயன்படுத்துவது எளிமையாற்று. இதன்மூலம் பண்டமாற்றிற்குப் பணம் என்ற தனித்த பொருள் வேண்டும் என்னும் தேவை அக்காலத்தில் உருவாகிவிட்டது என்பதை அறியமுடிகிறது. *முல்லைப் பொருளாதாரம் தொடக்கக் காலத்தில் குறிஞ்சி வாழ்விலிருந்து பிரியாமல் இருந்துள்ளது*. கால்நடை வளர்த்தல் ஒரு தனித்த தொழிலாக வளர்ச்சி பெற்றதைக் காணமுடிகிறது. முதலில் தோன்றிய பெரிய அளவிலான தொழில் பிரிவினை எனக் கால்நடைகள் வளர்த்தலைக் கூறுகிறார் எங்கல்ஸ். இது சமூகத்தின் அடுத்தகட்ட வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தது.

## கருவிகள்

முல்லை நிலத்தில் வாழ்ந்த மக்களுக்குக் கால்நடைகள் அடிப்படை. கால்நடை மேய்ப்பதற்கும், அவற்றை பாதுகாப்பதற்கும் அவர்கள் தனித்த கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். *கணிச்சி என்னும் கோடரி, ஆநீர்ப் பத்தல் எனப்படும் நீர் பிடிக்கும் மரக்கருவி, கடைக்கோல், பறி எனப்படும் மூடும் பாய், உறி, கலசம்* போன்றவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். இவற்றுள் தீக்கடைக் கோல்,

பாய், உறி, கலசம் போன்றவை அவனது பயன்பாட்டுப் பொருட்கள் ஆகும். ஏனையவை உற்பத்திக் கருவிகளாகும்.

**உணவுகள்**

வேட்டைத் தொழிலால் கிடைத்த பன்றி, முள்ளம்பன்றி, யானை, முயல் போன்ற விலங்குகளின் இறைச்சியை உண்டனர். கால்நடைகளிலிருந்து கிடைத்த பால், தயிர், நெய் போன்ற பால் பொருட்களை உட்கொண்டனர். மேலும் புன்செய் நிலப் பயிர்களை விளைவித்து அதன்மூலம் கிடைத்த வரகு, தினை, எள், அவரை, வெண்ணெல் போன்றவையும் இந்நில மக்கள் முக்கிய உணவாக இருந்துள்ளன. கள்ளையும் இம்மக்கள் உண்டனர்.

**மருதப் பொருளாதாரம்**

மருத நில மக்கள் சமவெளி நிலங்கள், தேங்கும் நீர் நிலைகள், ஆற்றுப் படுகைகள் போன்றவற்றை தேடிக் கண்டடைந்து பயிரிட ஏதுவான, நிலைத்த வாழ்க்கை வாழ்ந்த மக்கள் தொகுதியினர். தொடக்த்தில் எளிய விளைச்சல் பகுதிகளாக உருவாக்கிக் கொள்ள முனைந்தனர். அவர்களது முனைப்பில் விளைந்த நிலமே நன் செய் நிலமாகும். நன்றாகப் பயிரிட, வரப்பமைத்து நீர் பாய்ச்ச வசதியான நிலம் என்ற பொருள் கொள்ளும் வகையில் அந்நிலங்கள் மக்களால் நன்செய் என உச்சரிக்கப்பட்டன. புன் செய் வேளாண்மை என்ற மேட்டு நிலத்தில் விளைச்சல் கண்ட 'அனுபவ அறிவு' சமவெளிப் பகுதியில் பெரு விளைச்சல் தரும் பாசன வசதி கொண்ட பகுதிகளில் பயிரிடுவதற்கு பலமாக, அமைந்தது. நெல்மணிகளைப் பெரும் மதிப்புமிக்க அணிமணிகளைப் போல மதித்தனர் மருத நில மக்கள். உணவுத் தேவையை முழுமையாக நிறைவேற்றிக் கொள்ள கிடைத்த அரிய பழைமையான விளைநிலம் நன்செய் என்பதை இம்மக்கள் அறிந்திருந்தனர்.

விளை – விளைச்சல், எப்போதும் விளையும் பயன்கிடைக்கும், தேவை நிறைவு கொள்ளும் என்ற பொருண்மைகளோடு பொருள் தரும்

களம் தான் விளைநிலம் என சங்க சான்றோர் கருதினர். `உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர்' என்ற வள்ளுவரின் வாக்கிற்கு ஏற்ப கலப்பை என்னும் ஆயுதத்தைக் கண்டு பிடித்தனர். வேளாண் மக்கள் குறைவில்லாமல் தம் உணவுத் தேவையை நிறைவு செய்துகொண்டனர். ஆகவே `உழுபடை'க்கருவியான `கலப்பை'யை உணவு உற்பத்தியின் முதல் ஆயுதமாக நம்மிடம் மொழிந்து சென்றனர் அக்காலப் புலவர்கள். கலப்பை என்ற ஆயுதம் தொல் குடி சமூகத்தின் நுண்ணறிவு கொடை எனின் சிறப்பு.

நாகரிகக் காலத்தின் தொடக்கக் கட்டத்தில் கால்நடை வளர்த்தல், பயிர்த்தொழில், வீட்டில் செய்யும் கைத் தொழில் ஆகிய எல்லாத் துறைகளிலும் உற்பத்தி பெருகியது. மனிதனது உழைப்பின் திறத்தால் வாழ்க்கைக்கு வேண்டியதைக் காட்டிலும் அதிகமாக உற்பத்தி செய்ய முடிந்தது. ஒவ்வொரு தனிமனிதனின் உற்பத்தியும் அதிகரித்தது. உழைப்புச் சக்தியின் தேவை அதிகரித்தது. அத்தேவை போர்களின் மூலம் தீர்த்துக் கொள்ளப்பட்டது. போரில் வெல்லப்பட்டவர்கள் அடிமைகள் ஆக்கப்பட்டனர். இவ்வடிமைகளின் உழைப்பைக் கொண்டு பேரளவில் உற்பத்தி செய்து குவிக்கப்பட்டது. இக்காலகட்டத்தில் ஒரு புது வகை உற்பத்தி உறவு உருவாகியது. அது ஆண்டான் (எசமானர்) அடிமை சமூக அமைப்பு என அழைக்கப்பட்டது. சங்க காலம் காட்டும் மருதப் பொருளாதாரம் ஆண்டான் அடிமை எனும் உற்பத்தி முறையினால் உருவாக்கப்பட்டது என்பதை அறியமுடிகிறது. இந்த புதிய உற்பத்தி முறையின் வளர்ச்சியைப் பின்வருமாறு பட்டியலிடுகிறார்.

> இரண்டாவது உழைப்பு பிரிவினை ஏற்பட்டது. விவசாயத்திலிருந்து கைத்தொழில்கள் பிரிந்தன. உற்பத்தி தொடர்ச்சியாக அதிகரித்து அதனுடன் உழைப்புத்திறனும் அதிகரித்தபடியால் மனித உழைப்பு சக்தியின் மதிப்பு உயர்ந்தது. முந்திய காலகட்டத்தில் ஆரம்ப நிலையிலும் அங்கும் இங்குமாக இருந்த அடிமைமுறை இப்போது சமூக அமைப்பின் ஒரு பகுதியாகிவிட்டது.[12]

எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப. 262

அடிமைகள் உதவியாளர்களாக இருந்த நிலை மாறி அவர்கள் சமூக உற்பத்தியில் பெரும் அளவில் ஈடுபடுத்தப்பட்டதை மேற்கண்ட கூற்று விளக்குகிறது. விவசாயமும் கைதொழில்களும் பிரிந்த நிகழ்வு பணத்திற்காகப் பண்டத்தை உற்பத்தி செய்யும் நிலைக்கு காரணமாக அமைந்தது. பணம் என்பது இங்கு தங்கம் வெள்ளியைக் குறிக்கும். இவ்வுற்பத்தி முறையைப் பொருளாதார அறிஞர்கள் பண்ட உற்பத்தி முறை என்கின்றனர். பயன்பாட்டிற்காக உற்பத்தி செய்தது மாறி, பரிவர்தனைக்காக, பண்டமாற்றத்திற்காக உற்பத்தி செய்தல் என்னும் நிலைக்கு வந்த காலகட்டம் மருத நில காலமாகும். இக்காலகட்டத்தில் கண்டறியப்பட்ட இரும்பு முக்கியத்துவம் வகிக்கிறது. நிலத்தை ஆழமாக உழ கலப்பையின் அடிப்பகுதியில் கொழு என்ற கூரிய அமைப்பு இரும்பால் பொருத்தப்பட்டது. கொழு உள்ளிட்ட இரும்பு கருவிகள் செய்ய கொல்லர் குழுவும் உருவாகிவிட்டிருந்தது. பின்வரும் கூற்றும் இதை உறுதி செய்கிறது.

> சங்க காலத்தில் இரும்பு முக்கிய உலோகமாய் பயன்பட்டுள்ளது. வாள், வேல், போன்ற படைக்கலன்கள் செய்யப் பயன்பட்டதைப் போல் இரும்பு ‘கொழு’ செய்யவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இரும்புக் கொல்லர் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் பரவலாய் இடம்பெற்றுள்ளன (பெரும். 207, 437, புறம். 217, 36 6, 170 15,180 12, 312 3, அகம். 202 5, 224 2, நற். 133 9, 125 3, 13 5). கொல்லர் கொழு செய்ததற்கான குறிப்பு எங்கும் இல்லை என்றாலும் மிகுதியாய் பயன்படுத்தப்பட்ட இரும்பு, போர்க் கருவிகளை உருவாக்கப் பயன்பட்டதைப் போல் முக்கியத் தொழிலான உழவுக்குரிய கொழு செய்யவும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.[13]

மாதையன். பெ. சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப. 33.

வரலாற்றில் மனிதனுக்குப் புரட்சிகரமான பாத்திரத்தை வழங்கியவற்றுள் இரும்பும் ஒன்றாகும். இரும்பின் பயன்பாடு அதிக அளவிலான காட்டை

வெட்டி வேளாண்மைக்கு உரியதாக மாற்றுவதில் முக்கியத்துவம் பெற்றது.

மேலும் வேளாண்மைக்கு உரிய நிலங்களை உழுது பயிர் செய்வதில் கலப்பை உருவாக்கம் பெரும் பங்கை ஆற்றியுள்ளது என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது. போர் தொழிலிலும் இரும்பு பெரும் அளவில் பயன்படுத்தப்பட்டு அடிமைகள் பெருக்கத்திற்கு வழி வகுத்தது. விளைச்சலும் பொருளாதார வளர்ச்சிப் பெருக்கமும் வந்த பின் போர்க்களத்தின் வினையாடல்கள் நிகழ்ந்திருக்கின்றன என்பதை நாம் அறிவோம்.

**உடைமை**

தனியுடைமை வளர்ந்து அரசு தோற்றத்திற்குக் காரணமாக அமைந்தது மருத நிலமாகும். மருத நிலத்தில் வர்க்கம் ஓரளவிற்குத் தெளிவாகத் தெரியும்படி பிரிந்துவிட்டிருந்தது. நால்வகை வர்ணம் என்னும் திரையிட்டு மூடப்பட்டிருந்தாலும், வர்க்கப் பிரிவைக் காணமுடிகிறது. சங்க காலத்தின் வர்க்க நிலையை ஜோதிராணி பின்வருமாறு விளக்குகிறார்.

> அன்றைய குலமாக, வகுப்பாக, வருணமாக, பகுப்பாக தொழிற்பிரிவாகச் சங்ககாலம் தொட்டு இருந்தே இன்றைய சாதி எனத் தொடர்ந்து கற்பிக்கப்பட்டு வருகிறது. தொழில் அடிப்படையிலேயே மக்கள் பகுப்புச் செய்யப்பட்டிருந்ததாகப் பதிவுகள் இருந்தாலும் அவை உடைமை, ஆதிக்கம் என்பதாகவே அடமை, கீழ் என்பதன் உள்ளீடாக இருப்பதையும் அறிய முடிகிறது.[14]

க. அ. ஜோதிராணி, தமிழ் இலக்கியங்கள் சமுதாய அடையாளங்கள், ப.10.

நிலத்தை உடைமையாகக் கொண்டோர் உழுவித்துண்போர் என்றும் அதில் வேலை செய்வோர் உழுதுண்போர் எனவும் சுட்டப்பட்டுள்ளனர். உழுவித்துண்போரின் செல்வ செழிப்பு மிக்க வாழ்வையும்,

உழுதுண்போரின் வசதியற்ற வாழ்வையும் பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது.

இரும்புவடித் தன்ன மடியா மென்றோற்
கருங்கை வினைஞர் காதலஞ் சிறாஅற்
பழஞ்சோற் றமலை முனைஇ வரம்பிற்
புதுவை வேய்ந்த கவிகுடின் முன்றி
லவலெறி *யுலக்கைப்* பாடுவிறந் தயல
கொடுவாய்க் கிள்ளை படுபகை வெரூஉம்
நீங்கா யாணர் வாங்குகதிர்க் கழனிக்
*கடுப்புடைப்* பறவைச் சாதியன்ன
பைதற விளைந்த பெருஞ்செந் நெல்லின்
ஏணி யெய்தா நீணெடு மார்பின்
முகடுதுமித் தடுக்கிய *பழம்பல் லுணவிற்*
குமரி மூத்த கூடோங்கு நல்லிற்
றச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
வூரா நற்றே ருருட்டிய புதல்வர்
தளர்நடை வருத்தம் வீட வலர்முலைச்

செவிலிஅம் பெண்டிர்த் தழீஇப் பாலார்ந்
தமளித் துஞ்சு மழகுடை நல்லிற்
றொல்பசி யறியாத் துளங்கா விருக்கை
மல்லற் பேரூர் மடியின் மடியா
வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி[15]

பெரும். 222 -255.

என்னும் பாடல் அடிகளில் உழைக்கும் மக்களின் வீட்டில் பழைய சோறு மட்டும் இருந்ததாகவும், அந்த வீட்டில் எப்பொழுதும் அவல் இடிக்கும் ஓசை கேட்டு கிளிகள் பயம் கொள்வதாகவும் *கடியலூர் உருத்திரங்கண்ணனார்* கூறுகிறார்.

இதன்மூலம் அவ்வீட்டில் எப்பொழும் வேலை நடைபெற்றுக் பொண்டிருக்கிறது என்பதைக் காட்டுகிறார். *செல்வந்தர் வீட்டில் ஏணியை விட உயரமான நெல் கூடு இருந்ததையும், அவர்கள் வீட்டு குழந்தைகள் சிறுதேர் உருட்டி விளையாடிய களைப்பு தீர செவிலித் தாய் ஊட்டிய பாலை உண்டுவிட்டு தூங்குவர் எனவும் கூறுகிறார். இது வர்க்கப் பிரிவினைக்குச் சிறந்த சான்றாக அமைகிறது. மருத நிலப் பாடல்களில் தொழிலைக் குறிக்கும் பெயர்களை விட உடைமையைக் குறிக்கும் பெயர்கள் அதிகமாக காணப்படுகின்றன.* உடைமைச் சமூகத்தின் வளர்ச்சியில் அரசு உருவாகியதைப் பின்வரும் கூற்று விளக்குகிறது.

> மருத நில வாழ்க்கை மற்ற நில வாழ்க்கைகளிலெல்லாம் செழிப்பு மிக்கதாயிருந்தது. இங்கு குழு வாழ்க்கை அழிந்தது. அரசு தோன்றியது. பிற மக்களையும் அரசில் இணைத்துக் கொள்ள பல போர்கள் நிகழ்ந்தன. குழுவாழ்க்கை இழந்த மக்கள் மருதநில மக்ககளின் உழைப்பாளிகளாயினர்[16]

மாதையன். பெ. சங்க இலக்கியத்தில வேளாண் சமுதாயம், ப. 40.

இங்கே வர்க்க பேதமும், மேல்கீழே என்ற பொருளாதார முரணும் தோன்றி வளர்ந்து விட்டன. ஆனால் இக்காலத்தில் கொள்ளையடிக்க போர் செய்துள்ளதை அறியமுடிகிறது. இது உடைமை ஓரிடத்தில் குவியும் போது உண்டாகும் நிகழ்வு ஆகையால் போர் செய்யும் ஒவ்வொரு அரசும் பாதுகாப்பிற்காக, அரண்களையும் அகழிகளையும் அமைத்துக் கொள்ள வேண்டியது தேவையாக அமைந்தது. புறநானூறு காட்டும் இச்சித்திரம் உலகின் பல்வேறு இடங்களிலும் காணப்பட்டதை அறியமுடிகிறது.

**மக்கள்**

உழவுத் தொழிலில் ஈடுபடுவோரைக் குறிக்கப் பல சொற்கள் சங்க காலத்தில் பயன்படுப்படுத்தப் பட்டுள்ளன. *அகவர், உழவர், உழவன், ஏராளர், ஏரின்வாழ்நர், ஏரோர், தொழுவர், அரிஞர், அரிநர், அரிவணர்,*

*அரிவார், கடைசியர், களமர், புனவன் என்னும் பெயர்கள் வழக்கில் இருந்துள்ளன. நிலத்தையும் கால்நடைகளையும் உடைமையாகக் கொண்டோரைக் கிழமை, கிழமையர், கிழவ, கிழவர், கிழவன், கிழவிர், கிழவோய்* எனக் கூறுவதைக் காணமுடிகிறது. தற்காலத்திலும் அதிக அளவிலான நிலத்திற்கு உடைமையாளரை நிலக்கிழார் என்று குறிக்கும் வழக்கம் இருப்பதை அறியமுடிகிறது.

'*குடிபுறந்தருநர்*' எனும் சொல் பதிற்றுப் பத்தில் இடம் பெற்றுள்ளது இதற்கு உரை எழுதிய ஔவை சு. துரைசாமிப் பிள்ளை *குடிப்புறந்தருநர் உழுவிப்போர் குடிகள் உழுவோர் என்கிறார்*. குடிபுறந்தருநரின் கீழ்க் குடிகள் அதிக அளவில் அவரைச் சார்ந்து வாழ்ந்தனர். ஆகையால் இவர்கள் அச்சுற்றத்தைக் *குடிபுறந்தருநரின் பாரம்* எனக் குறித்தனர். *பகடு புறந்தருநர் பாரமோம்பி (புறம் 35)* என்று மற்றொரு பாடலிலும் இக்குடிகள் குடிபுறந்தருநரைச் சார்ந்து வாழ்ந்தனர் என்பதை விளக்குகிறது. இவ்வாறு குடிகள் உழுகுடிகளாகவும், குடிபுறந்தருநர் பெரும் உழவர்களாகவும் இருந்துள்ளமையைக் காணமுடிகிறது.

**கருவிகள்**

மருத நிலத்தின் முக்கியத் தொழில் உழவு. ஆகையால் கலப்பை சங்கப்பாடல்களில் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளது. இக்கருவி உழுபடை, நாஞ்சில், கலப்பை என்னும் பெயர்களில் குறிக்கப்பெற்றுள்ளது. கலப்பையின் மற்றொரு பெயராக 'ஏர்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஏரின் உறுப்புகளாகிய கொழு மற்றும் நுகம் போன்ற கருவிகளைக் குறித்தும் சங்கப்பாடல்கள் விளக்குகின்றன. கொழு என்னும் பொருள் இரும்பினால் உருவாக்கப்பட்டு பயன்கொள்ளப்பட்டதை அறியமுடிகிறது. 'கொழுக் கொம்பு' என்ற தொடரும் சமகால வழக்கத்தில் உறுதுணையான என்ற பொருளோடு பேசப்பட்டு வருவதை அறிவோம்.

**கலப்பை**

உழுதலுக்கு அடிப்படையாக அமைந்த ஆயுதம் 'கலப்பை' ஆகும். நிலத்திலுள்ள உறுதியாகிய மண்ணினைக் கீழ் மேலாகக் கலப்பது கலப்பை. நிலத்தை கீழ் மேலாகக் கலக்கப் பயன்படுத்தப்படும் கலப்பை என்ற கருவியின் பெயர் காரணப் பெயராக அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. மக்களை காக்கும் உழும் 'படைக் கருவி'யாக நமக்கு கிடைக்கிறது. இது தமிழ்த் தொல்குடிப் பண்பாட்டுச் சிறப்பாகும். மருத நிலத்தின் நாகரீக வளர்ச்சிக்கும் பண்ட மாற்று வணிகச் சிறப்புக்கும் பெரும் பொருளீட்டும் தொழில்களுக்கும் வேளாண் உற்பத்திப் பெருக்கத்திற்கும் மொத்தத்தில் பொருளாதார வளர்ச்சிக்கும் அடிப்படையான உழுபடைக்கருவி கலப்பை ஆகும். உழவில் தமிழரின் வேளாண் ஆயுதத்தின் பங்கு என்றென்றும் போற்றிப் பார்க்கத் தக்கது.

பெரும்பாணாற்றுப்படையில் (188) உழுதலுக்குரிய கருவி என்ற பொருளில் கலப்பை என்ற சொல் பயின்று வந்துள்ளது. மேலும் நாஞ்சில் என்ற சொல்லும் இக்கருவியைக் குறித்து நிற்கிறது. கலப்பையில் இரும்பு கொழு பயன்படுத்தப்பட்ட செய்தி சங்கப் பாடல்களில் கிடைக்கிறது. கொழு என்பது கலப்பையின் அடியில் நிலத்தினை ஆழ உழ பொருத்தப்பட்ட ஒரு கூரிய இரும்புத் தகடாகும். இன்றும் கலப்பையின் இப்பகுதிக்கு கொழு என்ற பெயர் வழங்கப்பட்டு வருவதன் மூலம் பழந்தமிழரின் மரபு நீட்சியைக் காணமுடிகிறது.

நாஞ்சில்
உடுப்பு முகமுழுக்கொழு மூழ்க ஊன்றி[17] (பெரும்பாண். 199-200)

கொழுவல்சி[18] (மதுரைக்காஞ்சி 141)

நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கின்[19] (பதிற்றுப்பத்து 58: 17)

கொல்லை உழுகொழு[20] (பொருநர். 117)

அரிகால் போழ்ந்த தெரிபகட்டு உழவர்[21] (அகம்41: 6)

ஊன்கிழித்தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்
வித்திய மருங்கின் விதைபல நாறி[22] (அகம். 194: 4-5)

என சங்கப் பாக்கள் தமிழர் தம் `உழுதல்' தொழிலில் கலப்பையின் முக்கியத்தவம் குறித்தும், அதில் கொழுவின் முக்கியத்துவம் குறித்தும் விளக்குகின்றன. வாள் கொண்டு ஊனினைக் கிழித்தல் போல மண்ணைக் கிழித்து உழுத பொழுது இருபுறமும் செம்மண் விழுந்த விதத்தை பாடி மகிழ்ந்துள்ளனர். மேலும் அறுவடை முடிந்த பின் அரிதாள்கள் வயலில் எஞ்சியிருக்கும். அடுத்த அறுவடையில் வயல்களில் அரிதாள் பிளவுபடும்படி `சேற்று உழவு' நடைபெற்றதை அகநானூறு குறிப்பிடுகிறது. மருத நிலத்தின் முதல் ஆயுதமான கலப்பையும் அதன் உறுப்புகளையும் நாஞ்சில், (பெரும்பாண். 199-200), கொழு (மதுரைக்காஞ்சி 141) எனும் சொற்களில் பதியம் செய்து வைக்கப்பட்டிருக்கிறது என்று இவ்வாய்வேடு முன்வைத்துச் செல்கிறது.

**உணவுகள்**

மருத நிலத்தில் எல்லா நிலங்களில் இருந்தும் கிடைக்கப்பெற்ற உணவுப் பொருட்கள் கிடைத்தன. அரிசி, பால் பொருட்கள், மீன், உப்பு, இறைச்சி போன்றவற்றைப் பண்ட மாற்றின் மூலமாக இம்மக்கள் பெற்று பயன்படுத்தியுள்ளமையைக் காணமுடிகிறது. அதிக அளவில் கள்ளைப் பயன்படுத்திய மக்கள் மருத நில மக்களாவர். போரின் போதும் வெற்றியின் போது அதிக அளவிலான கள் அருந்துவதைச் சங்கப்பாடல்கள் வழி அறியமுடிகிறது.

## நெய்தல் பொருளாதாரம்

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் நிலத்திற்குரிய நிலப்பகுதியாகும். குறிஞ்சி மற்றும் முல்லையில் காணப்பட்டது போன்ற திணைக் கலப்பு நெய்தலிலும் மருதத்திலும் காணப்படுகிறது. குறிஞ்சியும் முல்லையும் ஒன்றை ஒன்று ஒட்டிய நிலப் பரப்பு அது போலவே மருதமும் நெய்தலும் நெருங்கி அமைந்துள்ளன. மருத நிலத்தின் உபரி உற்பத்தி உள்நாட்டு வணிகத்திற்கும் வெளிநாட்டு வணிகத்திற்கும் வழிவகை செய்தது. அவ்வணிகத்தில் கடற்கரை ஊர்களின் பங்களிப்பு அதிகமாக இருந்துள்ளது. *நெய்தல் நிலத்தில் வாழ்ந்த பூர்வ குடிகளின் தொழில் மீன்பிடித்தல், உப்பு உற்பத்தி என்பதாக இருந்துள்ளது*. மருத நிலப் பொருளாதாரம் அரசு அமைப்பின்

கீழ் முறைபடுத்தப்பட்ட பிறகு கடற்கரை ஊர்களில் கடல் வாணிபம் தொடங்கப்பட்டு இருந்ததை நெய்தற் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

**உற்பத்தி முறை**

மருத நில மக்களின் தொழில் *மீன்பிடித்தல், முத்துக்குளித்தல், சங்கு குளித்தல், சங்கறுத்தல், பவளம் எடுத்தல், உப்பு உற்பத்தி செய்தல், மீன் உலர்த்துதல், கடல் வணிகம், கலங்கள் கட்டுதல், வலைகள் தயாரித்தல், பிற நிலங்களுக்குச் சென்று மீன் உப்பு ஆகியவற்றை விற்றல்* போன்றவையாகும்.

மருத நில உபரி பொருட்களை ஏற்றிக் கொண்டு வெளிநாடுகளில் விற்றுவிட்டு அங்கிருந்து சரக்குகளைத் தமிழகத்துக்குக் கொண்டு வந்துள்ளனர். அக் கலங்களை நடுக்கடலில் நங்கூரமிட்டு நிறுத்திவிட்டு தோணிகளைக் கொண்டு சரக்குகளைக் கரைக்குக் கொண்டு வந்துள்ளனர். இது மருதப் பொருளாதாரம் வளர்ந்த நிலையில் வளர்ந்த நெய்தல் தொழிலாகும்.

போக்குவரத்துக்காகவும் அம்பி தோணி ஆகிய கலங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. *அம்பி என்பதற்கு தெப்பம், தோணி, தாம்பு, இரைகூடை, கள், காரம்பி, ஓர் ஊர், தம்பி என வலைதமிழ்.காம் சுட்டுகிறது. தோணி என்பது மிதந்து செல்லக் கூடிய மரக்கலங்களால் ஆனது எனக் கூறுகிறது அகரமுதலி.காம்.*

உறவரும் சிறுவரும் உழைமாறு உய்க்கும்
அறத்துறை அம்பியின் மான[23]

புறம். 381: 23-24.

தோணியான் கரைசேர்க்குந்து[24]

புறம். 343.5.

ஆகிய புறப்பாட்டு வரிகள் மூலம் போக்குவரத்துக்குப் பயன்பட்ட கலங்களைக் குறித்து அறியமுடிகிறது. கரைவலை என்னும் ஒரு

முறையில் சங்க காலத்தில் மீன்கள் பிடிக்கப்பட்டு வந்துள்ளன. இவ்வலை இருபுறத்திலும் நீண்ட கயிறுகளால் இணைக்கப்பட்ட ஒரு பெருவலையாகும். வலையின் மையப் பகுதி படகில் கொண்டு செல்லப்பட்டு, கடலில் போடப்படும் இரு முனைகளிலும் கட்டப்பட்டிருக்கும் கயிற்றை அவ்வூர் பரதவர்கள் இருபுறமும் இழுப்பர் இது கரைவலை எனப்படுகிறது. இம்முறை சங்ககாலம் தொட்டு இன்று வரை நடைமுறையில் உள்ளதைக் காணமுடிகிறது. இதுபோல் இன்னும் பல மரபுவகைப்பட்ட முறைகளில் பரதவ மக்கள் மீன்பிடிப்பதைக் காணமுடிகிறது.

*மீன் பிடித்தொழிலுக்குத் தேவையான பொருட்கள் அனைத்தையும் பரதவ மக்கள் கைவினைத் தொழிலாகத் தாங்களே உற்பத்தி செய்து கொண்டுள்ளனர். கதிர்* என்னும் கருவி கொண்டு நூல் இழைகளை முறுக்கி கயிறு திரித்து வலை பின்னியுள்ளனர். வலைகளில் ஏதேனும் பழுதுபட்டால் அவற்றைத் தாங்களாகச் செப்பனிட்டுக் கொள்வதையும் சங்கப்பாடல்கள் குறிக்கின்றன. இரவுகளில் தீப்பந்தங்களைக் கொண்டு கடலுக்கு மீன் பிடிக்கச் சென்றுள்ளதையும் சங்கப்பாடல்களில் காணமுடிகிறது. *தீப்பந்தகளின் வெளிச்சத்திற்கு அதிக அளவிலான சிறிய மீன்கள் திரளும் அச்சிறிய மீன்களைத் தின்பதற்குச் சுறா உள்ளிட்ட பெரிய மீன்கள் வரும். அவற்றை எறியுளி கொண்டு தாக்கிப் பிடித்து வந்துள்ளனர்.* இதனைப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

கணைக்கால் மாமலர் கரப்ப மால்கு கழித்
துணைச் சுறா வழங்கலும் வழங்கும்; ஆயிடை
எல்இமிழ் பனிக்கடல் *மல்குசுடர்க் கொளீஇ*
எமரும் வேட்ட புக்கனர்[25]

நற். 67. 6-9.

என்னும் நற்றிணைப் பாடல் மூலம் இரவில் மீன்பிடிக்கச் செல்லும் நிலையைக் காணமுடிகிறது. மேலும் இங்ஙனம் பிடித்து வந்த பெரிய மீன்களின் கொழுப்பைச் சேகரித்து அதனை எண்ணெய்யாகப் பயன்படுத்தியுள்ளமையும் அறியமுடிகிறது. சங்கப்பாடல்களில் உப்பு

உற்பத்தி குறித்துப் பல செய்திகள் காணப்படுகின்றன. உப்பு விளைவிப்போரைச் சங்க இலக்கியம் `உழா உழவர்' அதாவது உழுது பயிரிடாத உழவர்கள் என்கிறது. உப்பை வண்டிகளில் ஏற்றி பக்கத்து ஊர்களுக்கும் நெடுந் தொலைவிலிருந்த ஊர்களுக்கும் உமணர்கள் சென்று பண்ட மாற்று மூலம் நெல் வாங்கி வந்துள்ளனர். முத்துக்குளித்தலிலும் சங்க காலப் பரதவர் சிறந்து விளங்கியுள்ளனர். கொடுமணல், பந்தர், கொற்கை குடா, பெருந்துறை, போன்ற இடங்களில் இருந்து முத்தெடுக்கப்பட்ட செய்தியைச் சங்கப்பாடல்கள் வழி அறியலாம். மேலும் '*வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்*' (அகம் 350 : 12) என்னும் வரி *வலம்புரி சங்கு* எடுக்கப்பட்ட நிகழ்வை விளக்குகிறது.

மருத நிலத்தில் காணப்பட்ட *உழுவோர், உழுவித்துண்போர்* போன்ற வர்க்க வேறுபாடுகள் நெய்தல் நில மக்களிடையில் அரிதாகக் காணப்பட்டன. நெய்தல் நில ஊர் சிறிய ஊர்களாக இருந்துள்ளன. சிறிய குடிசைகளைக் கொண்ட ஊர்களாக இருந்துள்ளன. ஆங்காங்கே பேரூகளும் இருந்துள்ளன. அங்கே தூண்கள் கொண்டு கட்டப்பட்ட பெரிய வீடுகள் காணப்பட்டதையும் சங்க இலக்கியம் குறிக்கிறது. இது மருத நிலப் பொருளாதாரம் நெய்தல் நிலத்தில் ஏற்படுத்திய தாக்கம் எனக் கூறலாம். நெய்தல் நில பொருளாதாரமும் ஒரு சிறப்பான வகையில் அமைந்த கலப்புப் பொருளாதாரம் என்பதை அறியமுடிகிறது.

**மக்கள்**

*பரதவர், பரதர், கடலர், திமிலர், நுளையர், உமணர், வலைஞர், வளையோர், அளவர்* போன்றோர் கடற்புறத்தில் வாழ்ந்த மக்களாவர். இவர்களுள் மீன்பிடித்தோர் பரதவர் என்றும் *திமிலர், வலைஞர் என்றும் அழைக்கப்பட்டனர் உப்பு உற்பத்தி செய்தோர் உமணர் என அழைக்கப்பட்டுள்ளனர்.* கடலில் காற்றோட்டம், நீரோட்டம், மீன்பாடு போன்றவை குறித்த அறிவு பெற்றிருந்த மக்கள் *மூப்பர்* என அழைக்கப்பட்டனர். *வேளாப் பார்ப்பான்* என்பவர் *சங்குகளை அணிகலன்களாக மாற்றினர்* எனச் சங்க இலக்கியம் கூறுகிறது.

### கருவிகள்

*பறி, வலை, திமில், நாவாய், வங்கம், கட்டுமரம், தோணி, அம்பி, கலம், பாய்மரக்கப்பல்* போன்ற கருவிகள் சங்க கால நெய்தல் நில மக்களிடம் காணப்பட்டன. அவற்றுள் *வங்கம், கலம், நாவாய், கப்பல்* போன்றவைச் சரக்கு வாணிபத்திற்குப் பயன்படுத்தப்பட்ட பெரிய மரக்கலங்களாகும். இக்ககலங்கள் நெடுந்தூரப் பயணத்துக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பல வகையான வலைகள் சங்ககாலத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளமையைப் பின்வரும் கூற்று விளக்குகிறது.

> சங்ககாலத்தில் மீன்பிடிக் கருவிகள் பலவாக இருந்துள்ளன. இன்று பெருவாரியாகக் காணப்படும் வலைகள் சங்க காலத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. 'கொடுமுடி வலைஞர்' (மதுரை, 556) என்னும் பாடல் அடியின் மூலம் கொடிய முடிச்சுகளைக் கொண்ட வலையால் மீன்பிடிக்கப்பட்டது என்பதை அறிகிறோம். மேலும், 'விரிவலை பரதவர்' (நற். 111. 3) 'புதுவலை பரதவர்' (அகம். 10,10) ஆகிய குறிப்புகள் மூலம் மீன் பிடிப்பதற்கு வேறுபட்ட வலைகளைப் பயன்படுத்தியுள்ளமையை அறியமுடிகிறது. கூடவே 'பெருவலை' (நற். 74,1) நுண்வலை (அகம். 70,3) முதலிய வலைகளும் பயன்பாட்டில் இருந்ததை அறியமுடிகிறது.[26]
>
> பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 116.

சுறாவைக் கொல்ல *எறியுளி* என்னும் கருவியைப் பயன்படுத்தியுள்ளனர். இம்மக்கள் கடலில் மட்டும் அல்லாமல் கடலை ஒட்டிய கழிகளிலும் மீன் பிடித்து வாழ்ந்துள்ளனர் என்பதை அகநானூற்றுப் பாடல் (220) ஒன்று விளக்குகிறது. மேலும் உப்பு விற்க *சகடம் எனப்படும் வண்டி, மாட்டை விரட்ட கதழ் கோல்* போன்றவற்றைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதைக் காணமுடிகிறது. வயல் சார்ந்த, கடல் சார்ந்த பொருளாதாரப் பெருக்கம் கைவினைத் தொழில், உழவுத் தொழில் போன்றவை சிறப்பிடம் பெற்றுள்ளமை சங்கப்பாடல்கள் வழி அறிந்திட இந்த ஆய்வு களம் அமைத்துத் தரும் கடப்பாட்டை உணர்ந்திருக்கிறது.

**உணவுகள்**

நெய்தல் நில மக்களின் முக்கிய உணவு மீன். மருத ஊர்களில் சென்று மீனுக்கும் உப்புக்கும் மாற்றாகப் பெற்ற நெல்லையும் இம்மக்கள் தம் உணவாகப் பயன்படுத்தியுள்ளனர். கள் அருந்துதல் இவர்களின் உணவுப் பழக்கங்களில் ஒன்றாகக் காணப்படுகிறது.

சங்க இலக்கியம் முழுதும், மலைசார்ந்த வேட்டை கருவி, காடு சார்ந்த தொழிற் கருவி, வயல் சார்ந்த விவசாய்க் கருவிகள், கடல் சார்ந்த தொழில் கருவிகள் என பல வகையான கருவிகளின் பயன்பாடுகள் இருந்துள்ளதை இவ்வாய்வேடு குறித்துச் செல்கிறது.

**சங்கம்**

சங்க இலக்கியம் எனப் பரவலாக அழைக்கப்பட்டாலும் சங்கம் என்னும் சொல் அக்காலப் பயன்பாட்டில் இல்லை. தொல்காப்பியர் மொழி முதற் சொல்லாக `ச'கரம் வராது என இலக்கணம் வகுத்துள்ளார். `பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல' என ஏற்றுக் கொள்ளப்பட்ட சமூகத்தில் பிற்காலப் பயன்பாட்டில் சங்கம் என்னும் சொல் உருவாகி `அவை' என்னும் பொருளுக்கு இணையாகப் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது. அரசரைச் சார்ந்த புலவர்கள் தங்கள் படைப்புகளை அரசர் அவையில் அரங்கேற்றுவது வழக்கமாக இருந்துள்ளது.

புலவர்கள் நாடு முழுவதும் இருந்த தமிழ்க் கவிதைகளைத் திரட்டித் தொகுக்கும் பணியை மேற்கொண்டுள்ளனர். இதில் மக்களுடன் இருந்த மக்கள் புலவர்களின் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. குறிஞ்சி, முல்லை பாடல்களை இதற்குக் காட்டாக கூறலாம். குறுநில மன்னர்களும் குறிஞ்சி மற்றும் முல்லை நிலங்களில் மக்களின் தலைவர்களாக இருந்துள்ளனர். இவர்களைப் போற்றி பாடிய பாடல்களும் சங்க இலக்கியத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. பின்வரும் குறுந்தொகைப் பாட்டு எந்த மன்னனையும் குறுநில மன்னனையும் கூறாமல் சாதாரண மனிதனின் காதலைப் பாடுவதைக் காணமுடிகிறது.

யாயும் ஞாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே.[27]

குறுந். 40.

எல்லா வகையானப் பாடல்களும் தொகுக்கப்பட்டன என்பதற்கு இப்பாடல் காட்டாக அமைகிறது. இப் பணிகளை மேற்கொண்ட அமைப்பைச் சங்கம் எனக் கொள்ளலாம். இறையனார் அகப்பொருள் உரை கூறுவது போன்று முச்சங்கங்கள் அவற்றை புரந்த அரசர்கள் அவற்றில் இருந்த புலவர்கள் எண்ணிக்கை ஆகிய அனைத்தும் உண்மையாக இல்லாமல் இருந்திருக்கலாம். ஆனால் சங்கம் எனும் ஒரு அமைப்பு இருந்துள்ளமையை மறுக்க முடியாது. காரணம் தொல்காப்பியம் கூறும் மாணவர், ஆசிரியர் குறித்த வரையறைகள் வழி அறியலாம்.

சங்கம் என்பதைத் தற்காலத்தில் பயன்படுத்தப்படும் தொழிற்சங்கம் என்னும் பரவலாக்கப்பட்ட பயன்பாட்டில் பார்க்க முடியாது. அக்கால சங்கம் என்பது அரசர்களின் உதவியால் அரசு அதிகாரிகளின் கண்காணிப்பின் கீழ் இயங்கிய 'அவை' ஆகும். அக்காலத்து அவை என்பதும் பிற்காலத்துச் சங்கம் என்பதும் ஒன்றாகவே கருதமுடிகிறது. அவையைக் குறிக்கும் பாடல்கள் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகின்றன.

மறங்கெழு சோழர் உறந்தை *அவையத்து*[28]

புறம். 39.

சிறந்த கொள்கை அறங்கூ *றவையமும்*[29]

மது. 492.

வலம்புரி கோசர் *அவைக்களத்* தானும்[30]

புறம். 283.

பழையன் போதுர் *அவையகம்* விளங்க[31]

மது. 508.

அறங்கெழு *நல்லவை* உறந்தை அன்ன[32]

அகம். 935.

ஞாயிறு பட்ட அகன்று வரு *கூட்டத்து*[33]

பதிற். 72.

போன்றவை அவை என்னும் பெயரில் சங்கம் இருந்துள்ள செய்தியைக் காட்டுகின்றன. தற்காலத்தைப் போன்று அரசியல் வேறு இலக்கியம் வேறாகப் பிரியாதிருந்த காலத்து, புலவர்கள் மன்னர்களுக்கு அறிவுரை வழங்குபவர்களாக இருந்துள்ளனர். ஆகையால் அவை என்பது அரசியல் காரணங்களுக்காகத் தனித்துக் கூட்டப்படும் அவை அன்று. கலை இலக்கிய காரணங்களுக்காகவும் அவை இயங்கி வந்துள்ளதைக் காண முடிகிறது. பேரெண்ணைக் குறிக்கும் சங்கம் (பரி. 2) என்னும் சொல்லைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்[34]

பரி. 2. 13

என சங்க இலக்கியத்தில் சங்கம் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. மணிமேகலை தொட்டு சங்கம் என்னும் சொல் புலவர் கூட்டத்தைக் குறிக்கும் வகையில் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது. இதன்மூலம சங்கம் என்னும் சொல் காலம் தோறும் புதிய பொருளை ஏற்று மாற்றம் கண்டுள்ளதை அறியமுடிகிறது. இதுவரை சங்கம் குறித்து அறிஞர்களிடை ஒருமித்த கருத்தைக் காணமுடியவில்லை. சங்கம் குறித்த பல்வேறு நிலைப்பாடுகள் இருக்க, அதைக் காரணம் காட்டி சங்கம் போன்று எந்தவொரு அமைப்பும் இல்லை அதில் புலவர்களும் இல்லை என்று வாதிடும் தன்மையையும் அறிஞர்களிடையில் காணமுடிகிறது. இறையனார் அகப் பொருள் உரை கூறும் பல்லாயிரம் ஆண்டுகள் நிலை பெற்ற சங்கங்கள் இல்லை

என்றாலும் சங்கப் புலவர்களை உள்ளடக்கிய அவை இருந்துள்ளமையை அறியமுடிகிறது. கைலாசபதியும் பின்வருமாறு இக்கருத்தை வலியுறுத்துகிறார்.

> இக்காலத் திறனாய்வாளர்களிடையே சங்கப் பழங்கதையைப் பரிவோடு நோக்கும் மனப்பாங்கு வளர்ந்து வருகிறது. அதன்படி சில நூற்றாண்டுகள் பின்தள்ளியேனும் தமிழ்ப் பாவலர்களின் சங்கம் குறிப்பிட்ட காலத்தில் பாண்டியர் கோநகரில் அவ்வரசின் ஆதரவில் தழைத்ததென்றும், சங்கப் பாடல்களின் பெரும்பகுதி அக்காலத்தில் தொகுக்கப்பட்டதென்றும் கூறுவதை ஒப்புக் கொள்கின்றன.[35]
>
> கைலாசபதி. க. தமிழ் விரநிலைக் கவிதை, ப. 9.

எனக் கூறியுள்ளார். இதன் மூலம் சங்கம் இருந்துள்ளது எனவும், அது பாண்டிய நாட்டில் அமைந்திருந்தது எனவும் அறிய இடமுளது. இச்சங்கம் இப்பாடல்களைத் தொகுத்து வழங்கியமையால் அவை தற்கால மக்களுக்குப் பெரும் நன்மை செய்துள்ளது. இப்பாடல்கள் இல்லையெனில் சங்கப் பாடல்களுக்குப் பின்புலமாக அமைந்த சங்ககால மக்களின் வாழ்க்கை முறையை அறியமுடியாது போயிருக்கும். இப்பாடல்கள் தொகுக்கப்பட்ட நோக்கம் எதுவாயிருப்பினும் தற்காலத்தில் இத் தொகுப்பு பணி வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பணியாகும். வரலாற்று ஆய்வாக நிகழ்த்தப் பெறும் இவ்வாய்வேடு பண்பாட்டு ஆய்வாகவும் செய்தளிக்கக் கடமைப் பட்டுள்ளது. அதற்கென விளக்கமுறைத் திறனாய்வும் ஒப்பீட்டு முறை திறனாய்வும் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

**உணவு சேகரித்தலில் பெண்**

மனிதனின் முதல் பொருளாதார நடவடிக்கை உணவு சேகரித்தல் ஆகும். விலங்குகளும் பறவைகளும் இன்னபிற உயிர்களும் உணவு சேகரித்தலில் ஈடுபடுகின்றன. ஆனால் மனிதர்களின் உணவு சேகரித்தல் முறை தனித்துவமுடையதாகும். உணவு சேகரித்தலில் முதன் முதலில் கருவியைப் (குச்சிகள் அதாவது கூர்மையான மரத்துண்டு அல்லது

கூர்மையான கல்) பயன்படுத்தினர் என்பது வரலாறு. இது உழைப்பு என்னும் மதிப்பைப் பெற்றது. இது விலங்கிலிருந்து மனிதனை வேறுபடுத்திய முதன்மை நிகழ்வாகும்.

> முதலில் உழைப்பு, அதன் பின்னரும், அத்துடன் சேர்ந்தும் பேச்சு. இந்த மிக முக்கியமான இரண்டு தூண்டுகைகளின் செயலாட்சியினால் மனிதக் குரங்கின் மூளை படிப்படியாக மனிதனுடைய மூளையாகமாறியது; இது அதை ஒத்ததாக இருந்தபோதிலும் அதை விட இன்னும் பெரிதாகவும் இன்னும் நேர்த்தியாகவும் இருந்தது. மூளையின் வளர்ச்சியுடன் கைகோத்துக் கொண்டு அதனுடைய மிக உடனடியான கருவிகளான புலன்களின் வளர்ச்சியும் சென்றது.[36]

எங்கல்ஸ், மனிதக் குரங்கு மனிதனாக மாறிய இடைநிலைப்படியில் உழைப்பின் பாத்திரம், ப.10

இப்படி உழைப்பு மனிதக் குரங்கை மனிதனாக மாற்றிய விதத்தை விளக்குகிறார் எங்கல்ஸ். இத்தகைய உழைப்பு மனிதனையும் மனிதனின் மொழியையும் உருவாக்கியது. அங்ஙனம் உருவாகிய மொழியில் இருந்து இலக்கியங்கள் தோன்றின. வளர்ந்த இலக்கியச் சிறப்பை சங்க இலக்கியங்கள் உணர்த்தி நிற்கின்றன.

சங்க காலத்து மக்கள் குறிஞ்சி மற்றும் நெய்தல் நிலப்பகுதியில் உணவு சேகரிக்கும் பணியை மேற்கொண்டிருந்துள்ளனர். தொடக்க காலத்தில் இவ்விரண்டு நிலப்பகுதிகளிலும் இயற்கையாக கிடைத்த பொருட்களை அம்மக்கள் பயன்படுத்தினர். காட்டில் கிடைக்கும் கிழங்கு, தேன் உள்ளிட்ட பொருட்கள், கடற்கரையை ஒட்டிய குளத்தில் அல்லது கழி முகங்களில் கிடைக்கும் மீன் வகைகள் போன்றவற்றைப் பிடித்து பயன்படுத்தி வந்தனர். குறிஞ்சியும் முல்லையும் முறைமையில் திரிந்த பிறகு உருவான பாலை நிலத்தில் வாழும் மக்களும் உணவு சேகரித்தலில் ஈடுபட்டுள்ளனர். இதனைப் பின்வரும் பாடல் சுட்டுகின்றது.

இரும்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோல்
உளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி,
இருநிலக் கரம்பைப் படுநீறு ஆடி,
நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்[37]

பெரும்பாண், 91-94.

உறுதியான மரத்தால் செய்யப்பட்ட கோலில் ஒரு பக்கம் உளி போன்ற கல்லைப் பொருத்தி கடப்பாரை போல் பயன்படுத்தியுள்ளனர். எறும்பு புற்றை அந்த பாரையால் குத்தி எறும்புகள் சேகரித்து வைத்திருக்கும் புல்லரிசியை அள்ளிக் கொண்டு வந்து சமைத்து உண்டமையை அறியமுடிகிறது. மற்றும் குறிஞ்சியிலும் இதே முறையில் கிழங்கை அகழ்ந்து பயன்படுத்தியுள்ளனர்.

வரலாற்றுக்கு முந்திய காலத்தில் பெண் தலைமை ஏற்ற வேட்டை நடைபெற்றுள்ளது. ஆனால் சங்கப்பாடல்களில் எங்கும் பெண் வேட்டையாடிய குறிப்புகள் இல்லை. வேட்டையின் நிலமான குறிஞ்சி நிலத்தில் பெண்கள் உணவு சேகரித்தலில் ஈடுபட்டமை சுட்டப்பட்டுள்ளன. வேட்டை தொழிலை ஆண்கள் மேற்கொண்டதற்கான குறிப்புகள் ஆங்காங்கே கிடைக்கின்றன.

சங்க இலக்கியங்கள் என்பவை வரலாற்று நூல் இல்லை எனினும் சங்க இலக்கியங்கள் வரலாற்றுக் களமாக அமைந்துள்ளமையை அறிவோம். தமிழ்ச் சமூகத்தின் பல்வேறு படிகளை, வரலாறுகளை சங்க இலக்கியங்கள் வழி கண்டறிந்திட இயலும். அதன் தொடர்ச்சியே இந்த ஆய்வேடு, ‘சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்’ என்ற தலைப்பில் ஆய்வு செய்திட முனைந்திருக்கிறது. மேலும் சங்க காலம் தாய்வழிச் சமூகத்தின் முடிவுக்குப் பிறகு உருவான பாடல்கள் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். மேலும் குறிஞ்சியில் பகுத்தளிக்கும் செயல் பெண்ணினால் செய்யப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது. இதனைத் தாய்வழிச் சமூகத்தின் எச்சமாகக் கொள்ளலாம். வேட்டையில் இருந்து பெண்களை முற்றிலுமாக விலக்கி வைத்திருக்க முடியாது எனினும்

பாடல் புனைதலில் வைக்கும் அளவுக்கு பெண்கள் வேட்டையாடும் நிகழ்வு மதிப்புக்கு உரியதாய் கருதப்படவில்லை என்பைத ஊகம் செய்ய முடிகிறது.

## வேளாண்மையில் பெண்

உணவு சேகரிப்பு காலகட்டத்தில் மகட்பேறு காரணமாக பெண்கள் வீட்டில் இருத்தப்பட்ட சூழலே வேளாண்மையின் தொடக்கம் எனலாம். தனித்து விடப்பட்ட பெண்கள் தங்கள் சுற்றுச் சூழலை உற்று நோக்கி அதில் நிகழும் மாற்றங்களை கண்ணுறும் சுதந்திரமானதொரு நிலையில் இருந்தனர். குப்பைக் கூளங்களில் தானாகவே விளைந்த கதிர்களைக் கண்டு அவர்கள் தொடக்க கால வேளாண்மையை மேற்கொண்டனர். தனியே அமர்ந்து சிந்திக்கும் வாய்ப்பு மனித குல வரலாற்றில் பெண்களுக்கு வாய்த்தது. அது சிறு பொறியே. சமூகத்தை முன்னெடுத்து செல்லும் பொருளாதார கூறுகளில் ஒன்றான சேமிக்கும் பண்பை பெற்றவளும் பெண். பெண் வேளாண்மையின் தொடக்கம் என்பதைப் பின்வரும் கூற்று உறுதிபடுத்துகிறது.

> வேளாண்மையின் தொடக்கக் கட்டத்தில் குடியிருப்புகளில் தங்கி, வேளாண்மையில் ஈடுபட்டவர் பெண்கள்தாம் என்பது மிகமிகத் தெளிவானதே. நிலத்தை முறையாக உழவு செய்யும் செயலை இந்தியாவில் முதன்முதலாகக் கண்டுபிடித்தவர்கள் பெண்களே என்பது புகழ்மிக்க இந்தியாவில் தாயுரிமை (Mother right in india) என்ற நூலின் ஆசிரியர் எஃரன் பெல்ஸின் இறுதி முடிவாகும்.[38]

கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 187.

இந்தியாவில் மட்டும் அல்லாமல் எல்லா பகுதிகளிலும் பெண்கள் வேளாண்மையின் துவக்கமாக அமைந்துள்ளனர். தொடக்கத்தில், உணவு சேகரிப்பின் போதாமையை ஈடு செய்யும் வகையில் குறைந்த அளவில் வேளாண்மை நடைபெற்றுள்ளது. மனிதர்களின் பெருக்கமும் வேட்டையின் ஆபத்தும் வேளாண்மையை விரிவாக செய்யும் நிலைக்கு

இட்டுச் சென்றன. அதற்கான கலைக்கொட்டு போன்ற சிறிய ஆயுதங்களையும் பெண்கள் உருவாக்கினர். நிலையான வசிப்பிடத்தின் தேவை, கலப்பை கொண்டு உழுது, விதைத்து, பயிரிட்டு விளைச்சலை அதிகப்படுத்தக் காரணமாக இருந்தது. இந்நிலையில் வேளாண்மையில் ஆண்களும் ஈடுபடலாயினர். இதனைப் பின்வருமாறு விளக்குகிறார் கார்த்திகேசு சிவதம்பி.

> உணவு சேகரிப்பு குடியிருப்பிற்கு அருகாமையில் இருந்த இடத்தில் பயிர் செய்கைக்கு இட்டுச் சென்றது. இதனால் தோட்டத்தை உழுது பயிரிடுதல் பெண்ணுடைய பணி என்றாகியது. கால் நடைகளால் இழுக்கப்படும் கலப்பை அறிமுகப்படுத்தப்பட்ட பின்னர்தான் வேளாண்மை ஆண்களுக்குரியதாக மாற்றப்படுகிறது.[39]

கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 186.

கலப்பை உள்ளிட்ட சில விவசாயப் பொருட்களின் வளர்ச்சி வேளாண்மையை அடுத்த நிலைக்குக் கொண்டு சென்றது. ஆணும் பெண்ணுமாக இணைந்து ஆற்றும் தொழிலாக வேளாண்மை வளர்ச்சி கண்டது. பயிரிடப்படும் தானியங்களின் எண்ணிக்கையும் ஒப்பீட்டளவில் அதிகரித்தன. தினை உள்ளிட்ட சிறு தானிய வகை பயிர்கள் பயிரிடப்பட்டுள்ளமையை சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது. இதற்கு பின்வரும் கூற்று வலு சேர்க்கிறது.

> வேளாண் பொருளாதாரத்தில் பெண்டிர்க்குத் தலைமை இடம் இருந்தது. ஈட்டி / வேல் கண்டுபிடிக்கப்பட்டதும் வேட்டை ஆணின் தொழில் ஆனது. பெண்கள் உணவு சேகரித்தார்கள். வேட்டையாடுவது பிராணி வளர்ப்புக்கு கொண்டு சென்றது. உணவு சேகரிப்பு விவசாயத்துக்கு கொண்டு சென்றது. ஆக பெண்களே விவசாயத்தைக் கண்டுபிடித்தனர். கலப்பையைக் கண்டுபிடித்தவுடன் விவசாயம் ஆண்களின் தொழிலானது.[40]

பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம். ப. 97.

என்னும் தேவிபிரசாத் சட்டோபாத்தியாயாவின் கூற்றை மாதையன் குறிப்பிடுகிறார். இங்ஙனம் பல அறிஞர்கள் பெண்கள் தொடக்க கால விவசாயத்தை மேற்கொண்டனர் என்பதையும் அது படிப்படியாக கருவிகளின் வளர்ச்சியால் ஆண்களின் கைகளுக்கு மாற்றப்பட்டதையும் விளக்குகின்றனர்.

**காட்டெரிப்பு**

வேளாண்மையில் ஆண்களின் ஆதிக்கம் தொடங்கிய பின்னர் வேளாண் செய்யும் நிலத்தின் அளவை அதிகரித்தல் என்பது கடினமானதாக இல்லை. இந்நிலையில் காட்டை வெட்டி எரித்து அவ்விடத்தில் பயிர் செய்யத் தொடங்கினர். இது அக்கால மக்களின் உரம் குறித்த அறிவை வெளிப்படுத்துகிறது. சாதாரண இடத்தில் பயிர் செய்தலைக் காட்டிலும் காட்டை எரித்து பயிர் செய்த இடங்களில் அதிகபடியான விளைச்சல் கிடைத்துள்ளதை அம்மக்கள் கண்டுணர்ந்துள்ளனர். இவ்வகை வேளாண்மை சங்க இலக்கியத்தில் பல இடங்களில் குறிக்கப்பட்டுள்ளன.

யாஅம் கொன்ற மரம் சுட்ட இயவில்
கருப்பு மருள் முதல பைந்தாட் செந்தினை[41]

குறுந்தொகை. 198. 1-2.

மரம்கொல் கானவன் புனம்துளர்ந்து வித்திய
பிறங்கு குரல் இறடி காக்கும், புறம் தாழ்[42]

குறுந்தொகை. 214. 1-2.

ஆகிய குறுந்தொகைப் பாடல்கள் மூலம் காட்டை எரித்து அங்கு கிடக்கும் முட்களைப் பொருக்கி எடுத்துவிட்டு மேடு பள்ளங்களை நிரப்பி சமன் செய்து வேளாண் செய்தமையை நற்றினை பாடல் (33) சுட்டுகிறது. இங்ஙனம் எரியூட்டப்பட்டு பயிர் செய்த இடத்தை *புனம், ஏனல், துடவை, படப்பை* எனக் குறித்துள்ளமையைக் காணமுடிகிறது. காட்டை எரித்து வேளாண்மைக்கு தயாரான நிலமாக மாற்றுவதில்

பெண்களின் பங்களிப்பு முக்கியமானதாகும். பெண்களின் துணை இல்லாமல் இப்பணிகளை மேற்கொண்டிருக்க முடியாது. சங்க இலக்கியத்தில் காணப்படும் காட்டெரிப்பு வேளாண்மைக் குறித்து பக்தவத்சல பாரதி விரிவாக ஆய்வு செய்துள்ளார்.

**உழுதல்**

வேளாண்மையில் 'உழுதல்' என்பது முதன்மை பணிகளுள் ஒன்றாகும். வேளாண்மைக்கு கெட்டித்தட்டிக் கிடக்கும் மண்ணை விளைச்சலுக்குத் தக்கவாறு மாற்றும் நிகழ்விற்கு உழுதல் எனப் பெயர். உழுதல் சரிவர நடைபெறவில்லையானால் அது விளைச்சலைப் பாதிக்கும். ஆகையால் மண்ணை உழுது நன்றாக காயவிட்டு தொடிப்புழுதி காணும் வகையில் உழவு அமைதல் நன்று என்பதை வரலாறாகத் தந்திருக்கிறது சங்கப்பாட்டு.

தொடிப்புழுதி கஃஃசா உணக்கின் பிடித்து எருவும்
வேண்டாது சாலப் படும்[43] குறள். 1037

மூன்று பங்கு அளவுள்ள மண் நன்றாக உழுது காயவிட்ட பின்னர் ஒரு பங்காக மாறினால் அதில் உரமிடாமல் பயிர் செய்யலாம் எனச் சுட்டிச் செல்கிறார் வள்ளுவர். இத்தகைய வகையில் உழுதல் மேற்கொள்ளப்பட்ட செய்தியை பின்வரும் சங்கப்பாக்கள் சுட்டுகின்றன.

செஞ்சால் உழவர்[44] பெரும்பாண். 196

உறுபெயல்
தண்துளிக்கு ஏற்ற பல உழு செஞ்செய்
மண்போல் நெகிழ்ந்து[45] அகம். 26. 23-25

என சிறப்பாக வயலைப் பண்படுத்திய உழவர் என்றும், மழை பொழியும் போது அதை ஏற்று விளைச்சலைத் தரும் வண்ணம் பல முறை உழப்பட்ட மண் என்றும் மண் பண்படுத்தும் விதம் குறித்து கூறுகின்றனர். சங்க இலக்கியத்தில் பல வகையான நிலங்களை உழுது பயிரிட்ட செய்திகள் காணப்படுகின்றன. காடு சார்ந்த பகுதிகள், மலை

சார்ந்த பகுதிகள் போன்றவற்றைத் திருத்தி பயிர் செய்து வேளாண் உற்பத்தியைப் பெருக்கிப் பயன் கொண்டனர் தமிழ் மக்கள். இந்த நிகழ்வின் வளர்ச்சிப் போக்கில் சமவெளிப் பகுதிகளையும் ஆற்றுப்படுகைகளையும் கண்டடைந்து பெருமளவிலான உற்பத்தியை மருத நிலப்பகுதியில் சாத்தியப்படுத்தினர். சமவெளி நிலத்தில் கிடைக்கும் உற்பத்தித் திறன் மிகுதி குறித்த அறிவைச் சேகரித்து அடுத்தத் தலைமுறைகளுக்குச் சேகரித்து வைத்தனர்.

உழுத நிலத்தைச் சமப்படுத்துதல் என்பதும் உழுதலின் ஒரு பகுதியாகும். தற்கால விவசாய நடைமுறையில் இந்நிகழ்வு *பரம்படித்தல்* என அழைக்கப்படுகிறது. பாசன வசதிக்காக நிலத்தை ஒரே சீராக வைக்க வேண்டும் என்ற அறிவும், வரப்பு வைக்கும் முறையும் பழந்தமிழரிடம் இருந்துள்ளது. அம்மக்கள் தாங்கள் உழுத நிலங்களை காலால் மிதித்து சமன் செய்த நிகழ்வை செறுவின் உழாஅ நுண்தொளி நிரவிய வினைஞர் (பெரும்பாண். 210-211) என்ற வரி புலப்படுத்துகிறது.

**விதைத்தல்**

நிலம் நன்கு பண்படுத்தப்பட்டப் பிறகு அது விதைப்புக்குத் தயாராகிறது. உழுது பரம்படிக்கப்பட்ட நிலத்தில் நெல், வரகு, சாமை போன்ற பயிர்கள் விதைக்கப்பட்ட செய்திகள் சங்க இலக்கியத்தில் கிடைக்கின்றன.

பல்விதை உழவின் சில்*ஏராளர்*[46] பதிற்று. 76:11

உழவர்
விதைக்குறு வட்டி போதொடு பொதுளப்[47] குறுந்.155: 1-2

மேலும் விதை நெல் நன்கு காயவைக்கப்பட்டபின் விதைக்கப்பட்ட செய்தியும் வெண்ணெல் *வித்தின் அறைமிசை உணங்கும்* (அகம். 211:6) என்ற பாடல் வரிகளால் அறியமுடிகிறது. இவ்விடத்தில் நெல்லை உலர்த்துதல் என்பது உவமையாகக் கூறப்பட்டுள்ளது. வட்டி என்ற ஒரு வகைப் பொருள் விதை தானியங்கள் சேமித்து வைக்கப் பயன்படுத்தப்பட்ட நிகழ்வைச் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது.

நெடுங்காலம் சேமித்து வைத்த விதை நெல் எல்லாக் காலங்களிலும் தங்களது தேவையை நிறைவு செய்யும் என்ற பொருள் பொதிந்த சொல்லாக 'வட்டி' என்ற சொல் சங்க காலப் பயன்பாட்டில் இருந்துள்ளது என்பதை உணரமுடிகிறது.

அக்காலத்தில் ஆண் மற்றும் பெண்களுக்கான தொழிற் பிரிவினை துல்லியமாக வரையறுக்கப்படாத நிலையில் பெண்கள் ஆண்களுக்கு நிகராக வேளாண் பணிகளில் பங்கு கொண்டனர். வேளாண்மையில் குறிப்பாக விதை விதைக்கும் பணியைக் பெண்கள் செய்துள்ளமையை அறியமுடிகிறது. இதனைப் பின்வரும் கூற்று சுட்டுகிறது.

> காட்டெரிப்பு வேளாண்மையின் உருவாக்கத்தால் புதிய தொழில் கருவிகள் ஏற்பட்டன. குறிப்பாக விதைகள் நடுவதற்குப் பெண்கள் பயன்படுத்திய '*தோண்டுகழி*' மிக முக்கிய கருவியாகும். இதனைத் தினைப்புனக் காவலிலும் பெண்கள் பயன்படுத்தினர் இவர்கள் பயன்படுத்திய இக்கருவி பின்னாளில் தாய்த்தெய்வங்களின் சூலாயுதமாக படிமலர்ச்சி பெற்றது.[48]

பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 92.

வேளாண்மையில் விதை விதைத்தல் முக்கியத்துவம் வாய்ந்த பணியாகும். தொடக்க காலத்தில் காட்டில் இயற்கையாக கிடைத்த தானியங்களைச் சேகரித்து அவை முளைக்கும் பதத்திற்கு காய வைத்து பயன்படும் திறத்தைப் பெண்கள் அறிந்து வைத்திருந்தனர். சிறிய அளவிலான *வேளாண்மையில் விதைத்தலை சூளுற்ற மற்றும் பாலூட்டும் பெண்களும் செய்திருக்க முடியும்* ஆகையால் இப்பணி பொதுவாக பெண்களால் மேற்கொள்ளப்பட்டது. நிலத்தை உழாமல் களைக் கொட்டினால் கொத்தி **வெண்சிறு கடுகு** பயிரிடப்பட்டமையை பின்வரும் மலை படு கடாம் பாடல் விளக்குகிறது.

> கான்உழு குறவர் சில வித்து அகல இட்டென,
> பல விளைந்து (நற். 209: 2-3)
> தொய்யாது வித்திய துளர்படு துடவை

ஐயவி அமன்ற (மலை. 122-123.)
கயத்து இட்ட வித்து வறத்தின் சாவாது
கழைக் கரும்பின் ஒலிக்குந்து[49] புறம். 137: 5-6

*ஐயவி* என்பது *வெண் சிறு கடுகு* என்னும் தானியமாகும். *துளர்* என்பது அக்காலத்தில் பயன்படுத்திய *களை எடுக்கும் கருவியாகும்*. தற்காலத்தில் பயன்படுத்தப்படும் களைக் கொட்டின் தொடக்க கால வடிவமாக இருந்திருக்கலாம். *துடவை* என்பது தோட்டமாகும். உழப்படாத தோட்டத்தை துளர் கொண்டு கிளறி விதைத்துள்ளதைக் காணமுடிகிறது. நிலத்தில் இட்ட வித்து வெள்ளத்தின் காரணமாக வீணானதை *வித்து இடுபுலம் மேடு ஆயிற்றென (பரி. 7:35)* என்ற சங்கப்பாடல் சுட்டுகிறது. தற்போதைய நிலையைப் போல் அக்காலத்திலும் பல இடர்பாடுகளுக்கு இடையில் வேளாண்மை நடைபெற்றுள்ளதை அறியமுடிகிறது.

**நாற்று நடுதல்**

நன்கு பண்படுத்தப்பட்ட நாற்றங்காலில் விதைக்கப்பட்ட நாற்றுகளைப் பறித்து, பெரிய அளவிலான சேற்று நீர் வயலில் பரவலாக நடுகின்ற முறை நடவு என்றழைக்கப்படுகிறது. சங்ககாலத்தில் நடவு நடுவோர் *நடுநர்* என்றழைக்கப்பட்டனர். வயலில் காணப்பட்ட நண்டின் வலைகள் சிதையும் படி கரிய காளைகள் தம்முள் மோதி உருவாக்கிய சேற்று நிலத்தை மிதித்து சமமாக்கி உழவர்கள் நாற்று நட்டனர் எனக் கூறுகிறது பெரும் பாணாற்றுப்படை. இதில் உழவர்கள் *வினைஞர்* என்ற பொதுப் பெயரில் குறிக்கப்பட்டுள்ளனர். பெண்களின் வினையாற்றலில் நாற்று நடுதல் இருந்திருக்கிறது என்பது சங்கப் பாடல்களில் வெளிப்படையாகச் சுட்டபெறவில்லை என்பதை ஆய்வேடு விளக்க முனைகிறது.

நீர் உறு செறுவின் நாறு முடி அழுத்த
நடுநரொடு *சேறி ஆயின்*[50] (நற். 60: 7-8)

கார்ஏறு பொருத கண்அகன் செறுவின்,
உழாஅ நுண்தொளி நிரவிய *வினைஞர்*
முடிநாறு அழுத்திய நெடுநீர்ச் *செறுவில்*[51] பெரும். 210-212.

உழவுத் தொழிலில் நாற்று நடுதல் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. ஒரு நிலத்தில் குவிந்து வளர்ந்த நாற்றுகளை அப்படியே விளைச்சலுக்காக விட்டுவிடுவதில்லை. அவ்வாறு விட்டுவிட்டால் பொலிவு காணாது. ஆதலால் விதைகள் நாற்றளவு வளர்ந்த பின்னர் அவற்றைப் பறித்து சிறு சிறு நாற்று முடிச்சுகளாகக் கட்டி பின், நன்கு பண்படுத்தப்பட்ட வேறொரு நிலத்தில் சில முடிச்சு நாற்றுகளை ஒவ்வொரு நாற்றும் செழிப்பாக வளர தகுந்த இடைவெளிவிட்டு நாற்று நடுதல் நடைபெறும். நாற்றங்கால் என்பது விதைக்கப்படும் நிலம். வேளாண்மையில் இம்முறை பயன்படுத்தப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. இது வேளாண்மையின் வளர்ச்சிப் போக்கில் நிகழ்ந்த தமிழரின் நுண்ணறிவு திறமாகும்.

விளைச்சலின் நிறை குறை நீர்பாசனத்தைப் பொருத்து அமைகிறது. தற்காலத்தில் வெள்ளத்தின் காரணமாகவும், வரட்சியின் காரணமாகவும் விவசாயம் பாதிக்கப்படுவதைக் கண்கூடாகக் காண்கிறோம். இந்நிலை அக்காலத்திலும் இருந்துள்ளது. அக்காலத்தில் ஆற்று நீரைத் திருப்பி விளைச்சலுக்குப் பயன்படுத்திய பாசன முறை குறித்து பின்வரும் பாடல் வரிகள் சுட்டுகின்றன.

கலிமகிழ் உழவர்
காஞ்சிஅம் குறுந்தறி குத்தி, தீம்சுவை
மென்கழைக் *கரும்பின் நன்பல மிடைந்து*
பெருஞ்செய் நெல்லின் பாசவல் பொத்தி
வருத்திக்கொண்ட *வல்வாய்க் கொடுஞ்சிறை*
மீதுஅழி *கடுநீர் நோக்கி*[52] அகம். 346: 5-10

இப்பாடலில் *கொடுஞ்சிறை* என்பது ஆற்று நீரைத் தேக்க கட்டப்பட்ட கலிங்காகும். ஆற்று மணலில் காஞ்சி மரக் குச்சிகளை ஊன்றி அதன் பக்கவாட்டில் சுவை தரக்கூடிய வளமையான கரும்புக் கழிகளைக் கட்டி

அணை போன்ற அமைப்பு உருவாக்கப்பட்டிருந்ததை அகநானூற்றுப் பாடல் விளக்குகிறது. நீர் மேலாண்மை குறித்த அறிவு தமிழருக்கு இருந்துள்ளமை குறித்த செய்தியும் ஈண்டு குறிப்பிடத் தக்கது.

வேளாண் தொழில் செயற்பாடுகளுள் இன்றியமையாத ஒன்று எருவிடுதல் என்பதாகும். இதனை ஏரினும் நன்றால் எருவிடுதல் (குறள். 1038) என்று வள்ளுவரும் சிறப்பிக்கிறார். தற்கால உழவர்களுக்கு வழங்கப்படுவது போன்ற செயற்கை உரம் போலன்றி அக்கால உழவர்கள் நல்ல இயற்கை உரங்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

தொறுத்த வயல் ஆரல் பிறழ்நவும்[53] (பதிற். 13.1)
தாது எரு மறுகின்ஓ[54] (நற். 343. 3)
தாது எரு மறுகின் மூதூர்[55] (அகம். 165. 4)
தாது எரு மறுத்த கலி அழிமன்றத்துஓ[56] (பதிற். 13. 17)
தாது எருத் ததைந்தஓ[57] (மலை. 531)
இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்ஓ[58] (பெரும். 154)

ஆகிய பாடல் வரிகள் சங்க மக்களின் எரு பயன்பாடு குறித்து விளக்குகின்றன. மேலும் தற்காலத்தில் உளுந்து என்றழைக்கப்படும் தானியம் எருவாகப் பயன்படுத்துவதற்கு சிறந்தது என நவீன அறிவியல் கண்டறிந்து கூறியுள்ள செய்தியை பண்டைத் தமிழர் தம் நுண்ணறிவு கொண்டு பயன்படுத்தியுள்ளமை பல பாடல்கள் வழி அறியமுடிகிறது. உளுந்தின் வேர் முடிச்சுகள் நைட்ரஜனைச் சேமிக்கும் சக்தி வாய்ந்தவை என அறிவியல் ஆய்வுகள் சுட்டி வருகின்றன. இத்தகைய முறையினை சங்ககால மக்கள் உரப் பயன்பாட்டிற்காக பயன்படுத்தியுள்ளனர் என்பதை கீழ்காணும் பாடல்கள் உறுதிபட முன்வைப்பதைக் காணலாம்.

உழுந்தின்
அகல இலை அகல வீசி[59] (நற். 89. 5-6)
பூழ்க்கால் அன்ன செங்கால் உழுந்தினி[60] (குறுந். 68. 1)
உழுந்துடை கழுந்தின்[61] (குறுந் 384. 1)

நெய்யொடு மயக்கிய உழுந்து நூற்றன்ன[62] (ஐங். 211. 1)
உழுந்து தலைப்பெய்த தொழுங்களி மிதவை[63] (அகம். 86. 1)

மேலும், உளுந்து மட்டுமின்றி உளுந்தைப் போல் உரத்திற்காக பயிறும் விளைவித்தமையைப் பைம்பயறு உதிர்த்த கோதின் (புறம். 297: 3) என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன. எனவே வேளாண் தொழிலுக்குத் தேவையான இயற்கை உரங்களைத் தமிழ் மக்கள் பயன்படுத்திச் செழித்திருந்தமையை அறியமுடிகிறது.

**தினைப் புனம் காத்தல்**

குறிஞ்சி நிலத்தில் புன்செய் வேளாண்மை நடைபெற்றுள்ளது. அதில் தினை, வரகு, அவரை போன்ற பயிர்கள் பயிரிடப்பட்டுள்ளன. அப்பயிர்க் கதிர்களை உண்ண வரும் பறவைகளை விரட்ட பெண்கள் தினைப் புனத்தைக் காப்பர். இது குறிஞ்சி நிலப் பெண்கள் மேற்கொள்ளும் வேளாண் பணியாகும். அகநானூற்றுப் பாடல் (188) ஒன்றில் தோழி கூற்றாக அமைந்த பாடலில் தோழி தலைவனை மணம் புரிந்து கொள்ளுமாறு அறிவுறுத்துகிறாள். அப்போது பெண்கள் தினைப்புனம் காக்கும் காட்சி விளக்கப்பட்டுள்ளது.

மலர்ந்த வேங்கை மலிதொடர் அடைச்சி,
பொலிந்த ஆயமொடு காணதக இயலி
தழலை வாங்கியும், *தட்டை ஓப்பியும்*
அழல்ஏர் செயலை அம்தழை அசைஇயும்,
குறமகள் காக்கும் ஏனல்
புறமும் தருதியோ? வாழிய, மழையே[64]

அகம். 188. 9. 14.

இதே போன்று ஐங்குறுநூற்று பாடல் (285) குறமகள் ஒருத்தி *தட்டை என்னும் கருவியில் ஒலி எழுப்பி* கிளியை ஓட்டி தினைப் புனம் காத்த நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது. தட்டை என்பது தற்காலத்தில் பயன்படுத்தபடும் *பறை* என்பதன் சிறிய வடிவமாக இருந்திருக்கலாம். மேலும் இருநூற்று ஆறாவது (206) பாடலிலும் தலைவன் தலைவியை

மணந்து கொள்ள வேண்டும், இனி நாங்கள் தினைப்புனம் காக்க வரமாட்டோம் என்று கூறுவதாக அமைந்துள்ளது. இப்பாடலில் குறமகள் கொடிச்சி எனக் கூறப்பட்டுள்ளாள். மற்றும் ஐங்குறுநுறு பாடலில் (281) தலைவன் கிளியைப் பல ஊழிகள் வாழ வேண்டுமென்று வாழ்த்துகிறான். காரணம் அக்கிளியால் தான் குறமகள் தினைப்புனம் காக்க வருகிறாள். அதனால் அவளை அவன் காணமுடிந்தது. ஆகையால் கிளியை வாழ்த்துவதாகக் கபிலர் பாடல் இயற்றியுள்ளார். மற்றுமொரு பாடலில் கபிலர், தினைப் புனம் காக்கும் செய்தியைத் தலைவனின் செயலுடன் தொடர்பு படுத்திக்கூறுவதைப் பின்வரும் பாடலால் அறியலாம்.

சாரற் புறத்த பெருங்குரற் சிறு தினைப்
பேர் அமர் மழைக் கண் கொடிச்சி கடியவும்,
சோலைக் சிறு கிளி உன்னும் நாட!
ஆர் இருள் பெருகின; வாரல் -
கோட்டு மா வழங்கும் காட்டக நெறியே.[65]

ஐங். 282. 1-3.

என்னும் பாடல் வரியில் காட்டு வழிக்கு அஞ்சாமல் தலைவியைக் காண வரும் தலைவனைத் தோழி பகலில் வருமாறு கூறுவதை அறியமுடிகிறது. குறமகள் பல முறைகள் விரட்டி விட்டும் அச்சம் கொள்ளாமல் வரும் *கிளிகளை உடைய நாடன்* எனக் கூறுவதன் மூலம் தலைவன் கிளியின் இயல்புடையவன் என மறைமுகமாகச் சுட்டுகிறார் கபிலர். இப்பாடலில் தினைப்புனம் என்னும் தொழிலில் பெண்கள் ஈடுபட்டிருந்தமையை அறியமுடிகிறது. மற்றொரு ஐங்குறுநூற்றுப் பாடலில் (289) தலைவியின் குரல் கிளியின் குரல் போல் உள்ளதால் தன் இனத்தைச் சேர்ந்த கிளியின் குரல் எனக் கருதி மற்ற கிளிகள் தினைப் புனத்திற்கு வந்து கொண்டே இருக்கின்றன. கிளி விரட்டும் தொழிலும் நீண்டு கொண்டே இருப்பதால் தலைவனும் வந்து கொண்டே இருக்கிறான். அடிக்கடி தலைவியைச் சந்திக்க வருவதன் விளைவு, தலைவியைப் பெற்றோர் தினைப்புனம் காக்க அனுப்ப மறுத்துவிடுவர்

என்பதை தோழி தலைவனுக்கு அறிவுறுத்தும் கூற்றாக அமைகிறது. பயிரிடும் தொழிலில் முதன்மையானவளாக பெண்கள் சங்க இலக்கிய பாடல்களுள் பதிவு செய்யப்பட்டிருப்பதை அறிவோம்.

எட்டுத் தொகை நூல்களில் மட்டுமன்றி பத்துப்பாட்டின் எல்லா நூல்களிலும் தினைப் புனம் காத்த நிகழ்வு சுட்டப்பட்டுள்ளது. தலைமக்களின் களவு வாழ்வை விளக்கத் தினை புனம் காத்தலை ஒரு உத்தியாக புலவர்கள் பயன்படுத்தியுள்ளமையை இம்மிகுதியான செய்திகள் வழி அறியமுடிகிறது. அகப் பொருளின் இலக்கிய இன்பத்தை மிகுவிக்கப் பயன்படுத்திய உத்தி என்றாலும், இலக்கியம் வாழ்வின் பிரதிபலிப்பு என்னும் வகையில் இச்செய்திகள் மூலம் அக்கால விவசாயம் குறித்து அறியமுடிகிறது. இவ்வாறு பல பாடல்கள் மூலம் தினைப்புன விவசாயத்தில் பெண்களின் பங்களிப்பு அதிகம் இருந்துள்ளதை அறியமுடிகிறது. பின்வரும் பத்துப்பாட்டு நூல்களில் காணப்பட்ட தினைப்புனம் குறித்த செய்திகள் அக்கால வாழ்வியலையும் வெளிப்படுத்தியமைக் காணலாம்.

ஒலிகழைத் தட்டை புடையுநர், புனந்தொறும்
கிளி கடி மகளிர் விளிபடு பூசல்[66] (மலை. 328-329.)

நல்கோட் சிறுதினைப் படுபுள் ஓப்பி,
எல்பட வருதியர்[67] (குறிஞ்சிப்.38-39.)

புலி அஞ்சு இதணம் ஏறி, அவண,
சாரல் சூரல் தகைபெற வலந்த,
தழலும் தட்டையும் குளிரும், பிறவும்,
கிளிகடி மரபின[68] (குறிஞ்சிப்.41-44.)

புள் ஆர் இயத்த விலங்கு மலைச் சிலம்பின்,
வள் உயிர்த் தெள்விளி இடை இடைப் பயிற்றி,
கிள்ளை ஓப்பியும்[69] (குறிஞ்சி,99-101.)

என தினைப் புனம் குறித்த குறிப்புகள் மிகுதியாக சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இம்மிகுதித் தன்மை இலக்கிய உத்தி என்ற

நிலையைக் கடந்து பெண்கள் வாழ்க்கை தினைப்புனக் காவலோடு இணைந்திருந்த தன்மையை விளக்குவதாக அமைந்துள்ளது. நள்ளிரவில் ஆண் தினைப் புனம் காத்த செய்தியைக் காணமுடியவில்லை. பயிரிடுதல், களைக் கொட்டினால் மண்ணைக் கிளறி விதைத்தல், அறுவடை செய்தல், சேமித்தல் போன்ற பணிகளை இல்லத்தில் தனித்திருந்த போது பெண் செய்திருக்கிறாள். இவ்வாறு பொருளீட்டும் பணியை வேட்டையாடும் ஆணுடன் சமமாக இணைந்து சமப் பங்கீட்டு முறையில் வாழ்ந்திருந்தமை பாடல்களின் பொருள் வழி அறியமுடிகிறது.

குறுந்தொகை (214) பாடலில் கருந்தினை விளைந்த தினைப்புனத்தை *கொடிச்சி* காவல் காப்பது குறித்து கூறப்பட்டுள்ளது. மற்றொரு பாடலில் கொடிச்சி தினைப்புனக் காவலில் கிளியைத் தன் குரல் எழுப்பி விரட்ட, அவள் குரல் கிளியின் குரல்போல இருந்தமையால் அவை அப்புனத்தைவிட்டு செல்லவில்லை. இதனால் வருத்தம் கொண்ட குறத்தி அழுததாகக் கூறுகிறார் கபிலர். ‘இருந்தையூர்க் கொற்றன் புலவன்’ என்னும் புலவர் குறிஞ்சி நிலத்தில் பெண்கள் தினைகளைப் பரப்பி காயவைத்த செய்தியைக் கூறுகிறார். மற்றொரு குறுந்தொகைப் பாடலில் (360) தினைப்புனம் காக்கும் போது *குளிர்* என்னும் கருவி கொண்டு ஒலியெழுப்பி கிளிகளை விரட்டிய நிகழ்வு சுட்டப்படுகிறது. நற்றிணை (22, 134, 204,) கொடிச்சி தினைப்புனம் காத்த செய்தி கூறப்படுகிறது. தழல், தட்டை, குளிர் மேலும் பல ஒலி எழுப்பும் கருவிகளைக் கொண்டு பெண்கள் தினைப் புனத்தைக் காத்தமையை அறியமுடிகிறது. மலை படு கடாம் பாடல் வரிகள் பறை கொண்டு பன்றியை விரட்டிய செய்தியைக் கூறுகிறது.

**களையெடுத்தல்**

பயிரிடப்பட்ட நிலத்தில் பயிருடன் சேர்ந்து பயிர் அல்லாத சில செடிகள் புற்கள் வளர்வது இயல்பு. இத் தாவரங்கள் களை எனப்படுகின்றன. இக்களைகளை நீக்குதல் வழக்கில் களையெடுத்தல் என்று குறிக்கப்படுகிறது. இவற்றைச் சரியான காலத்தில் நீக்காவிட்டால்

அவை பயிர் வளர்ச்சியைப் பாதிக்கும். இதனை சங்க கால மக்கள் அறிந்திருந்தனர். சிறிய மண்ணைக் கொத்தும் கருவியைக் கொண்டு களை எடுத்துள்ளமையை சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

களைஞர் தந்த *கணைக்கால்* நெய்தற்[70] (பெரும். 213)

கோடுடைக் கையர் *துளர் எறி வினைஞர்*[71] (அகம். 184. 13.)

சாயும் நெய்தலும் *ஓம்புமதிஓ*[72] (நற். 60: 9)

களைகால் கழீஇய பெரும்புன வரகின்[73] (அகம். 194. 9.)

பெரும்பாணாற்றுப்படையில் (213) வயலில் களை எடுப்போர் களைஞர் எனக் குறிக்கப்பெற்றுள்ளனர். களை எடுப்போரை *களைஞர்* என குறிப்பது அக்கால வழக்காகும். *துளர்* என்ற கருவி களை எடுக்கப் பயன்படுத்தியுள்ளமையையும் சங்கப்பாடல் வழி அறியமுடிகிறது. இதனை *துளர் எறி வினைஞர்* என்னும் அகநானூற்றுப் பாடல்(184) வரியின் மூலம் அறியமுடிகிறது. வரகு தோட்டத்தில் களை எடுத்தல் பற்றியும் மேற்கண்ட அகநானூற்று பாடல் மூலம் (184) அறியமுடிகிறது. களையெடுப்போரைச் சுட்டும் களைஞர் என்ற சொல், பெண்களைக் குறித்திருக்கிறது என்ற வரலாற்றுப் பதிவை இவ்வாய்வேடு முன்வைக்கிறது.

**அறுவடை**

தானியங்கள் விளைந்தவுடன் அவைக் கதிரில் இருந்து ஒன்றொன்றாக பறித்தெடுக்கப் படுவதில்லை. விளைந்த தானியக் கதிர்களை அறுத்து அவற்றை கட்டி தனித்த தூய்மை செய்யப்பட்ட இடத்திற்கு கொண்டு சென்று அடித்துத் தூற்றி சீர் செய்வது உழவுத் தொழிலின் முறையாகும். தற்காலம் வரை இம்முறைப்படி வேளாண்மை செய்யப்பட்டு வருகிறது. இம்முறை சங்ககாலம் தொட்டே இருந்து வருவதைக் காணமுடிகிறது. அரிந்த நெல் தாள்களை அடித்து சீர் செய்யும் இடத்திற்கு களம் என்ற பெயர் சங்கக் காலத்தில்

சுட்டப்பட்டுள்ளது. இப்பெயர் இன்று வரை வழங்கி வருவதையும் காணமுடிகிறது.

*அரிஞர்* யாத்த அலங்கு தலைப் பெருஞ் சூடு
கள் ஆர் *வினைஞர்* களம்தொறும் மருகும்[74]

அகம். 84. 12-13.

கதிர்களை அரிஞர் அறுத்து கட்டி வைக்க அவற்றை கள் அருந்திய வினைஞர் தலையில் சுமந்து சென்று களத்தில் சேர்த்துள்ளமையை அறியமுடிகிறது. `அரி` என்ற வேர்சொல்லில் இருந்து பிறந்தவை `அரிதல்' என்ற வினைச் சொல்லும் `அரிஞர்', `அரிவாள்' என்ற பெயர் சொற்களும் என்பதை அறியமுடிகிறது. அரிவாள் என்ற சொல் தற்காலத்திலும் பயன்பாட்டில் இருப்பதைக் காணலாம். வழக்கில் ஒரு பொருளைத் துண்டித்தலுக்கு `அரி' என்று கூறுவதை ஈண்டு ஆய்வேடு சுட்ட முனைகிறது. மேற்கண்ட பாடலில் களம் என்னும் சொல் தற்காலத்தில் பயன்படுத்தப்படும் கதிரடிக்கும் களத்தைக் குறிக்கும், நெற் கதிர்களை சீர் செய்யும் இடமாகவும் உள்ளது. மேலும் சங்க இலக்கியத்தில் தானியக் கதிர்களை அரிந்த செய்திகள் பின்வருமாறு கிடைக்கின்றன.

வாதி கை அன்ன கவைக்கதிர் இறைஞ்சி,
இரும்பு கவர்வுற்றன, பெரும்புன வரகே[75] (மலை. 112-113.)

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ[76] (மலை. 471.)

அறைக் கரும்பின் அரி நெல்லின்
இனக் களமர் இசை பெருக[77] (பொருநர்.193-194.)

அரிந்து கால் குவித்த செந் நெல் வினைஞர்[78] (அகம். 116. 2.)

வரகு, வெண்ணெல், செந்நெல் போன்றவற்றை அறுவடை செய்துள்ளமையை மேற்கண்ட சங்கப்பாடல் வரிகள் விளக்குகின்றன. அரிநர், களமர், வினைஞர் என வேளாண் மக்களைக் குறிக்கிறது சங்க இலக்கியம். மேலும் *பைதுஅற விளைந்த பெருஞ்செந் நெல்லின்*

*தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர் (பெரும்பாண். 230-231)* என்ற பாடலில் *துமித்த* என்ற சொல் *அரிந்த* என்ற பொருளில் இடம்பெற்றுள்ளது.

உழவுத் தொழிலில் நேரடியாக ஈடுபடும் *மக்கள் தலைமக்கள் அல்லர்*. சில சொற்கள் தொழிற் பிரிவினையை உணர்த்தும் வகையில் உழவர்களுள் இருந்த வேறுபாட்டை வெளிப்படுத்தி நிற்பதைக் காணலாம். விளைந்த நெல்லை அறுத்து கட்டுகளாகக் கட்டி ஓரிடத்தில் போர் போல குவித்து வைத்து தினமும் பிணையலடித்து மூட்டையாகக் கட்டியும், குதிர்களில் நிரப்பியும் இடம் இன்மையால் நெல்மணிகள் எங்கு பார்த்தாலும் கிடக்கிறது என நிலத்தின் வளமையைக் கூறுகிறது பின்வரும் பாடல் அடிகள்.

கூனி, குயத்தின் வாய்நெல் அரிந்து,
சூடு கோடாகப் பிறக்கி, நாள்தொறும்,
குன்றுஎனக் குவைஇய குன்றாக் குப்பை
கடுந்தெற்று மூடையின் இடம்கெடக் கிடக்கும்[79]

பொருநர். 242-245.

நேரடியாக வேளாண்மையில் ஈடுபட்ட உழவர் தலைமக்கள் அல்லர். *உழுவோர் உழுவித்துண்போர் என இருவகைப்பட்ட மக்கட் பிரிவு இயங்கியது ஈண்டு வெளிப்படுகிறது*. மேலும் முற்றிய செந்நெல்லை அறுவடை செய்வது முதல் அதை மருத மரத்தின் நிழலின்கண் குவித்து வைத்து, பின்னர் அவற்றை போர் அடித்து, தூசு மற்றும் பதர்களைக் கொண்ட நெல்மணிகளைத் தூற்றி சிறந்தவற்றை மலை போல் குவித்து வைத்தல் வரை அனைத்து செயல்பாடுகளையும் பின்வரும் பெரும்பாணாற்றுப்படை பாடல் அடிகள் சுட்டிச் செல்கின்றன.

கடுப்புடைப் பறவைச் சாதி அன்ன,
பைதுஅற விளைந்த பெருஞ்செந் நெல்லின்
தூம்புடைத் திரள்தாள் துமித்த வினைஞர்
பாம்புஉறை மருதின் ஓங்குசினை நீழல்,

பலிபெறு வியன்களம் மலிய ஏற்றி,
கணம்கொள் சுற்றமொடு கைபுணர்ந்து ஆடும்
துணங்கை அம்பூதம் துகில் உடுத்தலைப் போல்,
சிலம்பி வால்நூல் வலந்த மருங்கின்
குழுமுநிலைப் போரின் முழுமுதல் தொலைச்சி,
பகடுஊர்பு இழிந்த பின்றை, துகள்தப,
வையும் துரம்பும் நீக்கி, பைதுஅற,
குடகாற்று எறிந்த குப்பை, வடபால்
செம்பொன் மலையின், சிறப்பத் தோன்றும்

பெரும்.229-241

இப்பாடலில் அறுவடை, கதிரடித்தல், நெல் தூற்றுதல் போன்ற செயல்களை வினைஞர் செய்தனர் எனக் குறிக்கப்பட்டுள்ளது. இவ்வளவு வேலைகளையும் ஆண்கள் மட்டுமோ அல்லது பெண்கள் மட்டுமோ செய்திருக்க இயலாது. இருவர் பங்களிப்பும் வேளாண் தொழிலில் சிறப்பாக இருந்துள்ளதை இவ்வாய்வேடு சுட்டிச் செல்கிறது. மேலும் மருத நிலத்தில் வேளாண்மை சிறப்பாக இருந்தமையை பல உவமைகளால் விளக்குகிறார் புலவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

கடித்தால் வலியை ஏற்படுத்தும், அதாவது கடும்புண் ஏற்படுத்தும் வண்டினைப் போன்ற முற்றிய நெல் என்று கூறுகிறார். இவ்வரியில் சுட்டப்படும் `சாதி' என்ற சொல் வண்டுகளில் வல்லிய வண்டின் வகையைக் குறிக்கிறது. அதாவது வல்லிய வண்டினைப் போன்ற முற்றிய உறுதியான நெல் எனக் கூறப்பட்டுள்ளது. நல்ல நெல்மணி கொண்ட கதிரைக் குறிப்பிட `சாதி' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளார் புலவர் உருத்திரங்கண்ணனார். ஆனால் தற்காலத்தில் குறிப்பிடப்படும் `சாதி' என்ற பொருண்மையில் இதனை விளங்கிக் கொள்வது தவறு எனச் சுட்டப்பெறுகிறது. இப்பாடலில் இடைச்செறுகல் நிகழ்ந்திருக்கும் வாய்புள்ளது என ஆய்வு முன்னிறுத்த விழைகிறது.

மேலும் பாம்பு உறையும் மருத மரம் என்கிறார். பாம்பு உறைதலால் அங்கே எலிகள் இருக்காது என்பது மறைமுகமாகச் சுட்டப்பட்டுள்ளது.

குவிக்கப்பட்ட நெல்மணிகள் வடதிசையில் உள்ள பொன் போன்ற மேரு மலையைப் போல் சிறப்பாகத் தோன்றும் என பழம் பெரும் மருத மரம் இருந்த களத்தை விளக்கிச் செல்வதைக் காணலாம்.

நெற் கதிர்களிலிருந்து நெல்லினை அடித்து எடுத்த பின் அக்கதிர்களில் எஞ்சியிருக்கும் நெல்மணிகளை காளைகளைக் கொண்டு மிதிக்க வைத்து பிரித்தெடுக்கும் முறை சமீப காலம் வரை இருந்துள்ளது. இதற்குத் தற்காலத்தில் பிணையலடித்தல் என்ற பெயர் வழக்கத்தில் உள்ளது. சங்க இலக்கியம் இதனை கடாவிடுதல் எனச் சுட்டுகிறது.

*போரின் முழுமுதல் தொலைச்சி*
பகடுஊர்பு *இழிந்த பின்றை*[81] (பெரும். 237-238)
நீர்சூழ் வியன்களம் பொலிய போர்பு அழித்து
கள்ஆர் களமர் பகடுதலை மாற்றி[82] (அகம். 366. 2-3)
வைகுபுலர் விடியல் வைபெயர்த்து ஆட்டி[83] (அகம். 37.5)

ஆகிய பாடல் வரிகள் கடாவிடுதல் குறித்து விளக்குகின்றன. மேலும், நெல்லை தூய்மை படுத்தினால்தான் அதனைப் பயன்படுத்த முடியும். அதனைத் தூற்றி தூய்மைப் படுத்தும் முறை குறித்தும் சங்க பாடல்களில் குறிப்புகள் காணப்படுகின்றன.

பொங்கழி முகந்த தாஇல் நுண்துகள்
மங்குல்வானின் மாதிரம் மறைப்ப[84] (அகம். 37:3-4)

கடுங்காற்று எறிய, போகிய துரும்பு உடன்
காயல் சிறுதடிக் கண்கெடப் பாய்தலின்[85] (அகம்.366: 4-5)

மேலும் அரியப்பட்ட நெற்தாள்கள் தற்காலத்தில் கட்டுகளாகக் கட்டப்படும் முறையில் சங்ககாலத்திலும் கட்டப்பட்டமைக்கு இப்பாடல் வரிகள் சான்றாக அமைக்கின்றன.

எரிபுரை பல்மலர் பிறழ வாங்கி
அரிஞர் யாத்த அலங்கு தலைப்பெருஞ்சூடு
கள்ஆர் வினைஞர் களம்தொறும் மறுகும்[86] (அகம். 84. 11-13)

அரிந்த தாள்களை மாற்றி மாற்றி வைத்து கட்டாகக் கட்டும் பழக்கம் இருந்துள்ளதை இப்பாடல் வரிகள் சுட்டுகின்றன. இதன் மூலம் வேளாண் பணிகளில் பல, மரபு வழியாக தற்காலம் வரை மேற்கொள்ளப்பட்டு வருவதைக் காணமுடிகிறது. முன்னோருக்கும் தற்காலத்தவருக்குமான தொடர்பு அண்மைக் காலம் வரை நீடித்திருந்த நிலையைக் காணமுடிகிறது.

மருத நிலத்தில் வேளாண்மையில் ஆண் பெண் இருபாலரின் உழைப்பும் சமமாக இருந்துள்ளதை அறியலாம். இவ்வாய்வேடு குறிஞ்சி மற்றும் முல்லை நிலங்களில் பெண்களின் பணிகள் குறித்த விளக்கங்கள் ஆய்ந்தளிக்கப்பட்டுள்ளன. வேளாண் வேலைகளை இருபாலரும் ஈடுபட்ட நிகழ்வுகள், தொழிலாளர் என்ற நிலையில் ஆணும் பெண்ணும் சங்ககால சமூகத்தில் சமநிலையுடன் இருந்துள்ளதை உணர்த்த முனைகிறது.

## கால்நடை வளர்ப்பில் பெண்

முல்லை நிலத்தில் தொடக்க கால தொழிற்பிரிவினை வளர்ந்து வேட்டைத் தொழிலில் இருந்து ஒரு குறிப்பிட்ட மக்கள் கால்நடை வளர்போராக வளர்ந்துள்ளதைக் காணமுடிகிறது. இதுவே மனித குல வரலாற்று வளர்ச்சியில் ஏற்பட்ட முதல் தொழிற் பிரிவினை எனச் சுட்டுகிறார் எங்கல்ஸ். மேலும் கால்நடைகள் ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் சொத்து என்ற நிலையிலிருந்து தனி நபர்களின் சொத்து என்னும் நிலைக்கு வளர்ச்சி அடைந்ததும் முல்லை நிலத்தில் என்பதை எங்கல்ஸ் கூற்றினால் அறியமுடிகிறது.

கால்நடை வளர்ப்பில் பெண்கள் பல பணிகளைச் செய்துள்ளனர். *பால் கறத்தல், கால்நடைகளை மேய்த்தல், கன்றுகளைப் பிடித்து கட்டுதல்* போன்ற பணிகளை மேற்கொண்டுள்ளனர். முல்லைக்கலி

பாடல்கள் பலவற்றில் பரவலாக ஆயர்களின் காதல் ஒழுக்கத்தைப் பாடும் பொழுது பெண்கள் செய்த தொழில்கள் கூறப்பட்டுள்ளன.

தலைவன் ஆயர் மகளிடம் காதலுற்று என் நெஞ்சைக் கொண்டு சென்றுவிட்டவள் என்று கூறுகிறான். அது கேட்ட தலைவி அவனை எள்ளி நகையாடுகிறாள் அப்போது உன் நெஞ்சை நான் எப்படி அடிமையாகக் கொண்டிருக்க முடியும். உன் நெஞ்சு புனத்தின்கண் இருக்கும் என் தமையனுக்கு உணவு எடுத்துச் செல்லுமோ என்றும் என் தந்தை பால் கறக்க கலம் கொண்டு தருமோ என்றும் தினை அரிந்த வயல்களில் என் தாய் மேயவிட்ட கன்றுகளை மேய்க்குமோ என கூறுகிறாள். அவள் மேற்கொள்ளும் பணிகளை எல்லாம் தலைவனின் நெஞ்சு செய்யுமா எனக் கேட்கிறாள். இதன்வழி இவ் வேலைகளை எல்லாம் தலைவி செய்தாள் என்பதை அறியமுடிகிறது. மற்றொரு பாடலில் ஆயர் மகள் பாலைக்கறந்து கன்றினைக் கட்டிய செய்தியைக் காணமுடிகிறது.

தீம்பால் கறந்த கலம்மாற்றி கன்று எல்லாம்
தாம்பின் பிணித்து, மணைநிறீஇ [87]

மு. கலி 111.

என்னும் முல்லைக்கலிப் பாடல் வரிகள் கால்நடைத் தொழிலில் பெண்கள் ஈடுபட்ட விதத்தைக் கூறுகிறது. கால் நடை வளர்த்தலை வீட்டு வேலை, தனித்த தொழில் என்னும் இரு நிலைகளிலும் நோக்க இடம் உள்ளது. ஓரிரு கால்நடைகளை வளர்க்கும் பெண்களுக்கு அவற்றை பராமரித்தல் என்பது வீட்டு வேலைகளில் ஒன்றாக இருக்கும். அதிக அளவிலான கால் நடைகளை வளர்க்கும் போது பெண்களின் வேலையை வீட்டு வேலையாக கருத முடியாது. அது ஒரு தனித்த பொருளாதார நடவடிக்கைகள் என, எண்ண வேண்டும் என்பது ஈண்டு உணரத்தக்கது.

தனிஉடைமை உருவாகிவிட்ட பின்னர் தனிஉடைமைகளாக இருந்த கால்நடைகள் பரிவர்தனைக்குப் பயன்படுத்தப்பட்டன. இவை நிலங்களைப் போல் அல்லாமல் அசையும் சொத்துக்களாக உள்ளமையால்

இவற்றை பரிவர்தனைக்குப் பயன்படுத்துவது எளிதாயிற்று. அகையால் தொடக்க காலத்தில் பணத்தின் பாத்திரத்தைக் கால்நடைகள் ஏற்றுள்ளமையை அறியமுடிகிறது. விவசாய உற்பத்திப் பெருக்கத்திற்குப் பயன்பட்ட மாடு, காளை, ஆடு போன்ற கால்நடைகள் தனிவுடைமைச் சொத்தாகியமை அறிவோம்.

## வீட்டுப் பணிகளில் பெண்கள்

ஆணும் பெண்ணுமாக இணைந்து எல்லா வேலைகளையும் செய்து கொண்டிருந்த சமூகத்தில் தொழிற் பிரிவினை ஏற்பட்டது. அதில் ஆண்கள் வெளி வேலைகள் செய்பவர்களாகவும் பெண்கள் வீட்டு வேலைகளைச் செய்பவர்களாகவும் மாறினர். அந்த வகையில் தொழில் என்னும் அடிப்படையில் இவ்விருவரின் பணிகளும் பொதுவானது. சங்க கால பெண்டிர் சமையல் வேலைகளைச் செய்துள்ளதை 'அடுமகள்' என்ற தொழிற்பெயர் மூலம் சங்கப்பாடல்கள் சுட்டுகின்றன.

பெண்கள் குடும்பத்து ஆட்களுக்கு சமைப்பதோடு, வயலில் வேலை செய்யும் ஆட்களுக்கும் சமைத்து வழங்க வேண்டும். மேலும் வேளாண் வேலைகளையும் ஆண்களுடன் பகிர்ந்து செய்துள்ளனர். ஒப்பீட்டளவில் ஆண்களைக் காட்டிலும் பெண்கள் விவசாயம் சார்ந்த பல்வேறு பணிகளில் பெரும் பங்கு வகித்துள்ளமையை அறியலாம்.

தொழிற் பிரிவினை பெருமளவிற்கு வளர்ந்து பெண்கள் வீட்டு வேலைகளை மட்டும் செய்யும் நிலைக்குத் தள்ளப்பட்ட போதும் சமூக பொருளதார உற்பத்தியில் அவர்களது பங்களிப்பு குறிப்பிடத் தக்கதாகும். தொழிற் கருவிகளைச் செய்யும் பணி ஆணுக்கு உரியதானது. அவர்களுக்கு இணையாக பெண் குடும்பத்தில் உள்ள பணிகள் முழுமையும் செய்திருக்கிறாள். அதன் வழக்க செயல்பாடாக இன்றளவும் பெண்களின் பணிகள் நீட்சி கொண்டிருப்பதை அறியலாம். மருத நில சமூகம் தொடங்கிய பின் பெண்களின் பணிகள் ஆணுக்கு இணையாகப் பார்க்கப்படாத நிலை காணப்படுகிறது. இதனைப் போர் வீரம் போன்றவை ஆணுக்குரியது என்ற பதிவுகள் வழி அறிகிறோம்.

ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்[88]

புறம். 9

போரில் ஈடுபடாத மக்கள் குறித்து இப்பாடல் விளக்குகிறது. இப்பாடல் பெண்களும் போரில் ஈடுபட விலக்கப்பட்டவர் எனபதைக் கூறுகிறது. பார்ப்பனரும் பெண்டிரும் நோயுற்றோரும் பாதுகாப்பான இடங்களுக்குச் சென்றுவிட வேண்டும் என்ற அறிவிப்பாக இப்பாடல் அமைந்துள்ளது. சமூகத்திற்கு அடுத்த தலைமுறைகளை உருவாக்கித் தருவோர் பெண்கள் ஆகையால் அவர்களைப் பாதுகாப்பது அச்சமூகத்தின் தேவையாக அமைவதையும் உணர முடிகிறது.

**தானியங்களைச் சீர் செய்தல்**

வீடுகளில் பெண்கள் உமி நீக்கி நெல் உள்ளிட்ட தானியங்களை உரலில் இட்டு குற்றுதலைக் காணமுடிகிறது. மேலும் அவல் போன்ற உணவுப் பண்டங்களைத் தயாரிக்க அரிசியை உரலில் இட்டு இடித்த செய்திகளையும் சங்கப் பாடல்கள் வழி அறிய முடிகிறது. கொடிச்சி நெல் குற்றும் (நற். 373) செய்தியைக் காணமுடிகிறது. பாடலில் (238) அவல் இடித்த உலக்கையை வயல் வரப்பில் கிடத்தி வைக்கப்பட்டதான செய்தி பதிற்றுப் பத்திலும் (29) அவல் இடித்த உலக்கையை வாழை மரத்தில் சார்த்தி வைக்கப்பட்டிருந்த செய்தி மலைபடுகடாமிலும் விரித்துரைக்கப் பட்டுள்ளன.

அவற் பதம் கொண்டன, அம்பொதித் தோரை[89] (மலை. 121.)

தினைகுறு மகளிர் இசைபடு வள்ளையும்[90] (மலை. 342.)

வகை சால் உலக்கை வயின்வயின் ஓச்சிப்
அகவினம் பாடுவாம், நாம்[91] (கலி. 40)

அவல் இடித்தல், தானியங்களைக் குற்றுதல் போன்ற செயல்களை மேற்கண்ட பாடல் வரிகள் விளக்குகின்றன. உலக்கைக் கொண்டு நெல் மற்றும் அவல் இடிக்கும் செய்திகள் பல சங்கப்பாடல்களில்

காணப்படுகின்றன. பாலை நிலத்தில் உரலில் உலக்கையால் ஓங்கிக் குற்றுவதால் ஏற்படும் ஒலியைக் குறித்துக் கூறுகிறது ஒரு பாடல். மற்றொரு பாடலிலும் பாலை நிலத்தில் அவல் குற்றும் செய்தி சுட்டப்பட்டுள்ளது. மருத நிலத்தில் பெண்கள் விளையாட்டாக மணலில் உலக்கை கொண்டு குற்றி விளையாடும் நிகழ்வும் சுட்டப்பட்டுள்ளது. இங்ஙனம் ஆங்காங்கே சங்க இலக்கியத்தில் தானியங்களைப் பெண்கள் உமிநீக்கி களம் புடைத்த முறையை அறிவோம்.

கலித் தொகையில் பல பாடல்களில் பெண்கள் தினைகளைக் குற்றிய செய்தியையும் அவல் இடித்த செய்தியையும் காணமுடிகிறது. கலித்தொகை 40 ஆம் பாடலில் யானைத் தந்தத்தை உலக்கையாகப் பயன்படுத்தி, சந்தன மரத்தால் ஆன உரலில் தினையைக் இட்டு குற்றப்பட்ட செய்தி காணமுடிகிறது. 41 வது பாடலில் மூங்கில் அரிசியை பாறையாகிய உரலில் இட்டு தந்தத்தை உலக்கையாகக் கொண்டு இடித்து, சேம்பின் இலையை முறமாகப் பயன்படுத்தி புடைத்த செய்தி இடம்பெற்றுள்ளது. இவ்வாறு கலித் தொகைப் பாடல்களில் பெண்கள் செய்யும் வேலைகள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. விளைந்த நெற் குவியல்களை பாறை உரலில் இட்டும், சந்தன மர உரலில் இட்டும் உலக்கையில் குற்றி அரிசியாக்கிய பெரும் பணி பெண்களுடையதாக மட்டுமே இருப்பதை ஆழ்ந்தறிய முடிகிறது. ஆனால் வீட்டுப் பணிகள் ஆண்களின் பணிகளைப் போல அரும்பணியாகவோ பெரும்பணியாகவோ எண்ணப்படாதிருந்த காலமாக சங்க இலக்கியக் காலம் இருந்துள்ளது.

### உணவு சமைத்தலில் பெண்கள்

விருந்தோம்பல் என்பது சங்ககால மக்களின் இணையற்ற பண்பாகத் திகழ்ந்துள்ளது. மக்கள் தம் பயணங்களின் போது ஆங்காங்கே கிடைக்கும் இடங்களில் தங்கிச் சென்று வந்துள்ளனர். அவர்களுக்கு உணவளித்தல் தங்கள் கடமை என்று பாதீட்டை பண்பாடாகக் கொண்ட மக்கள் கருதியுள்ளனர். புலவர்களுக்கும் இரவலர்களுக்கும் உணவளித்து பாதுகாத்தல் என்பது பல பாடல்களில் சுட்டப்பட்டுள்ளன. பின்வரும்

புறநானூற்று பாடலில் அடுமகள் சோறு சமைத்து உணவளித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

அடுமகள் முகந்த அளவா வெண்ணெல்
தொடிமாண் உலக்கைப் பரூஉக் குற்று அரிசி
காடி வெள்உலைக் கொளீஇ நீழல்
ஓங்குசினை மாவின் தீம்கனி நறும்புளி
மோட்டுஇரு வராஅல் கோட்டுமீன் கொழுங்குறை,
செறுவின் வள்ளை, சிறுகொடிப் பாகல்,
பாதிரி ஊழ்முகை அவிழ்விடுத்து அன்ன
மெய்களைந்து இனனொடு விரைஇ
மூழ்ப்பப் பெய்த முழு அவிழ்ப் புழுக்கல் [92]

புறம். 399.

வெண்ணெல்லை அளக்காமல் அள்ளி வந்து குற்றி காடி நீர் ஊற்றி உலை வைத்து மாங்கனி மற்றும் வரால் மீன், துண்டுகளும் வள்ளைக் கீரை மற்றும் பாகற் காய், பாதிரிப் பூ ஆகியவற்றை ஆய்ந்து தூய்மை செய்து அரிசியோடு உலையில் இட்டு சமைத்து கொடுப்பாள் என விவரிக்கிறது மேற்கண்ட புறநானூற்றுப் பாடல். அடுமகள் எனக் குறிக்கப்பட்டதால் பெண்கள் சமையல் செய்தலை ஒரு தொழிலாக மேற்கொண்டுள்ளமையை அறியமுடிகிறது. வீட்டில் சமைக்கும் பெண்களை அடுமகள் என குறிக்கும் வழக்கம் இல்லை.

அரண்மனையிலோ அல்லது விழா போன்ற பிற இடங்களிலோ சமைப்பவர்களாக இவர்கள் இருந்திருக்கலாம் என்பதை அறியமுடிகிறது. அரண்மனையில் அனைவருக்கும் சமைத்து அளிக்கும் தொழிலாளர்களாக பெண்கள் இருந்துள்ளனர். *அளவா வெண்ணெல்* எனக் கூறுவதன் மூலம் அளவில்லாமல் உணவு சமைக்கப்பட்டிருப்பதை அறிவோம். மேலும் தலைமகன் வீட்டில் தன் மகள் உணவு சமைக்கும் விதத்தை செவிலித் தாய் ஒருத்தி நற்றாய்க்கு சொல்லும் விதமாக அமைந்த பாடல் குறித்து பின்வரும் கூற்று விளக்குகிறது

நம் மகள் சமையல் செய்யத் தொடங்குகிறாள். நம் வீட்டில் அவளுக்கு அடுப்பு கூட பற்ற வைக்கத் தெரியாது. அப்படிப்பட்டவள் அடுப்பை மூட்டுகிறாள். ஈர விறகை வைத்து ஊது ஊதென்று ஊதுகிறாள். புகை தாங்க முடியாமல் கண்களில் கண்ணீர். புளிப்புத் தயிரைப் பிசைந்த கையைத் தண்ணீரில் கழுவாமல் துணியில் துடைத்துக் கொண்டாள். முகமெல்லாம் கரி. இந்தக் கோலத்தோடு கணவனுக்கு உணவு பரிமாறுகிறாள்.[93]

வே. கணேசன், சங்கத்தமிழில் காதல் காட்சிகள், ப. 111.

என குறுந்தொகை பாடல் நிகழ்வை விளக்குகிறார் கணேசன். வீட்டு வேலைகளில் பழக்கம் இல்லாத இளம் பெண் உணவு தயாரித்தலைச் சித்திரிக்கிறது அப்பாடல் (குறுந் 167) பாடலில் பாலை நிலத் தலைவிக்கு குறிஞ்சி நிலத்தின் சிறப்புகளைக் கூறுகிறாள் தோழி. அதில் குறிஞ்சி நில மகளிர் செய்யும் வேலைகளைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

கோடுஉயர் பிறங்கற் குன்றுபல நீந்தி,
வேறுபுலம் படர்ந்த வினைதரல் உள்ளத்து
ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரிய,
முதைச்சுவற் கலித்த ஈர்இலை நெடுந்தோட்டுக்
கவைக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி,
கவட்டு அடிப் பொருத பல்சினை உதிர்வை
அகன்கண் பாறைச் செவ்வயின் தெறீஇ,
வரிஅணி பணைத்தோள் வார்செவித் தன்னையர்
பண்ணை வெண்பழத்து அரிசி ஏய்ப்ப,
சுழல்மரம் சொலித்த சுளகுஅலை வெண்காழ்
தொடிமாண் உலக்கை ஊழின் போக்கி,
உரல்முகம் காட்டிய சுரைநிறை கொள்ளை,
ஆங்கண் இருஞ்சுனை நீரொடு முகவா,
களிபடு குழிசிக் கல்அடுப்பு ஏற்றி,
இணர்ததை கடுக்கை ஈண்டிய தாதின்,

குடவர் புழுக்கிய பொங்கு அவிழ்ப் புன்கம்,
மதர்வை நல்ஆன் பாலொடு, பகுக்கும் [94]

அகம்.393. 1-17.

குறவர் பெண்கள் விருந்தினரை உபசரிக்கும் முறையை இப்பாடல் விரிவாக விளக்குகின்றது. பழந்தமிழர் உணவு குறித்தும் அவர்களின் சமையல் முறை குறித்தும் சிங்கார வேலு பின்வருமாறு விளக்குகிறார்.

> People, especially of the agricultural region, also ate boiled food, made of paddy – rice as well as of its flour. Indeed a great favourite item of food in those days (as even in these days) was the rice gruel of porridge which was known as Kul (கூழ்) when igt was thin, and Kali (களி) when it was prepared thick. Also the rice gruel or porridge would seem to have been a great delicacy particularly if it was mixed with the pleasant, acidulous, and sweet, pulp of tamarid fruit.[95]

(S. Singaravelu. Social Life Of The Tamils, pg. 27 - 28)

தானியங்களைத் திருக்கையில் திரித்து மாவாக்கி (பெரும்பாண். 339 – 345, 96-100) களி கூழ் உள்ளிட்ட உணவுகள் செய்தமை குறித்து விளக்குகிறார். இப்பணிகளைப் பெண்கள் செய்தனர் என்பது தெற்றென விளங்குகிறது.

காட்டை எரித்து விளை நிலமாக மாற்றிய நிகழ்வு தொடங்கி, தினையை அறுத்து, உதிர்த்து, காய வைத்து, திரிகையில் இட்டு திருகி, முறத்தினால் புடைத்து, உரலில் இட்டு தீட்டி, பானையில் சுனையின் நீரை ஊற்றி, கல் அடுப்பு பற்ற வைத்து உலை ஏற்றி, சோறாக்கி அச்சோற்றில் பாலை ஊற்றி வழிசெல்வோர்க்கு அளிப்பர் எனக் கூறுகிறது அகநானூற்று பாடல் (393). இப்பாடல் பெண்கள் செய்யும் வேலைகளைத் தொகுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது. வறுமை நிலையிலும் பாலை நில மகளிர் விருந்தினர்க்கு உணவளித்த செய்தியைப் பின்வரும் பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன.

நீழல் முன்றில், நிலஉரல் பெய்து,
குறுங்காழ் உலக்கை ஓச்சி, நெடுங்கிணற்று
வல்ஊற்று உவரி தோண்டி, தொல்லை
முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி,
வாராது அட்ட, வாடுஊன், புழுக்கல்[96]

பெரும். 96-100.

நிலத்தில் பதிக்கப்பட்ட உரலில் புல்லரிசியை இட்டு சிறிய உறுதியான உலக்கையால் அதைக் குற்றி எடுத்து, ஆழமான கிணற்றில் அமைந்த சில்லூற்றைத் தோண்டி உவரி நீரைக் கொண்டு வந்து பழைய விளிம்பு உடைந்த பானைகளில் ஊற்றி உடைந்த அடுப்பில் உலை வைத்து, சோறு சமைத்து அத்துடன் கருவாடும் விருந்தினர்க்கு உண்ணத் தருவதாகக் கூறுகிறது மேற்கண்ட பாடல் வரிகள். பெண்கள் செய்யும் இத்தகைய வேலைகளின் மூலம் அச்சமூகத்தின் வறுமை நிலையை உணர்த்துகிறார் புலவர். பின்வரும் பாடல் வரிகள் *பெண்கள் கள் தயாரித்த செய்தியைக் கூறுகிறது.*

*கள்அடு மகளிர் வள்ளம்* நுடக்கிய
வார்ந்து உகு சில்நீர் வழிந்த குழம்பின்
..........................................................
நெல்மா வல்சி தீற்றி, பல்நாள்
குழிநிறுத்து, ஓம்பிய குறுந்தாள் ஏற்றைக்
கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவீர் [97]

பெரும். 339-345.

பெண் பன்றிகளை நாடி ஆண் பன்றி போகாதபடி அதை ஒரு குழியில் வைத்து வளர்த்து அதற்கு நெல்லை இடித்து அதன் மாவைக் கொடுத்து வளர்த்தி அதைக் கொன்று அதன் இறைச்சியுடன் கள்ளையும் விருந்தினர்க்கு மகளிர் அளித்த முறையை மேற்கண்ட பெரும்பாணாற்றுப்படை பாடல் விளக்குகிறது.

அறம் நிலைஇய அகன் அட்டில்
சோறு வாங்கிய கொழுங் கஞ்சி[98]

பட்டினப். 43-44.

காவிரி பூம்பட்டினத்தில் அகன்ற உணவுச் சாலைகளில் உணவு சமைத்து, வருவோருக்கு வழங்கப்பட்டமையை தெரிவிக்கிறது இப்பாடல். உணவு சாலைகள் எனும் போது மிகுதியான மக்கள் உணவருந்த வரும் இடமாகையால் அதிக அளவிலான உணவுப் பொருட்கள் தயாரிக்க வேண்டியிருக்கும். இருபாலரும் உணவு சமைக்கும் வேலைகளைப் பகுத்துச் செய்திருக்கலாம் என்பதை ஊகிக்க முடிகிறது. பின்வரும் செய்தி மதுரைக் காஞ்சியில் உணவுச் சாலையில் வழங்கிய உணவுகளைக் குறித்து விளக்குகிறது.

> தேனும், மணமும் உடைய பலாப்பழத்தின் சுவையும், வடிவு வேறுபட, அழகுடைய இனிய மாவின் பழங்களும், பலவாய் வேறுபட்ட வடிவினையுடைய வாழைக்காய், வழுதுணங்காய் முதலிய காய்களும், வாழைப்பழம், முந்திரிக்கை பழம் முதலிய பழங்களும், மழை உரிய பருவத்தில் பெய்து வளர்கையால் கொடிகள் விட்டு, அழகு பெற்று, மெல்லிய சுருள் விழுந்த சிறிய இலைகளையுடைய இலைக்கறிகளும், இனிய பாகினால் கட்டிய அமுதம் திரண்டாற் போன்ற இனிய சாற்றினைக் கொண்ட கண்ட சருக்கரையும், புகழ்ச்சியுண்டாகச் சமைத்த பெரிய இறைச்சிச் சோறும் ஆகியவற்றை நிலத்தின் கீழ் வளர்ந்த கிழங்குகளுடன், பல இடங்களிலும் நுகர இனிய பாற்சோறு, பால் முதலியவற்றைக் கொண்டு வந்து இடுவோர் எழுப்பும் ஓசையுடயது.[99]

மா. பரிமணம் (பதி. ஆ) பத்துப்பாட்டு, இரண்டாம் பகுதி மூலமும் உரையும், ப 133.

என மதுரை நகரில் காணப்பட்ட பல வகை ஓசைகளில் உணவு சாலைகளின் ஓசையும் கலந்திருப்பதைச் சுட்டுகிறது. மனித இனத்தில் பெண்கள் தனியாக வீட்டில் இருக்க தொடங்கிய காலம் தொட்டு இக்காலம் வரை வீடுகளில் பெரும்பாலும் உணவு சமைத்தல் பெண்களின் பணியாக இருந்து வருகிறது. அந்த வகையில் மதுரையின் உணவு சாலைகளில் பெண்களின் பங்களிப்பு மிகுதியாக இருந்திருக்க வாய்ப்பு அதிகமிருக்கிறது. ஏனெனில் அவ்வுணவுச் சாலைகள் நாள்

முழுதும் இயங்கும் தன்மை உடையன. எப்பொழும் அங்கு உணவு உண்போர் வருவதும் போவதுமாக இருக்கும் இடம் ஆகையால் அங்கு பணிபுரிய அதிக அளவில் உணவு சமைப்போர் அல்லது சமையலுக்கு உதவுவோர் என ஆட்கள் தேவைப்படுவர். அச் சாலைகளில் பணி புரிந்தோர் இன்னார் எனக் குறிப்பிட்டு சொல்லப்படவில்லை. எனினும் இது போன்ற இடங்களில் முழுதும் பெண்கள் பணியாற்றினர் எனக் கூற இயலாவிட்டாலும் பெருமளவில் இச்சாலைகளில் பெண்கள் பணியாற்றியிருக்கலாம் என்பதில் ஐயம் இல்லை.

**மோர் கடைதல்**

மோர் கடைதல் என்பது ஆயர் மகளுக்கு மட்டும் உரியதான வேலையாகும். முல்லை நிலத்தில் கால்நடைகள் மிகுதியாக வளர்க்கப்பட்டமையால், அங்கு உபரி பால் கிடைக்கப் பெற்றது. உபரியான பாலில் உறையிட்டு தயிராக்கி, மோர் கடைதல் நடைபெற்றுள்ளது. ஆயர் மகள் மோர் கடைதலைப் பின்வரும் பாடல் சிறப்பாக விளக்குகிறது.

நள்இருள் விடியல் புள்ளழப் போகி,
புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி,
ஆம்பி வால்முகை அன்ன கூம்புமுகிழ்
உறைஅமை தீம்தயிர் கலக்கி, நுரை தெரிந்து[100]

பெரும். 155-158.

அதிகாலைப் பொழுதில் பறவைகள் எழும் போது குடைக்காளானின் முகிழ் போல முகிழையுடைய, உறையிட்டு இறுகிய தயிரைப் புலிபோலும் முழக்கத்தை உடைய மத்து கொண்டு ஆரவாரம் எழ ஆயமகள் மோர் கடைகிறாள் என விளக்குகிறது பெரும்பாணாற்றுப்படை பாடல் வரிகள்.

**புலைத்தி**

ஆடைகளைத் துவைப்பவளைப் பசை விரல் புலைத்தி (அகம் 34), வறன்இல் புலைத்தி (நற். 90) என்ற தொடர்கள் சுட்டுகின்றன. பெண்கள் அவரவர் வீட்டில் அவரவர் துணிகளை துவைத்து உடுத்தியிருந்தனர். பிற்காலத்தில் அரச குடும்பத்தினர் அல்லது செல்வந்தர்கள் தங்களின் துணிகளைத் துவைத்துக் கொடுக்க ஆட்களை நியமித்திருந்தனர். அதன் பின்னர் துணி துவைத்தல் ஒரு தனித் தொழிலாக வளர்ந்துள்ளதைக் காணமுடிகிறது. இங்ஙனம் துணி துவைத்துக் கொடுக்கும் பெண்களைப் 'புலைத்தி' எனச் சுட்டுகிறது சங்க இலக்கியம். சங்க இலக்கியத்தில் காணப்படும் தலை மக்களுக்கு கீழ் நிலையில் உள்ள மாந்தர்களைப் பற்றி குறிப்பிடும் போது கைலாசபதி புலத்தியரைப் பற்றி பின்வருமாறு சுட்டிச் செல்கிறார்.

1. கட்டில் பின்னுபவன் (இழிசினன்)
2. பெரிய பறையறைவோன் (இழிசினன்)
3. பெரிய பறையறைவோன் (புலையன்)
4. ஆடைகளைத் துவைப்பவள் (புலைத்தி)[101]

க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப. 362.

எல்லா மக்களுக்கும் துணி துவைத்துக் கொடுப்பவள் அல்ல இப்புலத்தி. சமூகப் படிநிலையில் மேல் நிலையில் உள்ளவர்களுக்கு துணிகளை இவள் துவைத்துக் கொடுத்துள்ளாள். செல்வர்களுக்கு சேவை செய்யும் பணியை இவள் மேற்கொண்டுள்ளமையால் இவர்களது வாழ்வு வறுமை இன்றி இருந்துள்ளதைப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

பசை கொல் மெல் விரல், பெருந் தோள், புலைத்தி[102]

அகம். 34.11.

வறன் இல் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப் புகர் கொண்ட புன் பூங் கலிங்கமொடு[103]

நற். 90. 3-4.

பூக்கண் பறைந்த புன்தலைச் சிறாஅரொடு
அவ்வரி கொன்ற கறைசேர் வள்உகிர்ப்
பசைவிரல் புலைத்தி நெடிதுபிசைந்து ஊட்டிய
பூந்துகில் இமைக்கும்.[104]

அகம். 387. 4-7.

இப்பாடல்களில் குறிக்கப்பெறும் பசை, பசை விரல் புலத்தி என்னும் தொடர்கள் ஆடைகளுக்கு கஞ்சி போடுவதைக் குறிக்கின்றன. கஞ்சி என்னும் சொல்லும் ஆங்காங்கே கஞ்சி போட்டுள்ளமையைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

காழியர் கவ்வைப் பரப்பின் வெவ் உவர்ப்பு ஒழிய[105]

அகம். 89.

களர்ப்படு கூவல் தோண்டி நாளும்
புலைத்தி கழீஇய தூவெள்ளறுவை[106]

புறம். 311. 1-2

என்னும் வரி துணி வெளுப்பவரைக் காழியர் எனக் குறிக்கிறது. அவர்கள் துணி துவைக்க உவர்ப்பு மண்ணைப் பயன்படுத்தியுள்ளமையை அறிய முடிகிறது. மேலும் களர் நிலத்தில் இருந்த கிணறுகளிலிருந்து நீர் கொண்டு வந்து துணி துவைக்கப்பட்டதையும் அறிய முடிகிறது.

துணி துவைத்தல் ஆண் பெண் இருவராலும் இணைந்து செய்யப்பட்டிருக்க வேண்டும். துணி வெளுக்கப் பயன்படுத்தப்பட்ட உவர் மண்ணை பாலை நிலப்பகுதியில் இருந்து ஆண்கள் கொண்டு வந்த செய்தியையும் அகநானூற்று பாடல் (89) விளக்குகிறது.

**அரண்மனையில் பெண்கள்**

பெண்கள் அரண்மனையில் பலவிதமான பணிகளைச் செய்துள்ளனர். அரண்மனைகளில் வேலை செய்வதென்பது வீட்டுப் பணிகளைச் செய்வது போல் அல்ல. அரண்மனையில் செய்யும் போது

பணிகளைச் செம்மையாக செய்ய வேண்டும். ஒவ்வொரு பணிகளிலும் தேர்ந்தவர்கள் அரண்மனைகளின் பணிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுவர். அந்த வகையில் ஒவ்வொரு பணியும் ஒரு தனித்த தொழில் என சிறப்பு நிலையை அடைந்திருந்தது.

அரண்மனையில் மகளிர் வழிபாடு செய்தமையை நெடுநல்வாடை (36) சுட்டிச் செல்கிறது. இவ்வழிபாடு அரசகுல மகளிரால் மேற் கொள்ளப்பட்டனவா அன்றி அரசியரின் தோழியரா அன்றி அரண்மனைப் பணிப் பெண்டிரால் மேற்கொள்ளப்பட்டனவா என்பது குறித்து அறியமுடியவில்லை. பெண்களால் வழிபாடு நடத்தப்பட்டது என்பதும், வழிபாடு நடத்தப்பட்ட விதம் குறித்தும் பின்வரும் பாடல் வரிகள் விளக்கி நிற்கின்றன.

வெள்ளி வள்ளி வீங்கு இறைப் பணைத் தோள்,
மெத்தென் சாயல், முத்து உறழ் முறுவல்,
பூங்குழைக்கு அமர்ந்த ஏந்து எழில் மழைக்கண்,
மடவரல் மகளிர் பிடகை பெய்த
செவ்வி அரும்பின் பைங்கால் பித்திகத்து[107]

நெடுநல். 36 – 40.

வழிபாடு எக்காலத்தும் பெண்களுக்கு உரியது என்பதை சங்க பாடல்கள் தொட்டு தற்கால நடைமுறைகள் வரை அறியமுடிகிறது. மேலும், அரண்மனையைப் பராமரித்தல், அரண்மனைவாசிகளுக்கு உணவு சமைத்தல், உடை தயாரித்தல், உடைகளைத் துவைத்தல், ஆபரணங்கள் தயாரித்தல், ஒப்பனைப் பொருட்கள் தயாரித்தல் போன்ற பணிகளை மேற்கொள்ள அத்தொழில்களில் சிறந்தவர்களை பணிக்கு அமர்த்துவர். அந்த வகையில் பல அரண்மனைப் பணிகளில் பெண்கள் பங்கு கொண்டுள்ளமையை சங்கப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

## ஏவல் மகளிர்

அரசர் அல்லது அரசரின் சுற்றத்தார் ஏவுவதைச் செய்பவர் ஏவல் மகளிர் எனப்படுகின்றனர். ஆண்கள் ஏவலர் என அழைக்கப்பட்டனர்.

அரண்மனையில் போரில் தோல்வியுற்ற வீரர்களின் மனைவியர் பணிப் பெண்களாக இருந்துள்ளனர். அரசவையில் தேவையான பணிகளைச் செய்தல், அரண்மனையில் பிற தொழில்களைச் செய்தல் என இரு இடங்களிலும் பணி புரிந்துள்ளனர். அரசனை நாடி வரும் புலவரைப் பாதுகாத்து அவர்களை உபசரித்தல் போன்ற செயல்களை செய்யும் ஏவல் மகளிர் குறித்து பின்வரும் பொருநராற்றுப்படை பாடல் வரி விளக்குகிறது.

இழைஅணி வனப்பின் இன்நகை மகளிர்,
போக்குஇல் *பொலங்கலம் நிறைய*, பல்கால்,
வாக்குபு தரத்தர[108]

பொருநர். 85-87.

இழை அணிந்த அழகிய இனிய புன்னகையைக் கொண்ட மகளிர் பொருநருக்கு பொன் வட்டில் நிறையும் படி கள்ளினைத் திரும்ப திரும்ப அளித்து உபசரித்தனர். அரசியின் கட்டில் அலங்கரிக்கப்பட்டிருப்பது குறித்தும், அதில் விரிக்கப்பட்ட போர்வை குறித்தும், அது துவைக்கப்பட்ட விதம் குறித்தும் நெடுநல் வாடை கூறுகிறது.

வியன் கட் கானத்து
முல்லைப் பல்போது உறழப் பூ நிரைத்து,
மெல்லிதின் விரிந்த சேக்கை மேம்பட,
துணை புணர் அன்னத் தூ நிறத் தூவி
இணை அணை மேம்படப்பாய், அணை இட்டு,
காடி கொண்ட கழுவுறு கலிங்கத்துத்
தோடு அமை தூமடி விரிந்த சேக்கை[109]

நெடுநல். 129-135.

அகன்ற காட்டுப் பகுதியில் பூத்த முல்லை பூக்களும் வேறு பல பூக்களும் கட்டிலின் மேல் பரப்பப்பட்டுள்ளன. இரண்டு பகுதியாய் அமைந்த மெத்தைகள் அக்கட்டிலின் மேல் இணைத்து போடப்

பட்டுள்ளன. மென்மையான துகில் கொண்டு அம்மெத்தைகள் போர்த்தப்பட்டன. அப்படுக்கையின் மேல் அன்னச் சேவலின் தூய நிறமுடைய நுண்ணிய இறகுகள் விரிக்கப்பட்டிருந்தன. அப்படுக்கையின் மீது தலையணைகள் இடப்பட்டிருந்தன. கஞ்சியிட்ட மெல்லிய தூய துணி மடித்துப் போடப்பட்டிருந்தது.

இங்ஙனம் அரசமாதேவியின் கட்டில் அலங்கரிக்கப்பட்டிருந்ததை நெடுநல்வாடை விளக்குகிறது. இப்பணிகளை எல்லாம் செய்து வைத்த பெண்கள் *ஏவல் பெண்டிர்* என அழைக்கப்பட்டனர்.

**பாசறைப் பெண்டிர்**

அரசன் போர் புரியும் போது இரவில் அரசன் மற்றும் அவனது படை ஆட்கள் அனைவரும் பாசறையில் தங்குவர். அரசனின் பாசறையில் அரசனுக்கு பணிவிடை செய்ய அமர்த்தப்படும் மகளிர் பாசறை பெண்டிர் எனப்படுகின்றனர். முல்லைப் பாட்டு பாசறையில் விளக்கேற்றி ஒளியூட்டிய விதத்தை விளக்குகிறது.

குறுந்தொடி முன்கை, கூந்தல் அம் சிறுபுறத்து,
இரவுபகல் செய்யும் திண்பிடி ஒள்வாள்
விரவுவரிக் கச்சின் பூண்ட, மங்கையர்
நெய்உமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇ,
கைஅமை விளக்கம் நந்துதொறும் மாட்ட[110]

முல்லை. 45-49.

குறிய தொடி அணிந்த முன்கைகளையும், கூந்தல் அலைகின்ற சிறு முதுகினையும், இரவைப் பகலாக்கும் ஒளி பொருந்திய திண்மையான பிடி கொண்ட வாளினைக் கச்சையில் கட்டியிருந்து *மகளிர் பாசறையின் பாவை விளக்கில் நீண்ட திரியை இட்டு நெய் வார்க்கும் குழாயால் நெய் வார்த்து விளக்கேற்றியுள்ளனர்.*

போர்க்களம் ஆபத்து நிறைந்த பகுதி. ஆகையால் அங்கு பணி புரியும் மகளிர் இடையில் வாளை செருகி வைத்திருந்தனர். தமக்கோ

அரசருக்கோ ஆபத்து வரும் காலத்தில் பாதுகாப்பிற்காக குறுங்கத்தி வைத்திருந்திருக்கலாம். போரில் காயமுற்ற வீரர்களுக்கு பணிவிடை செய்யும் பெண்களாகவும் இவர்கள் இருந்துள்ளனர். சங்க இலக்கியப் பெண்கள் வீரம் செறிந்தவர்களாக இருந்துள்ளனர். மாறுபட்டுத் திரிந்த பாலை நிலம் தவிர்த்து நால்வகை நிலங்களிலும் பெண்கள் தம் பங்களிப்பைச் செய்துள்ளனர்.

## தோழியர்

அரண்மனையில் அரசியின் உடன் இருந்து அரசி ஏவுதலைச் செய்யாமல் அரசிக்கு வேண்டுவதை உணர்ந்து செய்யும் மகளிரும் இருந்துள்ளனர். அவர்களைத் தோழி எனக் குறிக்கும் வழக்கமும் இந்துள்ளது. இவர்கள் மற்ற ஏவல் பெண்டிரைப் போல் அல்லாமல் அரசியுடன் உரிமையுடன் பழக அனுமதிக்கப் பட்டோர். அரசியின் இன்பத்திலும் துன்பத்திலும் பங்கு கொண்டு செவிலித் தாயர் போன்று அரசிக்கு வேண்டியவற்றை இவர்கள் செய்துள்ளனர். இதனை பின்வரும் நெடுநல்வாடை பாடல் அடிகள் விளக்குகின்றன.

தளிர் ஏர் மேனி, தாய சுணங்கின்
அம் பணைத் தடைஇய மென் தோள், முகிழ் முலை,
வம்பு வசித்து யாத்த, வாங்கு சாய் நுசுப்பின்,
மெல் இயல் மகளிர் நல் அடி வருட,
நரை விராவுற்ற நறுமென் கூந்தல்
செம்முகச் செவிலியர் கைம்மிகக் குழீஇ
குறியவும் நெடியவும் உரைபல பயிற்றி,
இன்னே வருகுவர் இன் துணையோர் என
உகத்தவை மொழியவும்[111]

நெடுநல். 147- 156.

தலைவனைப் பிரிந்த அரசமாதேவி கால்களை கழுவிக் கொள்ளாமலும், செம்பஞ்சுக் குழம்பு பூசிக் கொள்ளாமலும், பூண்கள் அணியப் பெறாமலும், துயரத்தில் உறங்காமல் வருந்தி இருந்தாள். அவளை உறங்கச் செய்ய

தோழியர் அவளது பாதங்களை மெல்ல வருடி கொடுத்தனர் என்கிறது பாடல். இம்மகளிர் ஏவல் மகளிர் போல் அல்லர் என்பதை அறிவிக்க அப் பெண்களின் தகுதியை சிறப்பாக விளக்குகிறார் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்.

அப்பெண்கள் மாந்தளிர் போன்ற அழகிய மேனியை உடையவர். மார்பில் தேமல் உடையவர். அழகிய மூங்கில் போன்ற திரண்ட மென்மையானத் தோள்களை உடையவர். கச்சினால் இறுகப் பிணித்துக் கட்டப்பட்ட தாமரை மொட்டு போன்ற முலைகளை உடையவர். வளைந்து நெளியும் இடையினை உடையவர். மென்மையான இயல்பினை உடையவர் என்றெல்லாம் அப்பெண்களை சிறப்பிக்கிறார் புலவர். இவற்றின் மூலம் அப்பெண்கள் ஏவல் பெண்களைக் காட்டிலும் அரசிக்கு நெருக்கமானோர் என்பதை அறியமுடிகிறது.

**வணிகத்தில் பெண்**

சங்ககாலத்தின் தொடக்க காலத்தில் இருந்த வணிக முறை பண்ட மாற்று முறையாகும். வெளி நாடுகளுடன் வாணிபத் தொடர்பு ஏற்பட்ட பின்னரே செம்பு, வெள்ளி மற்றும் தங்கம் உள்ளிட்ட நாணயங்களின் பயன்பாடு உருவானது. உள்நாட்டு வாணிபத்தில் பண்டமாற்று முக்கியமானதாக இருந்தது. சங்க காலத்தில் நடைபெற்ற பண்டமாற்று குறித்து பின்வரும் கூற்று விளக்குகிறது.

> மிகுதியாகப் பண்டமாற்றுப் பொருளாக ஏற்றுக் கொள்ளப்பட்டது நெல். பெரும்பாலும் கிராமாந்திரங்களில் நன்கு வெண்மையாக்கப்பட்ட உப்பு நெல்லுக்கு பதில் மாற்றாக பெறப்பட்டது. உப்பின் விலையை வைத்து நெல்லுக்கு விலை கூறப்பட்டது. தேனும் கிழங்குகளும் மீன் எண்ணெய், எண்ணெய்கள் என்பவற்றோடு மாறின. கரும்பு, அவல் என்பவற்றை மானிறைச்சி, மது என்பவற்றோடு பண்ட மாற்றினர்.[112]

ந. சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப. 306

என சங்ககால பண்ட மாற்று முறையைத் தொகுத்துக் கூறுகிறார் ந.சுப்பிரமணியன். இப்பண்ட மாற்றில் குறிப்பாக பெண்கள் அதிக அளவில் ஈடுபட்டிருந்தனர் என்பதை சங்கப்பாடல்கள் வழி அறியமுடிகிறது. பூக்கள், பூமாலைகள், சுண்ணம், நவமணிகள், பொன், சந்தனம், கற்பூரம், பாக்குக் காய்கள், வெற்றிலை, சுண்ணாம்பு, சிறியதும் பெரியதுமான பண்ணியாரங்கள் விற்கப்பட்ட செய்தி மதுரைக் காஞ்சியில் கூறப்பட்டுள்ளது. இதில் பெண்களின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது. தெருக்களில் முது மகளிர் வீடு தோறும் திரிந்து பண்ணியம் மற்றும் பூக்களை விற்ற செய்தியைப் பின்வரும் வரிகளில் காணமுடிகிறது.

புடை அமை பொலிந்த வகை அமை செப்பில்
காமர் உருவின் தாம் வேண்டு பண்ணியம்
கமழ் நறும்பூவொடு மனை மனை மறுக[113]

மதுரை. 421- 423.

மேலும் பலவகை உணவுகள், பண்டங்கள், நிலத்திலிருந்தும் நீரிலிருந்தும் கிடைக்கும் பொருட்களுக்கு மாற்றாக திருமணிகள், முத்துக்கள், பொன் போன்றவற்றைப் பெற்றுக் கொண்ட செய்தி மதுரைக்காஞ்சியில் கூறப்படுகிறது. மதுரையில் இயங்கிய பல தொழில்களை மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதன் விளக்கியுள்ளமைக் காணலாம். பெண்கள் இணைந்து அரச நெறி வழி சமூகப் பணிகளை செம்மையுறச் செய்துள்ளனர்.

அறுத்த சங்கினை வளை முதலியனவாகக் கடைகின்றவரும், அழகிய மணிகளைத் துளையிடுவாரும் சுடப்பட்ட நல்ல பொன்னால், விளங்கும் அணிகலன்களைச் செய்யும் தட்டாரும், பொன்னை உரைத்த உரை கொண்டு, அதன் தரத்தை அறுதியிடும் பொன்வாணிகரும், ஆடைகளை விற்பவரும், செம்பினை நிறுத்து வாங்கிக் கொள்பவரும், கச்சுக்களைத் தம் தொழில் முற்றுமாறு முடிவாரும், பூக்களையும், சந்தனத்தையும் நன்றாக ஆராய்ந்து விற்பவரும், பலவகையாக நுட்பமாக உள்ள தொழில்களை ஒப்புமை கட்டித் தம் கூரிய அறிவுத் திறத்தால் ஓவியமாகத் தீட்டுபவரும், பிற தொழில் புரிவாரும், திரண்டு

தெளிந்த அலைகளில் விளங்கும் அறலைப் போல ஒள்ளிய பலவாகிய சிறியனவும், பெரியனவுமாகிய மடித்த புடவைகளைக் கொண்டு வந்து விரித்து, சிறியோரும் பெரியோருமாகிய நெய்தல் தொழில் செய்வோர் திரண்டு, நான்காய் வேறுபட்ட தெருக்கள் தோறும் ஒருவர் கால், ஒருவர் காலொடு நெருங்க நின்று, வாணிகம் புரிவர்.[114]

அ. மா. பரிமணம் (பதி. ஆ.) பத்துப்பாட்டு, இரண்டாம் பகுதி மூலமும் உரையும், ப. 129.

இச்செய்திகள் அரசனின் அரண்மனையைச் சுற்றியுள்ள நான்கு பெருந் தெருக்களிலும் நடைபெற்ற வணிகத்தை உறுதிபடுத்துகின்றன. இங்ஙனம் விரிந்த அளவில் நடைபெற்ற வணிகத்தில் பெண்களின் பங்களிப்பு இல்லாமல் இருக்க வாய்ப்பு இல்லை. பெண்களும் பொருளாதார வளர்ச்சிக்கு இணைந்து நின்று செயல்பட்டனர்.

தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்
மீன் நெய்யொடு நறவு மறுகவும்
தீங்கரும்பொடு அவல் வகுத்தோர்
மான்குறையொடு மது மறுகவும்[115]

பொருநர். 214-217.

குறிஞ்சி நில உணவுப் பொருட்களான தேன் மற்றும் கிழங்குக்கு நெய்தல் நிலத்தின் மீன் மற்றும் நறவாகிய கள்ளையும் மாற்றிக் கொண்டனர். மருத நிலத்தின் சுவையான கரும்பு மற்றும் அவலுக்கு முல்லை நிலத்து உணவான மானின் தசையோடு மதுவை மாற்றிக் கொண்டனர். ஆயர் மகள் மோர் விற்று அதற்கு மாற்றாக எருமையையும் பசுக் கன்றையும் பெற்ற செய்தியை பின்வரும் பெரும்பாணாற்றுப்படை வரிகள் விளக்குகின்றன.

புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ
நாள் மோர் மாறும் நல்மா மேனி,
சிறுகுழை துயல்வரும் காதில், பணைத்தோள்

குறுநெறிக் கொண்ட கூந்தல், ஆய்மகள்
அளைவிலை உணவின் கிளைஉடன் அருந்தி,
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்,
எருமை, நல் ஆன், கருநாகு பெறூஉம்[116]

பெரும். 159-165.

மோரைக் கடையும் போது மோர்த்துளிகள் தெறித்து புள்ளி புள்ளியாக படிந்த பானையை, தலையில் சும்மாடு கட்டி அதன் மீது வைத்து புதிய மோரை விற்கும் ஆயர் மகள், மாமை நிறம் கொண்டவள் என்றும், காதில் சிறிய குழையை அணிந்தவள் என்றும், மூங்கில் போன்ற தோளை உடையவள் என்றும் வர்ணிக்கிறார்.

அவள் மோர் விற்றதனால் கிடைத்த நெல்லினால் தனது சுற்றத்தார் அனைவருக்கும் உணவளித்தாள். நெய்யை விற்று அதற்காக பொன்னைப் பெறாமல் எருமையையும் பசுக் கன்றையும் பெற்றுள்ளாள் என்பன தெளிவாகின்றன.

பொன்னைக் காட்டிலும் ஒரு ஆய மகளுக்கு கால்நடைகள் அதிக செல்வத்தை வழங்கக் கூடியவை. அதிக அளவில் பால் பொருட்களை உற்பத்தி செய்ய வேண்டும் என்ற நோக்கு, நெய்க்கு பதிலாக வேறெதையும் பெறாமல் கால்நடைகளைப் பெற்றதற்கு காரணமாகும். இன்றைக்கு காணப்படுவது போல் இல்லையெனினும் இதனை தொடக்கக்காலத்தில் மேற்கொள்ளப்பட்ட சிறிய அளவிலான மூலதனம் சேர்க்கும் முயற்சி எனக் கொள்ளலாம். இதனை பின்வரும் அழகம்மையின் கூற்று விளக்குகிறது.

நெய்க்கு மாற்றாக பொன் பெறாது எருமை, ஆன், கன்று இவற்றையே பெறுவர் என்று கூறப்படுவதினின்றும் பொருளாதார வளர்ச்சியில் இவர்களின் அக்கறை தெரிகிறது. எதிர்காலத்தில் தொழிலை விரிவுபடுத்த மூலதனம் தேவைப்படும். இலாபத்தைப் பெற்றால் அதை மறு முதலீடு செய்வதற்கும் தொழில்களின் வளர்ச்சிக்கும் பயன்படுத்த உதவும் என்ற பொருளியற் கருத்து

அக்கால முல்லை நில மகளிரது சிந்தனையில் உருவாகியிருக்கிறது. பெண்கள் பொருளாதார ரீதியாகச் செயல்பட்டாலும் அதில் அடிமைத்தனமோ அன்றி வலிந்து ஈடுபட்டதாகவோ செய்திகள் இல்லை.[117]

கேபி. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர், ப. 141.

தொடக்கக்கால மூலதனம் முல்லை நிலத்தில் உருவாகியிருந்த தன்மையை மேற்கண்ட கூற்று விளக்குகிறது. தனிச்சொத்து உருவாக்கத்தின் அடிப்படையாக மருத நிலத்தில் இந்தத் தொழில்கள் நடைபெற்றன. ஆயர் மகள் வேறு இடங்களுக்கு சென்று மோர் விற்ற செய்தியைப் பின்வரும் கலித்தொகை வரிகள் புலப்படுத்துகிறது.

பேர் ஊரும் சிற்றூரும் கௌவை எடுப்பவள் போல்,
மோரோடு வந்தாள்[118]

மு.கலி 109. 6 – 7.

அகலாங்கண் அளைமாறி, அலமந்து, பெயருங்கால்[119]

மு.கலி. 108. 5.

அளைமாறிப் பெயர் தருவாய்[120] மு. கலி. 108. 26.

அழகில் சிறந்தவள் எனத் தலைவன் பாடுவதாக அமைந்துள்ளன இப்பாடல் வரிகளில் தலைமகளாகிய ஆயர்மகள் பேரூர் சிற்றூர் என பல இடங்களுக்குச் சென்று மோர் விற்று வருகிறாள். நற்றிணையில் குருக்கத்தி மலர் விற்கும் பெண் செய்த தொழிலை கார்த்திகேசு சிவதம்பி கீழ்வருமாறு சுட்டுகிறார்.

உழவர்களினுடைய பெண்மக்கள் மலர்களைக் கூவி விற்றுள்ளனர்

கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 181.[121]

தலைவனைப் பிரிந்த தலைவிக்கு இனிமையானவையெல்லாம் கொடுமையானவையாக கேட்கின்றன. புண்ணில் வேலை பாய்ச்சியது போன்ற துன்பத்தைத் தருகின்றது குயிலின் ஓசை. அதைவிட தெளிந்த நீர் பெருகி வரும் ஆறு மிகவும் கொடியதாக இருக்கிறது.

அழகிய குருக்கத்தி மலருடன் சண்பக மலரையும் வாங்கிக் கொள்வீராக என வண்டுகள் மொய்க்கும் தன்மையை உடைய அப்பூக்களை வைத்திருக்கும் பெட்டியை உடைய உழவர்களின் இளமகள் ஆற்றைக் காட்டிலும் கொடியவளாக இருக்கின்றாள். என தலைவி வருத்த மிகுதியால் கூறுகின்றாள். இதனை நற்றிணைப் பாடல் (97) விளக்குகிறது. மேலும் மலைபடுகடாம் பாடல் ஒன்றில் புதுவகையில் பண்டமாற்று நிகழ்ந்துள்ளதை பின்வரும் பாடல் கூறுகிறது.

ஞெண்டு ஆடு செறுவில் தராய்க்கண் வைத்த
விலங்கல் அன்ன, போர்முதல் தொலைஇ
வளம் செய் வினைஞர் வல்சி நல்க,
துளங்கு தசும்பு வாங்கிய பசும் பொதித் தேறல்,
இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கள் தொறும் பெறுகுவிர்[122]

மலை. 460 - 464.

என வண்டுகள் திரியும் வயல்களுக்கு அருகில் உள்ள களத்தில் நெற்குவியல் குவித்து வைக்கப்பட்டிருக்கும். அந்த நெற்குவியலில் இருந்து உழவர் நெல்லை முகந்து வலையர் மகளிருக்குக் கொடுப்பர். அம்மகளிர் களிப்பு மிகுதியால் விருந்தினரான கூத்தருக்கு தங்களது மிடாவில் இருந்து கள்ளினை அதிக அளவில் கொடுப்பர் என்கிறது பாடல்வரிகள். இவ்வரிகளில் நேரடியாக உழவர் கள்ளை கூத்தருக்குக் கொடுப்பதற்கு பதிலாக வலையருக்கு நெல்லைக் கொடுத்து அவர்கள் வழி விருந்தினரை உபசரித்துள்ளமையைக் காணமுடிகிறது.

சங்க காலத்தின் தொடக்கக் காலம் தொட்டு பண்டமாற்று முறை இருந்துள்ளது. இப்பண்டமாற்று ஐவகை நிலங்களுக்குள் நிகழ்ந்துள்ளது. இதில் மருத நிலப் பெண்கள் வணிகத்தின் பொருட்டு வேறு இடங்களுக்கு சென்றதற்கான குறிப்புகள் இல்லை. குறிஞ்சி, முல்லை, நெய்தல், பாலை ஆகிய நிலப் பெண்கள் தங்கள் நிலத்தின் விளை பொருளை மற்ற நிலங்களில் கொண்டு விற்று மாற்றாக வேறு பொருட்களைப் பெற்று வந்துள்ளமை அறியமுடிகிறது.

**உப்பு விற்றல்**

உப்பு விற்றல் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே காணப்படுகின்றன. உப்பு விற்போர் உமணர் என சங்க இலக்கியம் சுட்டுகிறது. உமணர்கள் உப்பு விற்கச் செல்லும் போது தங்கள் குடும்பத்துடன் செல்வது குறித்து பின்வரும் பாடல் கூறுகின்றது. இதன் மூலம் நெய்தல் நிலத்து பெண் தனது கணவனுடன் உப்பு விற்கச் சென்றமையை அறியமுடிகிறது.

நோன்பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த
மகாஅர் அன்ன மந்தி[123]

சிறுபாண். 55-56.

குடும்பமாக வந்த உமணர்களுடன் மந்தியும் தனது குடும்பத்துடன் வந்து உமண சிறுவர்களுடன் விளையாடிய செய்தியைக் கூறுகிறது சிறுபாணாற்றுப்படை. இங்ஙனம் குடும்பத்துடன் சென்று உப்பு விற்கச் செல்லும் போது உமண மகள் உப்பு ஏற்றிச் செல்லும் வண்டியை ஓட்டிய நிகழ்வைச் சுட்டுகிறது பெரும்பாணாற்றுப்படை (45 - 53) வரிகள்.

உப்பு வணிகரின் வண்டிகளின் பூண் நடுகல்லை சிதைக்கும் என்றும், ஊர் தோறும் உப்பு விற்க செல்லும் உமணர்கள் பாலை நிலத்தில் தங்கி அடுப்பு மூட்டி உணவு சமைத்து உண்டுவிட்டு சென்றுவிட, அந்த அடுப்பில் மறவர் இறைச்சி சமைத்து உண்ணும் நிகழ்ச்சியை கூறுகிறது. பின்வரும் அகநானூற்றுப் பாடலில் இச்செய்தி விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

தெண்கழி விளைந்த வெண்கல் உப்பின்
கொள்ளை சாற்றிய கொடுநுக ஒழுகை
உரனுடைச் சுவல பகடுபல பரப்பி
உமண் உயிர்த்து இறந்த ஒழிகல் அடுப்பின்[124]

அகம். 159. 1-4.

ஊர் ஊராகச் சென்று உப்பினை விலை கூறி விற்ற உமணர் அயற்சி காரணமாக தம் வண்டிகளில் பூட்டப்பட்ட எருதுகளை கழற்றி மேயவிட்டு தாங்களும் உணவு சமைத்து உண்கின்றனர். உண்டுவிட்டு அடுபினை விட்டுச் செல்கின்றனர். மீன்பிடித்து சிறிய குடிசையில் வாழும் பரதவ மக்கள் உப்பங்கழிகளில் உழாமல் உப்பினை விளைவித்து அவற்றை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு கையில் சாற்றுக் கோலைக் கொண்டு எருதுகளை ஓட்டிச் செல்கின்றனர். இந்நிகழ்வை அகநானூற்றில் காணமுடிகிறது. ஆணும் பெண்ணும் தம் பிள்ளைகளுடன் குடும்பமாக இணைந்து தொழில் செய்துள்ளமை அறியத்தகும்.

உமண மகள் தன் கைகளில் வளைகள் ஒலிக்க கைகளை வீசிச் சென்று நெல்லுக்கு இணையான உப்பு தருவதாக கூவிக் கொண்டு போவாள். அவள் குரலைக் கேட்டு புதிய ஆள் என்பதை உணர்ந்த நாய் குரைக்க, அதைக் கேட்டு அப்பெண் அச்சமுறுகிறாள் என்ற செய்தியும் சங்கப் பாடலில் காணப்படுகிறது.

**கள் உற்பத்தி மற்றும் விற்பனை**

மகளிர் கள் உற்பத்தி செய்து விற்ற செய்தி சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே காணக் கிடைக்கின்றது. கள் விற்போர் பழையர் என்றும் வலையர் என்றும் கூறப்படுகின்றனர். பகன்றைக் கண்ணி சூடிய கள் விற்கும் மகளிர் கூத்தருக்கு உணவு கொடுப்பாள் எனக் கூறுகிறது மலை படு கடாம்.

பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்[125]

மலை. 459.

இல்அடு கள்ளின் சில்குடிச் சீறூர்[126]

புறம். 329. 1.

வீடுகளில் கள் தயாரிக்கப்பட்டதை இவ்வரி புலப்படுத்துகிறது. வீடுகளில் தயாரிக்கப்படும் கள்ளை பெண்கள் உற்பத்தி செய்திருக்கலாம் என

ஆய்வில் கருத இடமுளது. `அடு' என்னும் வேர்ச் சொல்லில் இருந்து அடுக்களை, தற்கால நடைமுறையில் பயன்படுத்தப்படும் அடுமனை போன்ற சமையல் தொடர்பான பெயர் உருவாக்கம் பெற்றிருக்கலாம். பின் வரும் பாடல் `கள்' உற்பத்தி செய்யும் மகளிரை கள் ஆடு மகளிர் எனச் சுட்டுகிறது. இதன் மூலம் பெண்கள் கள் உற்பத்தியில் பங்கு கொண்டமை உறுதியாகிறது, ஆங்காங்கே பெண்கள் கள் விற்ற செய்தியும் பதியப் பட்டுள்ளது.

அரியற் பெண்டிர் அல்கிற் கொண்ட
பகுவாய்ப் பாளைக் குவி முலை சுரந்த
அரிநிறக் கலுழி ஆர மாந்தி[127]

அகம். 157. 1-3.

என வீரர்கள் கள் விற்கும் பெண்களின் இல்லத்தின் கண் சென்று குறுகலான முனையுள்ள பாளையில் இருந்து வடியும் கள் பன்னாடையால் அரிக்கப்பட்டு விற்கப்படுவதை வாங்கி உண்டு களித்த செய்தியைக் காணமுடிகிறது. கள் வடிய பாளையின் நுனியை சீவிவிடுவது கள் எடுப்போரின் வழக்கமாகும். இதையே `பகுவாய்ப் பாளை குவி முலை' என்னும் வரி சுட்டுகிறது. சங்க காலத்தில் பெண்கள் கள் அருந்துதல் மற்றும் விற்றல் ஆகிய செயல்கள் தவறன்று எனக் கருதப்பட்டது அறியமுடிகிறது.

**உணவுப் பண்டம் விற்றல்**

உணவுப் பண்டம் தயாரித்தலுக்குத் தேவையான பொருட்கள் ஒரு இடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு பண்ட மாற்று முறையில் விற்பனை செய்யப்பட்டன. அதே போது உணவை தயாரித்து விற்பனை செய்துள்ளமையையும் சங்கப்பாடல்களில் அறியமுடிகிறது.

பணியாரம், அடை போன்ற உணவுப் பண்டங்கள் விற்கப் பட்டுள்ளமையையும் காணமுடிகிறது. பின் வரும் மதுரைக் காஞ்சி வரிகள் பண்டம் விற்கும் மகளிர் கடையை மூடிவிட்டு உறங்கிய

செய்தியைக் கூறுகிறது. இதன் மூலம் பெண்கள் கடை வைத்து வாணிபம் நடத்தியுள்ளமையை அறியமுடிகிறது.

பணிலம் கலி அவிந்து அடங்க, காழ் சாய்த்து,
நொடை நவில் நெடுங்கடை அடைத்து, மடமதர்,
ஒள் இழை, மகளிர் பள்ளி அயர,
நல்வரி இறாஅல் புரையும் மெல் அடை,
அயிர் உருப்பு உற்ற ஆடு அமை விசயம்

கவவொடு பிடித்த வகை அமை மோதகம் ,
தீஞ்சேற்றுக் கூவியர் தூங்குவனர் உறங்க,
விழவின் ஆடும் *வயிரியர் மடிய*,
பாடு ஆன்று அவிந்த பனிக்கடல் புரைய,
பாயல் வளர்வோர் கண் இனிது மடுப்ப[128]

மதுரை. 621-630.

பாகில் சமைத்த நல்ல வரிகளை உடைய தேனிறாலைப் போன்ற மெல்லிய அடையினையும்; பருப்பும், தேங்காயும் உள் வைத்து சருக்கரையும் சேர்த்து பிடித்த வெம்மையுடைய அப்பங்களையும்; இனிய பாகோடு சேர்த்துக் கரைத்த மாவினையுடைய அப்பங்களையும் செய்யும் வணிகர்கள் உறங்கினர் எனக் கூறப்படுகிறது.

இத்தனை வகையான பண்ணடங்களை தயாரித்தலில் பெண்கள் அதிக அளவில் ஈடுபட்டிருக்கலாம். சங்க காலத்தில் மதுரை நகரில் இரவு நேரங்களில் உணவுப் பொருட்கள் விற்கும் கடைகள் இருந்துள்ளன. அதில் பெண்களின் பணிகள் அதிகமாக இருந்துள்ளன.

உணவுப் பண்டங்களை விற்கும் வாணிகர் தங்கள் கடைகளை மெழுகுவர். கள் விற்போர் தங்கள் கள்ளுக்கு விலை கூறுவர் என்பன பல குறிப்புகள் மதுரைக் காஞ்சியில் பரவலாகக் காணப்படுகிறது.

கான் உறைவாழ்க்கை கதநாய், வேட்டுவன்
மான் தசைசொரிந்த வட்டியும், ஆய்மகள்

தயிர் கொடுவந்த தசும்பும், நிறைய
ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்
குளக் கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப[129]

புறம். 33. 1 – 7.

ஆயர் குல பெண் தயிர் கொண்டு வந்த பாத்திரத்தில் உழவர் குலப் பெண்கள் வெண்ணெல் நிரப்பி அனுப்பிய செய்தி பண்ட மாற்றில் பெண்களின் நிலை குறித்துச் சொல்கிறது. பாலை நிலத்தில் கள் விற்றல் பூ விற்றல் போன்ற வணிகம் நடந்துள்ளது. அகநானூற்று பாடல் (391) மகளிர் பூ விற்றதாகக் கூறுகின்றது. பூ விற்றவர்கள் விலைஞர் என்றும் கமழ்நறும் பூவினர் என்னும் பொது பெயர் கொண்டு குறிக்கப்பட்டனர்.

இவர்கள் ஆண், பெண் இரு பாலராகவும் இருந்திருக்கலாம். மேலும் பாண் மகளிர் தொழில் இல்லாத காலத்தில் மீன்பிடித்து விற்று நெல், பயறு முதலியவற்றைப் பெற்றுள்ளனர். புலைத்தியும் பனையோலை பெட்டி செய்து விற்றுள்ளமையை முல்லைக் கலி காட்டுகிறது.

### நெசவு

தமிழகத்தில் சங்ககாலத்தில் பருத்தி மற்றும் பட்டு துணிகள் பயன்பாட்டில் இருந்துள்ளமையை அறியமுடிகிறது. பருத்தி கொண்டு நூல் நூற்கும் பணியைப் பெண்கள் மேற்கொண்டிருந்தமையைப் புறநானூற்று பாடல் காட்டுகிறது. இரவில் விளக்கு வெளிச்சத்தில் பெண் பருத்தி நூலை நூற்கிறாள். நூல் நூற்கும் பெண்கள் பருத்திப் பெண்டிர் என அழைக்கப்பட்டனர்.

பருத்திப் பெண்டிர் சிறுதீ விளக்கத்து[130]

புறம். 326. 5.

புறநானூற்றில் பல பாடல்களில் ஆடை பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மென்மையாக இருக்கும் ஆடை சிறந்த ஆடையாகக் கருதப்பட்டுள்ளது. பாம்பின் தோல் போன்ற ஆடை, மூங்கிலின் உட்புறத்துக் காணப்படும் மெல்லி தோலைப் போன்ற மென்மையான ஆடை என ஆடைகளுக்கு உவமை கூறப்பட்டுள்ளது. அத்தகைய ஆடைகள் கரை வைத்து நெய்யப்பட்டிருந்தன.

நோக்கு நுழைகல்லா நுண்மைய, பூக்கனிந்து
அரவுஉரி அன்ன, அறுவை நல்கி[131]

பொருநர். 82 -83

நெய்யப்பட்டத் துணியில் இழை போன வழி இது என அறிய முடியாத அளவிற்கு நுட்பமாக நெய்யப்பட்டிருந்த பட்டாடைக் குறித்து பொருநராற்றுப்படை கூறுகிறது. அப்பட்டாடையில் பூ வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்தன என்றும், அது பார்ப்பதற்கு பாம்பின் தோலை போல் மென்மையாக இருந்ததென்றும் கூறப்பட்டுள்ளது.

இப்பாடலில் துணி நெய்தவர் பற்றிய குறிப்பு இல்லை. எனினும் இது போன்ற சித்திர வேலை செய்யும் பணிகளைப் பெண்கள் செய்திருக்கலாம் என ஊகிக்கலாம். பட்டாடையின் கரைப்பகுதியில் கொட்டைகள் முடியப் பெற்று அழகுபடுத்தப்பட்ட செய்தியையும் பொருநராற்றுப்படை கூறுகிறது.

இது போன்ற கவின் கலை சார்ந்த தொழில்களைப் பெண்கள் செய்திருக்கலாம் என உய்த்துணர இடமுளது. சிறிய பூவேலைப்பாடுடைய ஆடையை உடுத்திய பெண்ணை சில்பூங்கலிங்கத்தள் எனக் குறிக்கிறது குறிஞ்சிக்கலி. இங்ஙனம் அக்கால பெண்கள் அழகு படுத்தப்பட்ட ஆடைகளை நெய்யவும் உடுக்கவும் செய்துள்ளனர் என்பதை சங்கப் பாக்கள் வழி ஆய்வு எடுத்துரைக்க முனைகிறது.

### புழங்கு பொருட்கள் தயாரித்தல்

அக்காலத்தில் பல வகையான புழங்கு பொருட்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. அவற்றில் பல பெண்களால் உருவாக்கப்பட்டவை. வீட்டு உபயோகத்திற்கு பயன்படுத்தப்பட்டுள்ள பொருட்களைக் கொண்டு அக்கால பெண்கள் வீட்டில் செய்யும் வேலைகளை அறியமுடிகிறது.

தொடக்க கால வேளாண்மையைப் பெண் உருவாக்கியதைப் போல் தொடக்க தொழில்நுட்பக் கருவிகளையும் பெண்கள் உருவாக்கியிருக்க வாய்ப்பு அதிகம் உள்ளது. பேறு காலத்தில் தனிமையில் இருந்த பெண்கள் பனை ஓலையில் கூடை முடைதல், முறம் பின்னுதல் போன்ற பணிகளைச் செய்துள்ளனர். பெண்கள் இத்தகைய தொழில்களின் முன்னோடிகளாக இருந்துள்ளனர்.

> பெண்கள்தாம் முதல் குயவர்கள், முதலில் கூடை முடைந்தவர்கள், மண்வெட்டியால் மண்ணைக் கிளறி வேளாண்மை செய்தவர்கள் அல்லது குச்சிக் கொண்டு கிளறி முதன்முதலாகப் பயிரிட்டவர்கள். தானியங்கள் மதிப்பு மிக்க உணவாதாரமாக ஆன பின்னர் பானைகள், கூடைகள் ஆகியன சேகரித்தவற்றைச் சேமிப்பதற்கும், மேலும் அரைவைக்குரிய திரிகை போன்ற கருவிகளும் தேவைப்பட்டன. தானியம் சேகரிக்கப்பட்டதோடு உற்பத்தியும் செய்யப்பட்டது.[132]

கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 187.

ஆண்கள் உணவு சேகரிக்கும் போதும் அல்லது கல்வி மற்றும் பொருளீட்டல் அல்லது அரசருடன் போருக்கு சென்ற பொழுதும் வீட்டை நிர்வகிப்பவளும் பாதுகாப்பவளும் பெண். வீட்டில் உள்ள பொருட்களை பாதுகாப்பாக வைப்பதற்கான பொருட்களின் தேவையைப் பெண்கள் உணர்ந்திருந்தனர். இதன் விளைவாக பல எளிய கருவிகளை அவர்களால் தயாரிக்க முடிந்தது.

அரிகால் மாறிய அம் கண் அகல் வயல்
மறுகால் உழுத ஈரச் செறுவின்
வித்தோடு சென்ற வட்டி பற்பல[133]

நற். 210. 1-3

இப்பாடலில் வட்டி என்ற கடகப் பெட்டி பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இவ்வட்டிலில் நெல் பாதுகாக்கப்பட்ட செய்தியை அறியமுடிகிறது. இது அதிக அளவில் மருத நிலத்தில் பயன்பட்டிருக்கலாம் என்பதையும் ஊகிக்க இடமுளது. *பறி* என்னும் ஓலைப் பாயைக் குறித்தும் *தலைக் குடை* என்னும் ஒரு வகைக் குடையைக் குறித்தும் பின்வரும் பாடல் அடிகள் விளக்குகின்றன. இவற்றையும் பெண்கள் தயாரித்திருக்க அதிகம் வாய்புள்ளது.

பறிப் புற இடையன் [134] (ஓலைப் பாயாற் செய்யப்பட்ட குடை அகம். 94. 4.)

கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்[135] (அகம், 194. 7.)

நெய்தல் நிலத்தில் மீன்பிடிக்கத் தேவையான வலைகள் பயன்படுத்தப்பட்டுமைக் குறித்த செய்திகள் காணப்படுகின்றன. பின்வரும் பாடல் வரி பரதவர் வலையை பயன்படுத்திய செய்தியைக் கூறுகிறது.

புது வலைப் பரதவர்[136] (அகம். 10.10.)

சங்க காலத்தில் நாவாய் திமில் போன்ற படகு வகைகளும் வணிகக் கப்பல்களும் பயன்படுத்தப்பட்ட குறிப்புகள் கிடைக்கின்றன. தச்சர், கொல்லர் போன்றோர் மரம் மற்றும் இரும்பு பொருட்களை செய்துள்ளனர். இத்தகைய பெரிய தொழில்களைச் செய்த பொழுது அவர்களுக்கு உறுதுணையான பணிகளில் பெண்கள் ஈடுபட்டிருப்பர் எனக் கருதலாம்.

பின் வரும் மதுரைக் காஞ்சி வரிகள் அணிகலன்களை தயாரிப்போர் குறித்து விளக்குகிறது.

கோடு போழ் கடைநரும், திருமணி குயினரும்,
சூடுறு நன்பொன் சுடர் இழை புனைநரும்,
பொன்னுரை காண்மரும், வம்புநிறை முடிநரும்[137]

மதுரை. 511 - 513.

என மதுரைக்காஞ்சி சங்கு வளை செய்வோரைக் குறித்தும், மணிகளைத் துளையிடுவோர் குறித்தும், பொன்னைச் சுட்டு அணிகலன் செய்வோர் குறித்தும் கூறுகின்றது.

கைத் தொழில்களை இரு பாலரும் செய்திருக்க வேண்டும். ஒவ்வொரு தொழிலும் ஒன்றிற்கு மேற்பட்ட வேலைகள் இருக்கும் போது எல்லாவற்றையும் ஆண்களோ அல்லது பெண்களோ செய்திருக்க முடியாது. ஆண் பெண் இரு பாலரும் இணைந்தே கைத் தொழில்களை மேற் கொண்டிருக்கலாம். சங்க மக்கள் பயன்படுத்திய பொருட்களைக் குறித்து ச.வே. சுப்பிரமணியன் பின்வருமாறு விளக்குகிறார்.

> உரல், உலக்கை, சுழல்மரமாகிய திரிகை, புடைக்கும் கருவியாகிய சுளகு அதாவது முறம் இவையெல்லாம் தொடக்கக் காலத்தில் அறிவியல் அடிப்படையில் தோன்றியவை. தினசரி வாழ்க்கைக்குப் பயன்படுத்தப்பெற்றவை. அதோடு, நெல் குத்தும் போதும் அவல் இடிக்கும் போதும் சோர்வினைப் போக்குவதற்குப் பாடல்களைப் பாடிக் கொண்டு இடிப்பர். அது பின்பு *வள்ளைப் பாட்டு* என்று வளர்ந்த நிலையில் அமைந்தது.[138]

ச. வே. சுப்பிரமணியன், சங்க கால மகளிர், ப. 156.

இங்ஙனம் மக்கள் வாழ்க்கை அறிவியல் மற்றும் கலையோடு இயைந்து வளர்ந்துள்ளமையை விளக்குகிறார். சங்க காலத்தில் கரும்பு ஆலை குறித்தும் கரும்பு வெல்லமாக மாற்றப்பட்டது குறித்தும் சில இடங்களில் கூறப்பட்டுள்ளன.

அவற்றை பெண்கள் செய்ததற்கான இலக்கிய குறிப்புகள் கிடைக்க வில்லை எனினும் இது போன்ற பெரிய தொழில்களில் பெண்களின் பங்கும் குறிப்பிடத் தகுந்த அளவு இருந்திக்கும் என கருதலாம்.

மழைக் கண்டன்ன ஆலை தொறும், ஞெரேரெனக்
கழை கண் உடைக்கும் கரும்பின் ஏத்தமும்[139] (மலை. 340-341.)

கார்க்கரும்பின் கமழ் ஆலைத்
தீத் தெறுவின், கவின் வாடி[140] (பட்டினப் 9-10.)

என கரும்பாலை குறித்து மலை படு கடாமும் பட்டினப் பாலையும் விளக்குகின்றன.

பெண்கள் அரசருக்கு நெருக்கமான பணிகளைச் செய்துள்ளனர். அவர்கள் அரசருக்கு மெய்க்காப்பாளராக இருந்த செய்தியை அறியமுடிகிறது.

**பொதுப் பெயர்களில் மறைந்துள்ள பெண்கள்**

*கானவர்* என குறிஞ்சி நில மக்களும், உழவுத் தொழில் செய்வோரை *வினைஞர்* என்றும், *களைஞர்* என களை எடுப்போரும் சங்க இலக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்களுள் பெண்களும் அடக்கம். இவர்கள் செய்ததாகக் கூறப்பட்ட தொழில்களில் பெண்களும் இடம் பெற்றிருந்தனர். பல பொருட்களைக் விற்பனைக்கு கொண்டு வந்தவரை பரதர் என மதுரைக்காஞ்சி (317) சுட்டுகிறது. இப்பெயருள்ளும் பெண்களின் பங்களிப்பு இருந்திருக்கலாம் மேலும் *திமிலர்* என்னும் பொதுப் பெயருள் மீனை அறுக்கும் ஆண் பெண் இருவரையும் சுட்டியிருக்கலாம்.

பூவினர், (பூ விற்போர்) கோதையர் (மாலை விற்போர்) சுண்ணத்தார் (சுண்ணம் விற்போர்) இலையினர் (வெற்றிலை விற்போர்) நூற்றினர் (சுண்ணாம்பு விற்போர்) விலைஞர் (விற்பனையானர்கள்) என அறியப்படும் பல பொதுப் பெயர்களில் பெண்கள் வணிகம் செய்திருந்தனர் என்பதில் ஐயமில்லை.

சங்க காலத்தில் சிறப்பாக வளர்ந்திருந்த தொழில்களில் ஒன்று மட்பாண்டத் தொழில். மனித நாகரிகத்தின் வளர்ச்சிப் போக்கில் ஒரு இன்றியமையாத திருப்பத்தை ஏற்படுத்தியது பானை வனைதலின் தோற்றம். மட்பாண்டம் செய்தோர் சங்க காலத்தில் வேட்கோவர்கள் என அழைக்கப்பட்டனர். அவர்களுக்கென தனியாக இருப்பிடம் இருந்துள்ளதையும் அறியமுடிகிறது. அவ்விருப்பிடத்தில் சூளையிலிருந்து எழும் புகை வானை சூழ்ந்து நிற்பதாக புறப்பாடல் (228) வழி அறியலாம்

வனைகலந் திகிரியிற் குமிழி சுழலும்
துணைசெலற் றலைவாய ஓவிறந்து வரிக்கும்[141]

மலை. 474 - 475

இந்த வேட்கோவர்கள் வேகமாக வேலை செய்யும் திறன் பெற்றோர் என்பதைப் இப்பாடல் விளக்குகிறது. நீரின் சூழற்சிக்கு ஒப்பாக வேலை செய்வோர் என்பதை அறிய முடிகிறது. வேட்கோவர்கள் என்ற பொதுப் பெயருள் பெண்களும் அடக்கம். ஆகையால் இவ்விரைவான வேலைகளில் பெண்களும் பங்கெடுத்துள்ளமையை அறியமுடிகிறது. குழிசி என்ற சொல் மட்கலங்ளைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. தாழி என்ற மட்பாண்டங்களும் அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. தாழியினுள் மலர்களை இட்டு வைத்துள்ளமையை அறியமுடிகிறது.

தாழிக் குவளை வாடுமலர் சூட்டி[142]

(அகம். 165. 11)

தாழியும் மலர் பல அணியா[143]

(அகம். 369. 6)

ஆகிய வரிகள் மூலம் தாழி பூக்களை வைக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது. மேலும் இறந்தோரை உள் வைத்துப் புதைப்பதற்கும் பெரிய அளவிலான தாழிகள் பயன்படுத்தப்பட்டுள்ளதை சங்கப் பாடல்கள் விளக்குகின்றன. இப்

பொருட்களை ஆண்கள் மட்டும் செய்திருக்க வாய்பில்லை. பெண்களின் உதவியுடன் இத் தொழில் செய்யப்பட்டிருக்கும் என்பதை ஒரு வகையில் ஊகிக்க முடிகிறது. இருப்பினும் பொதுப் பெயர்களில் அன்றி பெண்கள் பங்குபெற்ற குறிப்புகள் ஏதும் இல்லை.

மருத்துவர் என்ற பொதுப் பெயரில் நோய்களைக் குணப்படுத்துவோர் இருந்துள்ளமையை அறியமுடிகிறது. மருத்துவம் என்பது பல வேலைகளை உள்ளடக்கியது. மருந்து குறித்த ஆய்வுகளைச் செய்தல், மருந்து தயாரித்தல், அவற்றைச் சோதித்தல், பயன்படுத்துதல் போன்ற பல படிநிலைப் பணிகள் இதில் இருப்பதை ஊகிக்க முடிகிறது. இவ்வளவு பணிகளையும் ஆண்கள் மட்டும் செய்திருப்பர் எனக் கருத இடமில்லை. இத்தொழில், காயங்களை ஊசி கொண்டு தைக்கும் அளவுக்கு வளர்ந்துள்ள நிலையில் பெண்களின் பங்களிப்பு குறிப்பிடத்தக்க அளவில் இருந்திருக்கிறது என்பதை உணர முடிகிறது. மருத்துவர்களை அறவோன் என்றும் சங்க இலக்கியம் சுட்டுகிறது.

சிரல் பெயர்ந்தன்ன நெடு வெள் ஊசி
நெடு வசி பரந்த வடு வாழ் மார்பின்[144]

(பதிற். 42. 3 - 4)

இரும்பு சுவைக் கொண்ட விழுப்புண் நோய் தீர்ந்து,
மருந்து கொள் மரத்தின் வாள் வடு மயங்கி[145]

(புறம். 180. 4 - 5)

மருந்துகளுக்காக மரங்கள் வளர்க்கப்பட்டதையும் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது. வீரர்களின் மார்பில் காணப்பட்ட விழுப்புண் தழும்புகள் மருந்துக்காக மரங்களில் வெட்ட பட்ட தழும்புகளுக்கு ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளன.

*காரோடர்* எனப்பட்ட ஒரு வகை தொழிலாளர்கள் சங்க காலத்தில் இருந்துள்ளனர். இவர்கள் தொழில் இரும்புக் கருவிகளை

கூர்மையாக்கும் *சாணை பிடிக்கும்* தொழிலாகும். இவர்களுக்கும் உதவியாக பெண்கள் இருந்திருக்கலாம் என ஊகிக்கலாம். மேலும் முல்லை முத்தையா அக்காலத்தில் இருந்த தொலாளார்களைப் பின்வருமாறு வகைப்படுத்துகிறார்.

> சங்க காலப் பெண்கள் அணிந்து வந்த அணிகள் பலவாகும். அவற்றைச் செய்து வந்த உருக்குத் தட்டாரும், பணித் தட்டாரும் பலராக இருந்தனர். அப் பொற் கொல்லர் மாணிக்கம், நீலம், வைரம் முதலிய ஒன்பான் மணிகளைப் பற்றிய இலக்கணங்களை நன்கு அறிந்திருந்தனர். அவை பற்றிய நூல்களும் அக்காலத்தில் இருந்தன. கன்னார். செம்பு கொட்டிகள், தச்சர், மரத் தொழிலாளர், கப்பல் கட்டுவோர், துணி துவைப்பவர், தோலைக் கொண்டு பல தொழில் செய்பவர், நெட்டித் தொழிலாளர், முத்துக் கோப்பவர், சங்கு முதலியவற்றால் வளையல் செய்பவர், பல வகைப்பட்ட இசைக் கருவிகள் செய்பவர், ஓவியம் தீட்டுவோர், சிற்பியர் முதலிய பல திறப்பட்ட தொழிலாளரும் சங்க காலத்தில் வாழ்ந்தனர்.[146]

(முல்லை முத்தையா, தமிழர் வாழ்வியல், ப. 62.)

பழையர் மகளிர், விறலியர், கானவர், கலைஞர், திமிலர், கோதையர், சுண்ணத்தார், விளைஞர், வினைஞர், காரோடர், குயவர், வேட்கோவர், உருக்குத் தட்டார், கப்பல் கட்டுவோர், ஓவியம் தீட்டுவோர், சிற்பி, உமணர், புலைத்தி, கட்டில் பின்னும் இழிசினர், பெரும்பறை அறையும் இழிசினிர், கம்மியர் போன்றோர் சங்க காலத்தில் வினையாற்றிய தொழில் கலைஞர்களாவர்.

**முடிவுரை**

அந்தந்த நிலத்துக்கு உரிய பெண்கள் எல்லா நிலத்துக்கும் உரிய தொழில்களைச் செய்துள்ளனர். வேளாண்மையில் பெண்கள் தினைப் புனம் காத்தலை அதிக அளவில் காணமுடிகிறது. *விதைத்தல், நடவு நடுதல், களை பறித்தல்* போன்ற பணிகளை பெண்கள் செய்துள்ளனர்.

பெண் *அறுவடை செய்தாள்* என்பதாக சங்க இலக்கியத்தில் குறிப்புகள் காணப்படவில்லை. ஆனால் உழவர் போன்ற பொதுப் பெயர்களில் அறுவடை நடைபெற்ற குறிப்புகளைக் காணமுடிகிறது. இதன் மூலம் அறுவடை ஆண்கள் மற்றும் பெண்கள் இணைந்து மேற் கொண்ட பணி எனக் கொள்ள இடம் உள்ளது.

ஆயர் மகளிர் கால்நடைகளைப் பராமரித்தல் மற்றும் மோர் கடைதல், நெய் தயாரித்தல், மோர் நெய் விற்ற நிகழ்வுகளைக் காணமுடிகிறது. பெண்கள் பெரும்பாலும் உணவு சமைத்து விருந்தினரை உபசரித்த நிலையைப் பரவலாக எல்லா நிலங்களிலும் காணமுடிகிறது. நெய்தல் நிலத்தில் உப்பு உற்பத்தியிலும் விற்பனையிலும் பெண்கள் ஈடுபட்டிருந்தனர்.

பெண்கள் கடை வைத்து வாணிபம் செய்துள்ளமையை மதுரைக்காஞ்சி அறிவிக்கிறது. பெண்கள் நேரடியாக போர் தொழிலில் ஈடுபட்டதற்கான குறிப்புகள் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. பாசறையில் இருந்ததற்கான குறிப்புகள் உள்ளன. அரண்மனையில் அரச குடும்பத்தினருக்கு பெண்கள் ஏவல் பணி புரிந்ததையும் அவர்தம் மனக் குறையை அறிந்து செயல்படுவதையும் நெடுநல்வாடை சித்திரிக்கிறது.

மரப் பொருட்கள் தயாரித்தல், உலோகத் தொழில்கள் தயாரித்தல் போன்ற வெளிப்படையாக குறிக்கப்படும் தொழில்களுக்கு இடையே நடைபெற்ற துணைமைத் தொழில்கள் பல உள்ளமையையும், அவற்றை ஆண் பெண் இருபாலரும் மேற் கொண்டிருக்கலாம் எனவும், அந்த வகையில் பெண்கள் செய்த தொழில்கள் பல இருந்திருக்கும் என்பதை ஊகிக்க முடிகிறது.

தினைப்புனம் காப்போருக்கு உணவு கொண்டு செல்லுதல், பால் கறப்பதற்கு ஆவினங்கள் இருக்கும் இடத்தில் இருப்பவர்க்குக் கலயங்கள் கொண்டு தருதல், தினை அரிந்த வயல்களில் மேயும் கன்றுகளை மேய்த்து கட்டுதல் போன்ற பணிகளையும் பெண்கள் நேரடியாச் செய்துள்ளனர். சங்க இலக்கியங்களில் காணப்படும் வணிகப் பொதுப் பெயர்களில் பெண்களின் தொழில் குறித்து குறைந்த அளிவிலேயே இருக்கும் பதிவுகளை சங்க இலக்கியம் பதிவு செய்கிறது என்பதை இவ்வியலில் ஆய்ந்தளிக்கப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. புறம். 322.
2. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 68.
3. குறுந். 198.
4. குறுந். 214.
5. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 61.
6. நெடுநல். 3-5.
7. நற். 266. 1-3.
8. பெரும். 197-206.

9. மாதையன். பெ, சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப. 27.
10. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 101.
11. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப.257.
12. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், ப. 262

13. மாதையன். பெ. சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப. 33.
14. க. அ. ஜோதிராணி, தமிழ் இலக்கியங்கள் சமுதாய அடையாளங்கள், ப.10.
15. பெரும். 222 -255.

16. மாதையன். பெ. சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப. 40.
17. பெரும்பாண். 199-200
18. மதுரைக்காஞ்சி 141
19. பதிற்றுப்பத்து 58: 17
20. பொருநர். 117
21. அகம்41: 6
22. அகம். 194: 4-5
23. புறம். 381: 23-24

24. புறம். 343.5.
25. நற். 67. 6-9.
26. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 116.
27. குறுந். 40.
28. புறம். 39.
29. மது. 492.
30. புறம். 283.
31. மது. 508.
32. அகம். 935.

33. பதிற். 72.
34. பரி. 2.13
35. கைலாசபதி. க. தமிழ் விரநிலைக் கவிதை, ப. 9.
36. எங்கல்ஸ், மனிதக் குரங்கு மனிதனாக மாறிய இடைநிலைப்படியில் உழைப்பின் பாத்திரம், ப.
37. பெரும்பாண், 91-94.

38. கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 187.
39. கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 186.
40. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம். ப. 97.
41. குறுந்தொகை. 198. 1-2.
42. குறுந்ததொகை. 214. 1-2.

43. குறள். 1037
44. பெரும்பாண். 196
45. அகம். 26. 23-25
46. பதிற்று. 76:11
47. குறுந்.155: 1-2
48. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 92.

49. புறம். 137: 5-6
50. நற். 60: 7-8
51. பெரும். 210-212.
52. அகம். 346: 5-10
53. பதிற்று. 13:1
54. நற். 343. 3
55. அகம். 165. 4
56. பதிற். 13. 17
57. மலை. 531
58. பெரும். 154
59. நற். 89. 5-6
60. குறுந். 68. 1
61. குறுந் 384. 1
62. ஐங். 211. 1
63. அகம். 86. 1
64. அகம். 188. 9. 14.
65. ஐங். 282. 1-3.

66. மலை. 328-329.
67. குறிஞ்சிப். 38-39.

68. குறிஞ்சிப். 41-44
69. குறிஞ்சி, 99-101
70. பெரும். 213
71. அகம். 184. 13.
72. நற். 60: 9
73. அகம். 194. 9.
74. அகம். 84. 12-13.
75. மலை. 112-113.
76. மலை. 471.
77. பொருநர். 193-194.
78. அகம். 116. 2.
79. பொருநர். 242-245.

80. பெரும். 229-241
81. பெரும். 237-238
82. அகம். 366. 2-3
83. அகம். 37.5
84. அகம். 37. 3-4
85. அகம்.366: 4-5
86. அகம். 84. 11-13
87. மு. கலி 111.
88. புறம். 9

89. மலை. 121.
90. மலை. 342.
91. கலி. 40
92. புறம். 399.
93. வே. கணேசன், சங்கத்தமிழில் காதல் காட்சிகள், ப. 111.

94. அகம். 393. 1 - 17.
95. S. Singaravelu. Social Life Of The Tamils, pg. 27 – 28
96. பெரும். 96-100.
97. பெரும். 339-345.
98. பட்டினப். 43-44.
99. மா. பரிமணம் (பதி. ஆ) பத்துப்பாட்டு, இரண்டாம் பகுதி மூலமும் உரையும், ப 133.

100. பெரும். 155-158.
101. க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப. 362.

102. அகம். 34.11.
103. நற். 90. 3-4.
104. அகம். 387. 4-7.

105. அகம். 89.
106. புறம். 311. 1-2
107. நெடுநல். 36 - 40.

108. பொருநர். 85-87.
109. நெடுநல். 129-135.
110. முல்லை. 45-49.
111. நெடுநல். 147- 156.

112. ந. சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப. 306
113. மதுரை. 421- 423.
114. அ. மா. பரிமணம் (பதி. ஆ.) பத்துப்பாட்டு, இரண்டாம் பகுதி மூலமும் உரையும், ப. 129.
115. பொருநர். 214-217.
116. பெரும். 159-165.

117. கேபி. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர், ப. 141.
118. மு.கலி 109. 6 - 7.
119. மு. கலி. 108. 5.
120. மு. கலி. 108. 26.

121. கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 181.
122. மலை. 460 - 464.
123. சிறுபாண். 55-56.
124. அகம். 159. 1-4.
125. மலை. 459.
126. புறம். 329. 1.
127. அகம். 157. 1-3.
128. மதுரை. 621-630.
129. புறம். 33. 1 - 7.
130. புறம். 326. 5.
131. பொருநர். 82 -83
132. கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 187.
133. நற். 210. 1-3

134. அகம். 94. 4.
135. அகம், 194. 7.
136. அகம். 10.10.
137. மதுரை. 511 - 513.

138. ச. வே. சுப்பிரமணியன், சங்க கால மகளிர், ப. 156.
139. மலை. 340-341.
140. பட்டினப் 9-10.
141. மலை. 474 - 475

142. அகம். 165. 11
143. அகம். 369. 6
144. பதிற். 42. 3 - 4
145. புறம். 180. 4 - 5
146. முல்லை முத்தையா, தமிழர் வாழ்வியல், ப. 62.

# இயல் 3

## சமூக பொருளாதார உற்பத்தியில் பெண்களின் பங்கு

பொருளாதாரம் என்பது ஒரு சமூகத்தின் வளர்ச்சியை அடையாளம் காட்டும் பொருள் செல்வம். 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்பது ஈண்டு எண்ணிப் பார்க்கத் தக்கது. இச்செல்வங்கள் மனித உழைப்பின் அடிப்படையால் விளைந்த பொருட் செல்வம். மனிதன் உழைப்பைச் செலுத்தி தனக்குத் தேவையான பொருட்களை செய்து கொள்ளும் முழு நடவடிக்கையை உற்பத்தி என்னும் சொல் குறித்து நிற்கிறது.

இவ்வுற்பத்தி ஒவ்வொரு சமூகத்திலும் ஒவ்வொரு காலத்திற்கேற்ப பல்வேறு விதமாக நடைபெற்று வந்திருக்கிறது. இன்னும் தெளிவுற வரையறுத்தால் எல்லா நிலங்களிலும் நடைபெற்ற உற்பத்தியின் அடிப்படையை வைத்து அவற்றை ஒவ்வொரு காலமாக வகைப்படுத்துகிறோம். கற்கருவி, செம்புக்கருவி, இரும்புக்கருவி என வகை படுத்தி நிற்கிறது இவ்வாய்வேடு. சங்க இலக்கியம், அறஇலக்கியம், பக்தி இலக்கியம், நவீன இலக்கியம் என இலக்கிய வகைமைகளுக்கு அடிப்படையாய் அமைவதும் ஒவ்வொரு வகை பொருளுற்பத்தி ஆகும்.

இவ்வடிப்படைகளில் சங்க இலக்கியத்தில் காணப்படும் சமூக வகைகளையும் அவற்றின் பொருளாதார உற்பத்தி முறைகளையும் அவ்வுற்பத்தியில் பெண்களின் பங்கையும் இவ்வியல் ஆய்கிறது. முந்தைய இயலில் சங்க இலக்கியத்தில் நேரடியாக பெண்கள் மேற்கொண்ட தொழில்கள் வகைதொகை செய்யப்பட்டதால் இவ்வியலில் சங்க பொருளாதார உற்பத்திக்கு பின்னணியில் நின்று இயக்கிய பெண்களின் சமூகக் கடன்களை ஆய்ந்தறிதல் தகும்.

உற்பத்தி முறைகளின் வேறுபாடு சமூக அமைப்பை உருவாக்குகிறது. சமூக அமைப்பு உற்பத்தி முறையை வளர்த்தெடுக்கிறது. இதுவரை உள்ள மனித சமூக வரலாற்றை ஆதிப்

பொதுவுடமைச் சமூகம், ஆண்டான் அடிமைச் சமூகம், பண்ணையடிமைச் சமூகம், முதலாளித்துவச் சமூகம், சோசலிச சமூகம் என சமூக அமைப்பின் அடிப்படையில் பிரிக்கலாம்.

தொடக்க கால வேட்டை பொருளாதாரத்தை ஆதிப் பொதுவுடமைச் சமூகம் என்கின்றனர் சமூகவியல் அறிஞர்கள். இக்காலகட்டத்தின் உற்பத்தி பெரும்பாலும் வேட்டையாகவோ அல்லது சிறிய அளவிலான விவசாயமாகவோ இருந்துள்ளது. இக்காலகட்டத்தில் தமிழகத்தின் சமூக நிலையைப் பின்வருமாறு விளக்குகிறார் மாதையன்.

> பண்டைய கூட்டுச் சமுதாயங்களில் உள்ள மகளிர்கள் பல்வேறு குழுக்களில் இருந்து தாங்கள் விரும்பியவனைத் தம் தலைவனாக வரித்துக் கொண்டனர். இதற்கு அன்புடைய நெஞ்சங் கலந்த காதல் உணர்வு அடிப்படையாக இருந்தது. பல குழுக்கள் ஒன்றிணைந்து மிக வலுவான முறையில் செயல்படும் கூட்டுச் சமுதாய முறைக்கு இது மிகவும் சிறப்பாகப் பயன்படுகிறது.[1]

பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமூகம், ப. 73

இத்தகைய ஆதிப் பொதுவுடைமைச் சமூகத்தினை அடுத்து ஆண்டான் அடிமை சமூகம் உருவானது. அடிமைகளைக் கொண்டு உற்பத்தி செய்து நிலக்கிழார்கள் சமூக அனுகூலங்களை அனுபவித்தனர். அடிமைகளின் உழைப்பின் மூலம் அடிமைகளுக்கு ஏதும் கிடைக்காததால் அவர்களுக்கு உழைப்பில் ஆர்வம் குன்றுகிறது. ஆர்வமற்ற அடிமைகளை வேலை செய்ய வைப்பது எளிதாக இருக்கவில்லை. இவ்விரு வர்க்கங்களுக்குமான முரண்பாடு முற்றி பண்ணையடிமை அல்லது நிலப்பிரபுத்துவ சமூக அமைப்பு உருவானது.

சங்க இலக்கியத்தின் பிற்பகுதி *ஆண்டான் அடிமை* காலமானது நிலப்பிரபுத்துவ காலமாக மாற்றமடைந்த காலமாகும். ஆங்காங்கே ஆதிப் பொதுவுடைமைச் சமூக பாடல்களையும் காணமுடிகிறது. நிலப்பிரபுத்துவ சமூகத்தில் பண்ணையடிமை உழைப்பவனாகவும் பண்ணையார் சமூக அனுகூலங்களை அனுபவிப்பவனாகவும் இருக்கிறான்.

இவ்வுற்பத்தி முறையில் இரும்பின் பயன்பாடு அதிகரித்தது. மேம்பட்ட விவசாய கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. நெசவு, கைவினைப் பொருட்கள், இரும்பு, மரம் போன்றவற்றைக் கொண்டு பல கருவிகள் தயாரிக்கப்பட்டன. தங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்ட நிலத்தில் பண்ணையாள் வேலைசெய்து ஒரு குறிப்பிட்ட பங்கை பண்ணையாருக்கு வரியாக செலுத்த வேண்டும். மேலும் பண்ணையாரின் நிலத்திலும் இலவசமாக வேலை செய்து கொடுக்க வேண்டும். இக்கால கட்டத்தில் வணிகத்தின் தோற்றம் உருவாகி வளர முயன்று கொண்டிருந்தது.

வர்க்கமற்ற சமூக நிலையில் இருந்து படிப்படியாக வர்க்க சமூகமாக மாறிய நிலையை சங்க இலக்கியங்கள் விளக்குகின்றன என்பதைப் பின்வரும் கூற்று புலப்படுத்துகிறது.

> பண்டைய தமிழ்ச்சமூகத்தின் வரலாறு இந்த கட்டத்தின் வளர்ச்சியை சங்க இலக்கியங்கள் வழியே சிறப்பாக வெளிப்படுத்துகிறது. சங்க இலக்கியங்கள் தமிழ்ச்சமூகம் வர்க்க சமூகமாக மாறுகிற மாறுதல் காலத்தின் பிரச்சினைகளையே முன் வைக்கிறது. இனக்குழு குலமரபு அழிவும் அதனிடத்தில் தனியுடைமையின் தோற்றமும் அவற்றில் விளக்கப்படுகிறது. அதே சமயத்தில் ஒருதாரமணம், தனித்த குடும்பம் என்பதை நோக்கிய நீண்ட போராட்டம் சங்க காலத்தில் துவக்கி வைக்கப்படுகிறது.[2]

பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமூகம், ப. 73.

படிப்படியாக மருத நில சமூகம் வளர்ச்சி அடைந்து குறிஞ்சி முல்லை மற்றும் நெய்தல் நில மக்களை வென்றடக்க முயன்றுள்ளதை அறியமுடிகிறது. முதுகுடி மன்னர் மற்றும் வேந்தர்களுக்கிடையான போர்கள் குறித்த, பரவலான மகட்பாற் காஞ்சி பாடல்கள் இந்நிலையைப் புலப்படுத்துகின்றன.

**அகமும் புறமும்**

சங்கஇலக்கியத்தை அகம் புறம் என்னும் இருபெரும் பிரிவுகளாக வகைப்படுத்துகிறோம். இலக்கியத்தைப் போல சமூகத்தையும் இவ்வகைப்பாட்டின் மூலம் எளிமையாக புரிந்து கொள்ளலாம். புறம் என்பது பொருளாதார நடவடிக்கையையும் அகம் என்பது அந்த பொருளாதார நடவடிக்கைக்கு முன்தயாரிப்பு செய்து கொள்ளும் களத்தையும் குறிக்கும். சங்க இலக்கியத்தில் அதாவது புறம் என்பது வேட்டை, உழவு, மீன்பிடி, போர் போன்ற பொருளுற்பத்தி நடவடிக்கையையும் அகம் என்பது இப்புற நடவடிக்கைகளைச் செய்த வேட்டுவன் உழவன் பரதவன் மறவன் ஆகியோர் அவற்றைச் சுற்றமொடு துய்த்து இன்புறுவதும், மீண்டும் அப்பொருள் உற்பத்திக்குச் செல்லும் முகமாக செய்து கொள்ளும் பண்பாட்டு நடவடிக்கைகளையும் குறிக்கும்.

மனிதன் தொடக்க காலத்தில் விலங்குகளைப் போல புனருற்பத்தி செய்து வந்தான். பாலுறவில் அவனுக்கு விலங்குளுக்கு இருந்த நாட்டம் மட்டும் இருந்தது. மனிதனின் புற நடவடிக்கை என்பது எல்லா விலங்குகளைப் போலவும் இயற்கைக்குக் கட்டுப்பட்டு உணவு சேகரிக்கும் நிலையில் இருந்தது. அந்நிலையில் அவனது அக வாழ்வு பாலுறவு என்பதாக இருந்தது.

உற்பத்தியில் மனிதன் முன்னேற்றம் அடைய, அவனது சமூக வாழ்வும் வளர்ச்சி அடைகிறது. சமூகமாக வாழ தொடங்கிய பின் காதல் என்னும் அக உணர்வு உருவானது. சமூக வளர்ச்சிக்கு ஏற்ப உணர்வு நிலையிலும் முதிர்ச்சி ஏற்பட்டது. இங்ஙனம் மனிதனின் வாழ்கை நிலை அவனது உணர்வு நிலையை பாதித்ததை மார்க்ஸ் பின்வருமாறு விவரிக்கிறார்.

> மனிதர்களின் உணர்வு அவர்களுடைய வாழ்க்கை நிலையை நிர்ணயிப்பதில்லை. அவர்களுடைய சமூக வாழ்க்கை நிலையே அவர்களுடைய உணர்வை நிர்ணயிக்கிறது. வளர்ச்சியின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில், சமூகத்தின் பொருளாயத உற்பத்தி சக்திகள்

அன்றைக்கிருக்கின்ற உற்பத்தி உறவுகளோடு - அல்லது அவற்றைச் சட்டபூர்வமான வார்த்தைகளில் வெளிப்படுத்துகின்ற சொத்துரிமை உறவுகளோடு - இதுவரை அவை இயங்கி வந்திருக்கின்ற சுற்றுவட்டத்திற்குள் மோதுகின்றன. இந்த உறவுகள் உற்பத்தி சக்திகளின் வளர்ச்சிக்கான வடிவங்கள் என்பதிலிருந்து அவற்றின் மீது மாட்டப்பட்டிருக்கும் விலக்குகளாக மாறிவிடுகின்றன. இதன் பிறகு சமூகப் புரட்சியின் சகாப்தம் ஆரம்பமாகிறது. பொருளாதார அடித்தளத்தில் ஏற்படும் மாற்றங்கள், அந்த மாபெரும் மேற்கட்டம் முழுவதையுமே சீக்கிரமாகவோ அல்லது சற்று தாமதமாகவோ மாற்றியமைக்கின்றன.[3]

கார்ல்மார்க்ஸ், அரசியல் பொருளாதார விமர்சனத்துக்கு ஒரு பங்களிப்பு. முன்னுரை.

மனிதனின் அடிப்படைப் பொருளாதாரக் கட்டுமானத்தை புறம் என்றும் அவனது உணர்வு சார்ந்த வாழ்வை அகம் எனவும் கொள்ளலாம். சமூகம் அகம் புறம் என்னும் இரண்டு நடவடிக்கைகளின் அடிப்படையில் வளர்ந்து வந்துள்ளதை மனித குல வரலாறு நிலவுகிறது.

புற நடவடிக்கைகள் இலக்கியத்திற்கு உள்ளடக்கமாகும் அளவுக்கு வளர்ந்த அதே சமயத்தில், அக நடவடிக்கைகளும் அத்தகைய உயர்ந்த மதிப்பை அடைந்திருந்ததை சங்க இலக்கியங்கள் இணைத்திருக்கிறது என்பதற்கு இதுவும் ஒரு எடுத்துக்காட்டாகும். இவ்விரண்டு செயல்பாடுகளும் சமூகத்தின் விளைபொருள்கள். இவை ஒன்றை ஒன்று வளர்த்தும் வளர்ந்தும் வந்துள்ளன. எனில் சங்க கால மனிதனின் சமூக பொருளாதார உற்பத்திக்கு துணையாய் அமைந்த அக வாழ்வின் முக்கியத்துவத்தை ஆராய வேண்டியது அவசியமாகிறது.

சமூக பொருளாதார உற்பத்தியில் ஆண் பெண் இருவரும் இணைந்து செயல்பட்ட நிலை மாற்றம் அடைந்தது. உற்பத்தி

கருவிகளின் வளர்ச்சியின் காரணமாக உற்பத்தி பொருட்களின் வளர்ச்சி அதிகரித்தது. இத்தகைய உற்பத்தி முறை ஆண்களை நேரடியான பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபடுத்தியது. பெண்களை அவ்வுற்பத்திக்குத் துணையான வேலைகளில் ஈடுபடுத்தியது. அவற்றுள் முக்கியமானது குடும்பம் பேணுதல் என்பதாகும்.

மூன்றாவது இயல் ஆய்வு தலைப்போடு ஒத்து போனதற்கான சிறப்பான ஆதாரங்கள் இவ்வாய்வேட்டில் உள்ளது. ‘அறம் என்பது பொதுமை, சமன், சமப்பகிர்வு என்ற பொருண்மை பொதிந்த பொதுமைப்படுத்தப்பட்ட ஒரு சொல். சமூகப் பண்பாட்டுச் சொல்லாடலாக, தமிழரை உலக அரங்கில் உயர்ந்த நிலையில் வைத்து பெருமிதம் கொண்டமையும், அதற்கான வித்து சங்க இலக்கியத்தில் பதிவு இருப்பதையும் நாம் அனைவரும் அறிந்த ஒன்றே’.

ஆகவே, ஒரு நாட்டினுடைய உற்பத்தி வளர்ச்சி, அந்நாட்டினுடைய அறநெறிச் சார்ந்தது. அந்த அறநெறி என்பது அறம், என்றும் அறத்திற்கான திருமணம், கற்பு, விருந்தோம்பல், அறத்தொடு நிற்றல் என ஒட்டு மொத்தமாக இவையெல்லாம் இணைந்தது தான் தமிழரின் பண்பாட்டு அடையாளமாக பார்க்கப்படுகிறது. ஆகவே ஒழுங்கு இல்லாமல், அறம் இல்லாமல், விதி இல்லாமல், பண்பாடு என்ற சொல் தகுதியுடையதாக இருந்திருக்க வாய்ப்பில்லை. எனவே பொருளாதார உற்பத்தியல் கூட்டிணைவு என்று சொல்கின்ற வாழ்வியல் கூறுகளில் இவையெல்லாம் முக்கிய பங்கு வகிக்கின்ற கூறுகளாக பார்க்கப்பட்டிருக்கின்றது என்பதை ஆய்ந்தளித்துள்ளது இவ்வியல்.

**சங்ககால மகளிர் நிலை**

பொதுமையில் சுட்டும் சங்க இலக்கியப் பாடல்களுள் தலைவன், தலைவி, தோழி, பாங்கன், விறலி, பாடினி, பொருநன், சிறுபாணன், பெரும்பாணன், துடியன், பறையன், கடம்பன் என்று தொழில் சார்ந்து பண்பாட்டுப் பகுப்பு செய்யப்பட்டுள்ளது என்பது சங்க இலக்கியப் பொதுவான பதிவு. ஆனால் சமூகப் பொருளாதார அடிப்படையில் தொழில் சார்ந்து வர்க்கங்களாகப் பிரிந்து நிற்பதையும் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

சங்க இலக்கியத்தில் `சான்றோர் (புறம். 266) –இழிசினர் (புறம். 287)' என்னும் சொல்லாடல்கள் மூலம் வர்க்கப் பிரிவினை வெளிப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் காட்டப்படும் தலைவி, தோழி, செவிலி, நற்றாய் போன்றோர் சமூகத்தின் மேல்தட்டு பெண்களாவர். இவர்கள் அரண்மனை அல்லது செல்வந்தர் குடும்பங்களைச் சேர்ந்தோராவர். இழிசினர் எனக் குறிக்கப்பட்ட மக்கள் பொருளாதாரத்தில் பின் தங்கிய மக்களாகப் பார்க்கப்பட்டுள்ளனர். அம்மக்களுள் ஆண்கள் பெண்கள் என இருபாலரும் அடங்குவர். தாய் வழிச் சமூகத்தில் தலை பண்பு ஏற்ற பெண்கள், தந்தை வழிச் சமூகத்தில் உருவான வர்க்கப் பிரிவினையின் காரணமாக ஒரு குறிப்பிட்ட பெண்கள் இழிசின குலத்தைச் சேர்ந்தோராக மாற்றம் கண்டனர். தொழிற் பிரிவினையின் அவசியம் வர்க்கப் பிரிவினையை உருவாக்கிய போதும் தற்காலத்தில் சாதி என்ற இறுகிய, ஒடுக்குமுறை பண்பு கொண்ட ஒரு நிலை உருவாகக் காரணமாய் அமைந்துள்ளதைச் சமூகவியல் ஆய்வுகள் விளக்கி வந்துள்ளன.

புலைத்தி. பறை அடிப்பவர், கட்டில் பின்னுவோன் உள்ளிட்ட பிற உழைக்கும் மக்கள் இழிசினர் என்னும் பிரிவைச் சேர்ந்தோராகச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன.

எறி கோல் கொள்ளும் *இழிசின!* [4]

புறம். 287 – 2.

குறுந்தடியைக் கையில் கொண்டு பறையை முழக்குபவரை இழிசினன் என மேல்கண்ட வரி சுட்டுவது கண்டுணர தக்கது.

கட்டில் நிணக்கும் *இழிசினன்* கையது[5]

புறம். 82. 3.

இவ்வரி போர்ச் செயலுக்கு உவமையாகச் சுட்டப்பட்டுள்ளது. இதில் கட்டில் பின்னுவோன் பிரசவ காலம் நெருங்கிவிட்ட தன் மனைவியை விரைவில் காண வேண்டும் என்பதற்காக வேகமாக தனது கைகளை இயக்கிக் கொண்டிருந்தான். அது போல பெருநற்கிள்ளி வேகமாக போர் புரிந்தான் எனக் கூறுகிறது. இதன்மூலம் இழிசினன் என்ற ஆண்பாலைக் குறிக்கும் சொல்லுள் இழிசினனின் மனைவி இழிசினள் என்னும் சொல்லையும் குறித்து நிற்பதை கண்ணுற இடமுளது. இங்ஙனம் தொழிற் பிரிவினை ஒரு வகை இழி நிலையை அடைந்திருந்ததற்குச் சான்றுகள் பல சங்க இலக்கியத்தில் இருப்பதை அறியலாம். இருப்பினும் இரு வர்க்கத்தினருக்கும் இடையான சமூக உறவுதான் அச்சமூகத்தை இயக்கியது என்பதை மார்க்சிய ஆய்வுகள் புலப்படுத்தி வருகின்றன. மேலும் முல்லை மருத நிலத்து தலைவியர் சமூக படிநிலையில் மேல் நிலையில் இருந்துள்ளதை அப் பெண்களைச் சுட்டும் பெயர்களின் வழி பின்வருமாறு கைலாசபதி விளக்குகிறார்.

> மகளிரின் பணிக்களம் வீடாக இருந்தது. மனையாள், மனையோள், மனைவி போன்றவள் வீட்டுக்குரியவள், வீட்டின் தலைவி, முல்லை, மருத நிலங்களின் தலைவி, வீட்டின் பெண் உடைமையாளர், வீட்டில் உறைபவர் என்ற பொருள்களையும், இவற்றைப் பொருளாகக் கொண்ட இல்லவள், இல்லாள் என்ற ஏனைச் சொற்களும் அக்கால சமூக நடப்பைத் தெளிவுறக் காட்டுவன.[6]

க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப. 367

தலைவி, தோழி உள்ளிட்ட மேல்தட்டு பெண்களையும் ஏவல் மகளிர் உள்ளிட்ட உழைக்கும் பெண்களையும் தவிர மற்றொரு பெண்கள்

பிரிவும் அக்காலத்தில் இருந்துள்ளமையை அறியமுடிகிறது. இவர்கள் பரத்தையர் எனப்பட்டனர். இவர்கள் உயர்குடி ஆண்மக்களின் இன்பத் தேவைக்காக இருந்துள்ளனர்.

இவர்களில் மூன்று பிரிவினர் இருந்துள்ளனர். மனைவியைப் போன்று தலைவன் ஒருவனுக்காக தன்னை கருதி வாழும் இயல்புடைய காம கிழத்தி. பல உயர்குடி ஆடவர்களுடன் அவர்களின் செல்வத்திற்காக அவ்வப்போது அவர்களுடன் இருக்கும் பரத்தையர். சிறிய அளவு பணமோ பொருளோ கிடைத்தாலும் யாருடன் வேண்டுமானும் உறவு கொள்ளும் பொது மகளிர் எனும் மூன்று பிரிவினரையும் காணமுடிகிறது. இம்மூன்று வகை மகளிர் குறித்து கைலாசபதி பின்வருமாறு விளக்குகிறார்.

> சமூகநிலையில் ஆடவரோடு ஒத்தவர்; சமூகநிலையில் ஆடவரினும் தாழ்ந்தவர். ஆடற் குடும்பங்களிலிருந்து வந்தோர் (வாங்கப்பட்டோர்) என்பர் ஆவர். விலைமகளிரும் இம் மூன்றாம் வகைக்குள் அடங்குவர்.[7]

க. கைலாசபதி, தமிழ் விரநிலைக் கவிதை. ப. 372.

கைலாசபதி கூற்றில் உள்ளது போல் சமூக நிலையில் ஆடவரோடு ஒத்தவராகப் பெண்கள் கருதப்பட்டதற்கான சான்றாகப் பின்வரும் பாடலைக் குறிப்பிடலாம்.

> மடமான் நோக்கின் வாள்நுதல் விறலியர்
> நடைமெலிந்து அசைஇய நல்மென் சீறடி
> *கல்லா இளையர் மெல்லத் தைவர*[8]

சிறுபாண். 31 - 33

*வறுமையில் வாடிய கலைஞர்களுக்குள் ஆண் பெண் என்ற பேதம் இல்லாமல் இருந்ததை இப்பாடல் சுட்டிச் செல்கிறது.* பெண்ணை அடிமைப்படுத்திய செல்வம் என்பதற்கு மேற்கண்ட பாடல் ஒரு முரண்பட்ட உதாரணமாக அமைந்துள்ளது. ஒரு குறிப்பிட்ட பெண்கள்

பாசறையில் மன்னருக்கு மெய்க்காப்பளராய் இருந்துள்ளனர். போரின் இழப்பால் பாதிப்படையினும் வீரத்தைப் போற்றும் மகளிராகச் சங்க மகளிர் இருந்துள்ளனர். இங்ஙனம் சங்ககால பெண்கள் சமூகம் அனுமதித்த அளவிற்கு தங்களது ஊக்கத்தைச் சமூகத்திற்கு அளித்துள்ளனர். சங்க காலத்தில் தொடங்கிய ஆண் பொருளாதாரத்தின் தொடர்ச்சி தற்காலம் வரை பெண்களை அடிமை நிலையில் வைத்துள்ளதைக் காணமுடிகிறது.

## களவில் தோழி

சங்கச் சமூகத்தில் ஒத்த நிலையில் இருக்கும் இரு மகளிர் தத்தமக்குள் உதவி செய்து கொள்வதைக் காணமுடிகிறது. இதனைத் தொல்காப்பியம் உள்ளிட்ட இலக்கணங்கள் விளக்குகின்றன. இலக்கணத்திற்கு அடைப்படையாக அமைவது இலக்கியம் ஆகும். இலக்கியங்களுக்கு அடிப்படையாக அமைவது அவை தோன்றிய சமூகமாகும்.

தொல்காப்பியத்தில் தோழியின் கூற்றாக அமையும் இடங்களைப் பட்டியல் இடுகிறார் தொல்காப்பியர். பின்வரும் நூற்பாவின் மூலம் தோழிக்கான சமூக கடமைகளை அவள் தம் கூற்றுகளாக விவரிக்கிறார்.

நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி எதிர்ப்பா டுள்ளுறுத்து வரூஉம்
உணர்ச்சி ஏழினும் உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்,
குறையுறற்கு எதிரிய கிழவனை மறையுறப்
பெருமையிற் பெயர்ப்பினும் உலகு உரைத்து ஒழிப்பினும்
அருமையின் அகற்சியும் அவள் அறிவுறுத்துப்
பின்வா என்றலும் பேதைமை ஊட்டலும்
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும்
அஞ்சி அச்சுறுத்தலும் உரைத்துழிக் கூட்டமொடு

எஞ்சாது கிளந்த இரு நான்கு கிளவியும்
வந்த கிழவனை மாயம் செப்பிப்
பொறுத்த காரணம் குறித்த காலையும்
புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணும்
குறைந்து அவள் படரினும் மறைந்தவள் அருகத்
தன்னொடும் அவளொடும் முன்னம் முன்தளைஇப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்
நன்னயம் பெற்றுழி நயம்புரி இடத்தினும்
எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்
புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்
வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தும்
புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பினும்
ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்
செங்கடுமொழியால் சிதைவுடைத் தாயினும்
என்பு நெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ
அன்பு தலை யடுத்த வன்புறைக் கண்ணும்
ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்
காப்பின் கடுமை கையற வரினும்
களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதல் மிகுதி உளப்படப் பறிவும்,
நாடும் ஊரும் இல்லும் குடியும்
பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி
அவன் வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ
அனை நிலை வகையான் வரைதல் வேண்டினும்
ஐயச் செய்கை தாய்க்கு எதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்
அவள் விலங் குறினும் களம் பெறக் காட்டினும்
பிறன் வரைவு ஆயினும் அவன் வரைவு மறுப்பினும்
முன்னிலை அறன் எனப் படுதல் என்று இருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்

வரைவு உடன்பட்டோர்க் கடாவல் வேண்டினும்
ஆங்கு அதன் தன்மையின் வன்புறை உளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையும்
தாங்கு அரும் சிறப்பின் தோழி மேன.[9]

தொல். 1060

இலக்கியத்தில் களவு காலத்தில் தோழி பேசுதற்குரிய இடங்களைச் சுட்டுகிறார் தொல்காப்பியர். அதன்வழி தோழியின் சமூகக் கடமைகள் புலனாகிறது. தோழி என்பவள் *வர்க்கப் பிரிவு உருவாகிய சமூகத்தில்* உயர்குடியைச் சேர்ந்தவள் என்பதை அறியமுடிகிறது. களவின் தொடக்கத்தில் தலைவியின் தோற்றத்தில் ஏற்படும் மாற்றங்கள் தொடங்கி தலைவன் வந்து தலைவியை மணந்து கொள்ளும் வரை ஆற்றியிருக்கச் செய்வது வரை களவு காலத்தில் அவளது பணிகளைத் தொகுத்துரைக்கிறது தொல்காப்பியம்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்து நிலத்திலும் தோழியின் பாத்திரம் முக்கியத்துவம் வகிப்பதை சங்கப் பாடல்கள் விளக்குகின்றன.

களவு வாழ்வின் போது தலைவிக்குத் துணையிருக்கிறாள். தலைவன் வரைவு நீட்டித்த போது அவனுக்கு மறைமுகமாக அறிவுரை கூறுகிறாள். *தலைவனைப் பிரிந்து தலைவி தவிக்கும் போது அவளுக்குத் துணையாக இருந்து தேற்றுகிறாள். அந்தக் காலச் சமூக கட்டமைப்புக்கு இடையூறு வரும் போது தோழி தடுத்து நிறுத்தி, சமூக மதிப்பீடுகளின் முக்கியத்துவத்தை வற்புறுத்துகிறாள்.* பின்வரும் பாடலில் இச்சேதி பயின்றுள்ளது.

இவளே, கானல் நண்ணிய காமர் சிறுகுடி,
நீல் நிறப் பெருங் கடல் கலங்க உள்புக்கு
மீன் எறி பரதவர் மகளே, நீயே,
நெடுங் கொடி நுடங்கும் நியம மூதூர்க்
கடுந் தேர்ச் செல்வன் காதல் மகனே
நிணச் சுறா அறுத்த உணக்கல் வேண்டி,

இனப் புள் ஓப்பும் எமக்கு நலன் எவனோ?
புலவு நாறுதும், செல நின்றீமோ![10]

நற், 45.

இப்பாடல் வர்க்கம் வளர்ந்த சமூகத்தினைக் காட்டுகிறது. வர்க்கத்தைக் கடந்து காதல் புரிவதென்பது இயலாதது. இதை தோழி தலைவனுக்கு உணர்த்துவதாக மேற்கண்ட பாடல் அமைந்துள்ளது. இனக்குழு வாழ்க்கை மறைந்து மருத நில அரசு உள்ளிட்ட மேட்டிமையான பொருள் அதிகார அமைப்புகள் தோன்றியதாலும், கொத்தடிமையால் தனிமனித உரிமை பறி போய்விடக் கூடாது என ஆற்றுப்படுத்தும் நிலையும் சமூகத்தில் நிகழ்ந்துள்ளது. ஆகையால் சமூக கட்டுப்பாட்டைக் காக்கும் பணியைத் தோழி மேற்கொள்கிறாள் என்பதை சங்கப்பாடல் வழி உணரலாம்.

தலைவனும் தலைவியும் எந்தெந்தக் குறியில் சந்திக்க வேண்டும் என்பதையும் தீர்மானிப்பவளாக தோழி இருக்கிறாள். தாய்க்குத் தெரியாமல் தலைவியின் களவுக்குத் துணை நின்று அதனால் வரும் துன்பங்களுக்கு அஞ்சுவதையும் காணமுடிகிறது. தலைவி தலைவனுடன் உடன் போக விரும்பினால் அவர்களுக்கு தோழி உதவுகிறாள்.

இதனால் உடன் போக்கு சென்ற தலைவி இடைச் சுரத்தில் அந்தணர்களைப் பார்க்க நேர்ந்த போது தனது தோழியிடம் தான் நன்றாக இருப்பதைத் தெரிவிக்க சொல்லுவதைக் கூறுகிறது சங்கப் பாடல் ஒன்று. இந்த அந்தணர் பிற்காலத்தில் வளர்ந்த பார்ப்பனர் என்ற மேட்டுக்குடி வர்க்கத்தைச் சார்ந்தோர் அல்ல. தலைமக்கள் பயணம் மேற்கொள்வது போல் ஊர் சுற்றி திரியும் ஒரு வகையினர் எனக் கொள்வது சரியாகும். பிற்காலத்தில் இவ்வந்தணர்கள் அதிகார வர்க்கத்தின் ஒரு பகுதியாக வளர்ச்சி கண்டுள்ளதை ஆய்வுலகம் அறிதலும் தகும்.

## அறத்தொடு நிற்றல்

தலை மக்கள் காதலில் தோழியின் முக்கிய பணி அறத்தொடு நிற்றல் என்பதாகும். தோழி அறத்தோடு நின்றால் தலைமக்களின் களவு வாழ்வு கற்பு வாழ்வாக மாறும். தலைவியின் களவு ஒழுக்கத்தை அவளது தாய்க்கு உணர்த்தி இருவருக்கும் விரைவில் திருமண ஏற்பாடு செய்ய வேண்டும் என்பது அறத்தொடு நிற்றலின் தேவையாகும்.

ஔவையாரின் பின் வரும்பாடல் மறைமுகமாக, செவிலிக்கு தோழி தலைவியின் காதலை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

அகவன் மகளே! அகவன் மகளே!
மனவுக் கோப்பு அன்ன நல்நெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே;
இன்னும், பாடுக, பாட்டே - அவர்
நல் நெடுங் குன்றம் பாடிய பாட்டே[11]

குறுந். 23.

என தோழி தலைவனின் குன்றத்தைத் திரும்ப திரும்ப பாடச் சொல்லி தலைவியின் காதல் குறித்து செவிலியை ஐயம் உறச் செய்கிறாள். மற்றொரு பாடலில் தலைவியின் உடல் மாற்றம் கண்டு செவிலி அம்மாற்றத்துக்கான காரணத்தை அறிய கட்டுவிச்சியிடம் கேட்க, கட்வி விச்சி தெய்வ குற்றம் என்று சொல்ல; அதை கேட்ட தோழி; இது தலைவனால் வந்த மாற்றம் இதை அவர்கள் இணைந்திருந்த போது அருகில் இருந்த *கடுவன் அறியும் தெய்வம்* ஏறிய இக்கட்டுவிச்சி அறியமாட்டாளா? இவள் பொய் கூறுகிறாள் எனக் கூறி தலைவியின் காதலை செவிலிக்குத் தெரியப்படுத்துகிறாள்.

இங்ஙனம் பல நிலைகளில் தலைமக்கள் காதலுக்கு தோழி அறத்தொடு நின்றுள்ள செய்தியை சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. ‘அறம்’ என்பது ஒருவனுக்கு ஒருத்தி என்ற சமூக கட்டமைப்பு விதி செய்த களமாக சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

## கற்பில் தோழி

தலைமக்கள் காதலுக்குக் களவில் உதவியதைப் போல கற்பு காலத்திலும் தோழி உதவி புரிகிறாள். இலக்கியத்தில் கூறப்படும் கற்பு சூழலில் தோழிக்கு கூற்று அமையும் விதத்தை ஆராய்ந்து உரைக்கிறார் தொல்காப்பியர். தொல்காப்பியர் கூறும் செய்திகள் இலக்கியம் புனைவதற்காக அமைந்தவை எனினும் அதில் அக்காலச் சமூகத்தில் பெண்களின் நிலை தெளிவாகப் புலப்படுகிறது. தோழியின் கூற்றுகளைத் தொகுத்துக் கூறும் தொல்காப்பிய நூற்பா சங்ககால கற்பு நிலையைச் சிறப்பாக விளக்குகிறது.

பொருள் ஈட்டி வந்த தலைவனைச் சிறப்பித்தல் தொடங்கி, தலைவியை விட்டு தலைவன் நெடுந்தூரம் செல்ல பிரியும்போது அதை பணிவாக மறுத்து தோழி வினையாற்றுவதைத் தொல்காப்பியம் கூறுகிறது. பொருள் ஈட்டுதல் சமூகத்தில் தனிமனித குடும்பச் சொத்தாகவும் தலைவனின் உடைமைப் பொருளாகவும் இருந்துள்ளது. தனிமனித பொருளாதார வளர்ச்சியின் பெருக்கம் சமூகத்தின் பொருளாதார வளர்ச்சியாகவும் தொடர்ந்துள்ளதை அறிய இயலும்.

தொல்காப்பியம் கூறும் செய்திகளுக்கான சான்றுகளைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. தலைவன் பொருளீட்டக் கருதும் போது அதைத் தடுத்து நிலையாமையை உணர்த்தி தலைவியோடு இருக்கச் செய்கிறாள். தேவையான போது தலைவனுக்குப் பொருளின் தேவையை உணர்த்தி அவனைப் பொருளீட்டச் செல்லுமாறு கூறுகிறாள். போரின் சிறப்பைக் கூறி தலைவியை ஆற்றுப்படுத்துகிறாள். இங்ஙனம் தோழி சங்ககால பொருளாதார உற்பத்திக்கு துணையாக அமைவதைச் சங்க இலக்கியங்கள் வழி அறிய இடமுளது.

## களவில் செவிலி

தலைவியின் உடல் நலத்தில் ஏற்பட்ட மாறுதல்களைக் கண்டு வெறியாட்டு நிகழ்த்தி தலைவியின் நோயைக் கண்டறிந்து அந்நோயைத்

தீர்க்கும் கடமையுடையவளாகவும் செவிலித்தாய் இருப்பதைக் காணமுடிகிறது.

செவிலி உடன்போகிய தலைவியின் பேதைமையை எண்ணி வருந்துகிறாள். கூந்தலில் சூடிய மாலை எங்கேனும் சிக்கிக் கொண்டாலும் அதை விடுவிக்கத் தெரியாதவள், கைகளில் இருக்கும் வளை நெகிழ்ந்து விழுந்தாலும் அதை செறித்துக் கொள்ளத் தெரியாதவள், இடையில் இருக்கும் இடையணியைத் திருத்திக் கொள்ளத் தெரியாதவள். என்பதன் மூலம் அவளைச் செவிலி மிகவும் செல்லமாக வளர்த்துள்ள நிலை வெளிப்படுகிறது. நல்ல தலைவனுடன் சென்றாலும் இவள் எங்ஙனம் வாழ்க்கை நடத்துவாள் என தலைவியைக் குறித்து செவிலி வருந்துவதில் செவிலியின் உள்ளம் புலப்படுகிறது. தன் மகள் ஒரு காளையோடு உடன் போக்கு மேற்கொண்டதை எண்ணி வருந்தும் நிலையைக் காணமுடிகிறது.

தலைவன் தலைவி என மேட்டுக் குடியினரின் சமூகமான அரசு, விதிகளை நெறியாக்கியுள்ளது. `கற்பு' எனும் கோட்பாடும் மருத நிலத்து மிகு செல்வ உடைமையின் கோட்பாடாகும். பரத்தை ஒழுக்கம் ஆளும் அதிகார அரசின் ஆணாதிக்கச் சமூகத்தின் ஒரு சார்பு நிலையை ஆதரிக்கும் நிலையாக இருந்துள்ளது. ஆனால் பெண்கள் பரத்தை பிரிவில் தனிமைப் படுத்தப்பட்டு சமூக மதிப்பிழந்தவளாக ஒதுக்கப்பட்டிருந்தாள். குறிப்பாக பொருள் இல்லாத நிலையில் பொருளீட்டும் வகைக்கு பரத்தையர் பரத்தைத் தொழில் புரிந்தவர்களாக காட்டப்பட்டுள்ளனர். இது சமூக குற்றமாக பார்க்கப்பட வேண்டியுள்ளது.

## கற்பில் செவிலி

களவைக் காட்டிலும் கற்பில் செவிலிக்குச் சிறப்பான இடம் இருந்துள்ளது. தலை மக்கள் சிறப்பாக வாழ்ந்து தங்களது சமூகக் கடமைகளை நிறைவேற்ற வேண்டும் என்பது செவிலியின் விருப்பமாக இருந்துள்ளது. அக்காலத்தில் செவிலிக்கு அறிவர்க்கு வழங்கியுள்ள பொறுப்பு வழங்கப்பட்டுள்ளது. கடந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என மூன்று காலங்களைப் பற்றி அவள் அறிந்த வரை உள்ள

அறிவுரைகளை வழங்கி தலை மக்களை நெறிப்படுத்துவாள் என்கிறது தொல்காப்பியம். இதனைப் பின்வரும் நூற்பாவால் அறியலாம்.

கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக்குரிய ஆகும் என்ப.[12]

தொல். 1099

தலைமக்கள் உடன் போய்விட்ட பொழுது அவர்களை மீண்டும் தம் இல்லத்திற்கு அழைத்து அவர்களை முறையான குடும்ப வாழ்வுக்கு ஈடுபடுத்துவதும் செவிலியின் கடமை ஆகிறது. தலைவனுடன் போன தலைவி தலைவன் இல்லத்தில் மணம் செய்து கொண்டு தங்கள் இல்லத்திற்கு வருவதை எண்ணி செவிலியும் நற்றாயும் மகிழ்ந்திருந்ததை பாடல்களில் காணமுடிகிறது.

வேட்டை, தொடக்க கால வேளாண்மை, மருத நில வேளாண்மை, போர், மீன் பிடித்தல் என எந்த வேலை செய்யும் தலைமக்களுக்கும் காதல், குடும்ப வாழ்க்கை அவசியம். அந்த வகையில் பெண்கள் இச்சமூக உற்பத்திக்கு உறுதுணையாக இருந்துள்ளதை அறியமுடிகிறது.

**குழந்தை வளர்த்தலில் செவிலி**

குழந்தை என்பது ஒரு சமூகத்தின் புதுதலைமுறை. தற்போது பெரியவர்கள் செய்யும் சமூகத்தின் உற்பத்தி முதற்கொண்ட அனைத்து நடவடிக்கைகளும் அடுத்து இவர்கள் கையில்தான் கைமாறப்போகிறது. அதாவது இன்றைய குழந்தைகள்தான் நாளைய உற்பத்தியின் தொடர் நடவடிக்கையை இட்டுச் செல்லப் போகின்றனர். எனவேதான் மனித இனப்பெருக்க நடவடிக்கைய புனர்உற்பத்தி {reproduction} என சமூகவிஞ்ஞானம் குறிக்கிறது.

சங்கச் சமூகத்தில் செல்வச் செழிப்பு மிக்க வீடுகளில் செவிலியர் குழந்தைகளை வளர்த்துள்ளமையைக் காணமுடிகிறது. குழந்தை வளர்த்தல், குழந்தைக்கு உணவு கொடுத்தல், குழந்தைகள்

சண்டையிட்டுக் கொண்டால் அவர்களை விலக்கிவிடுதல், தாய்ப்பால் கொடுத்தல் ஆகிய பணிகளைச் செவிலியர் செய்துள்ளனர்.

உற்பத்தி வளர்ச்சியின் முக்கிய சமூக அடிப்படை வேலைப் பிரிவினை ஆகும். வேலைப் பிரிவினை தோன்றி வளர்ந்த பிறகுதான் மனிதகுலம் உற்பத்தியில் பெரும் சாதனைகளை செய்து குவிக்க துவங்கியது. மனிதகுலத்தின் அவ்வித வேலைப் பிரிவினைகளில் முதல் வேலைப் பிரிவினை குழந்தைக்கு தாய் பாலூட்டுதல் ஆகும். குழந்தை பெற்ற இளம் தாய் தலைமக்களின் குழந்தைக்கு பாலூட்டியமையை பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது.

தச்சச் சிறாஅர் நச்சப் புனைந்த
ஊரா நல்தேர் உருட்டிய புதல்வர்
தளர்நடை வருத்தம் வீட, அலர்முலைச்
செவிலிஅம் பெண்டிர்த் தழீஇ, பால்ஆர்ந்து,
அமளித் துஞ்சும் அழகுடை நல்இல்[13]

பெரும். 248 – 252

என்ற வரிகளின் மூலம் மருத நிலத்து வளமையும் அங்கு செவிலியரின் பொறுப்பும் வெளிப்படுகிறது. தான் பெறாத குழந்தைக்கு பாலூட்டி வளர்க்கும் செவிலித்தாய் குறித்து மேற்கண்ட பாடல் விளக்குகிறது. தலைவிக்குத் தோழியாக இருக்கும் தாய் தலைவியின் குழந்தைக்குத் செவிலியாக இருந்திருக்கலாம். இங்ஙனம் தலைமக்களின் வாழ்வோடு நெருங்கிய தொடர்பு கொண்டவளாக இருந்துள்ளாள் செவிலி. தலைமக்களின் சமூக பொருளாதார வாழ்வுக்கு செவிலியும் தோழியும் பலவழியானும் துணை நின்றுள்ளனர்.

## குடும்ப பொறுப்பு

குடும்பம் என்பது சமூகத்தின் மிகச்சிறிய பொருளாதார அலகு ஆகும். குழந்தைகளைச் சமூகமயமாக்குவதற்கான முதல் நிறுவனமாகக் குடும்பம் திகழ்வதைக் காணமுடிகிறது. குழந்தைகளை சமூக மனிதர்களாக உருவாக்குவதற்கான பணிகளைக் குடும்பம்

மேற்கொள்கிறது. தமிழ் விக்கிபீடியா குடும்பம் என்பதற்கு பின்வருமாறு விளக்கம் தறுவதைக் கண்ணுற முடிகிறது.

> குடும்பம் என்பது இரத்த உறவாலோ, அல்லது திருமணம், தத்தெடுத்தல் போன்ற வேறு சட்டபூர்வமான முறைகளிலோ தொடர்புபட்ட ஒரு உறைவிடக் குழுவாகும். பல சமுதாயங்களில், குடும்பம் என்பது மேற்குறிப்பிட்டவை தவிர்ந்த வேறு கருத்துருக்களினாலும் புரிந்துகொள்ளப் பட்டிருப்பதால், "குடும்பம்" என்பது பல வேளைகளில் பெரிய மனிதக் குழுவினரை உள்ளடக்கும் ஒரு உருவகமாகவும் பயன்படுவதைக் காணலாம். எடுத்துக்காட்டாக, சமூகம், சுற்றம், நாடு, மனித குலம் போன்றவற்றையும் குடும்பம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். அனைத்துலக மனித உரிமைகள் சாசனத்தின் 16 (3) ஆவது விதிப்படி, "குடும்பம் என்பது சமூகத்தின் இயல்பானதும், அடிப்படையானதுமான குழு அலகாகும் என்பதுடன், அது சமூகத்தாலும், தேசத்தாலும் பாதுகாக்கப்படுவதற்கு தகுதி பெற்றுள்ளது."[1] நெருங்கிய குடும்பம் என்பது வாழ்க்கைத் துணைவர், பெற்றோர், உடன்பிறந்தோர், மகன்கள், மகள்கள் ஆகியோரை உள்ளடக்கும். இவர்களோடு, பெற்றோரின் உடன்பிறப்புகள், ஒன்றுவிட்ட உடன்பிறந்தோர், மருமக்கள் போன்றோரும் சேர்ந்து விரிந்த குடும்பத்தின் உறுப்பினர்கள் ஆகின்றனர்.[14]

https://ta.wikipedia.org

சங்க இலக்கியத்தில் குடும்பம் என்னும் சொல் இல்லை. குடி என்னும் சொல் இடம் பெறுகிறது. இச்சொல் குடும்பம் என்னும் பொருளில் பல இடங்களில் பயின்று வந்துள்ளது. குடும்பம் இருந்த இடம் இல், மனை, குரம்பை, புலப்பில், முன்றில், குடில், கூரை, வரைப்பு, முற்றம், நகர், மாடம் என பலப் பெயர்களில் குறிக்கப்பட்டுள்ளன.

இவற்றுள் முன்றில் என்னும் சொல் பல இடங்களில் காணப்படுகின்றது. இது எளிய இடமாக இருந்துள்ளது வீட்டின் முன்புறம் உள்ள இடத்தை முன்றில் எனக் குறித்துள்ளனர். முற்றத்தில்

புழங்கும் வழக்கம் அதிகமிருந்ததைக் காணமுடிகிறது. இந்நிலையில் சமூகம் ஒழுங்கமைவுகளுடன் இயங்கி வந்திருப்பது தமிழனின் பண்பாட்டு அடையாளமாகும்.

> இல், மனை எனும் எளிய வாழ்விடத்திலிருந்து `விண்தோய் மாடம்' வரை, வாழ்விடங்கள் செல்வ நிலைக்கேற்பவும், உடைமை நிலைக் கேற்பவும் வெவ்வேறு வகையில் இருந்துள்ளன. முன்றில், குரம்பை (குறுந். 134: 5, 144: 7), குடில் முதலிய இடங்களில் வாழ்ந்த குடும்பத்தார் வறியவர்களாகவே இருந்துள்ளதை அறியமுடிகிறது. புலப்பில் (குறுந். 41: 5) என்பது தனி வீடாகும். சிறுகுடி (நற். 82, 87, 110;) (குறுந். 284, 322, 355; பெரும். 197) எனும் சொல் வேளாண் தொழிலாளர்களின் குடியிருப்பு எனக் காத்திகேசு சிவத்தம்பி (2003: 109) கூறுகிறார். செழுந்தண்மனை, வளமனை, கடிமனை, திருமனை, நன்மனை போன்ற இடங்கிளில் வாழ்ந்தவர்கள் செல்வச் செழிப்புடன் இருந்துள்ளனர்.[15]

பக்தவத்சல பாரதி, இலக்கிய மானுடவியல், ப. 350

கடிமனை மாடம், உயர் மாடம், கொழுங்கால் மாடம், வேயா மாடம், விண்தோய் மாடம் போன்ற இடங்களில் வாழ்தோர் செல்வந்தர்களாய் இருந்துள்ளனர். அவர்கள் வாழ்ந்த குடியிருப்புகளின் வழி அவர்களது பொருளாதார நிலையை அறியமுடிகிறது.

மனைவியகம், கணவனகம், புதிய அகம், பரத்தையர் அகம் என மேலும் சில வாழிடங்களுக்கான சொற்களைக் காணமுடிகிறது. மக்கள் வாழும் இடங்களை சங்க இலக்கியம் விரிவாக சுட்டுகிறது. இவற்றுள் குடும்பங்கள் வாழும் இடங்களும் காணப்படுகின்றன.. குடும்பங்களின் வளமை மற்றும் வறுமை அச்சமூகத்தின் வளமை மற்றும் வறுமையைச் சுட்டுகின்றன. சமூக பொருளாதார உற்பத்தி வளர்ச்சியில் குடும்பம் ஒரு முக்கிய படிநிலை ஆகும்.

பொருளாதார வளம் என்பதை சமூகத்தில் நிகழும் கருவிகள், காலம் என நிலம் சார்ந்து இயங்கும் பரந்துபட்ட வரலாற்று நிகழ்வுகளின் மூலமே அதன் வளர் நிலையை கணித்தறிய முடியும். அந்நிகழ்வுகளால் புதிய கருவிகளும் வருவாய்களின் வழி பொருள் வளமும், நாட்டின் பொருளாதாரம் மேம்பட்ட வரலாற்றை தீர்மானித்துள்ளன.

## திருமணம்

தமிழிலக்கிய வரலாற்றில் *சங்க இலக்கியத்தை முதல் இலக்கியமென சான்றோர் பதிவு செய்கின்றனர்.* அதனை வரைவு என்று சங்க இலக்கியம் சுட்டுகிறது. களவு வாழ்க்கை மேற்கொண்ட தலைமக்ள் கற்பு வாழ்வைத் தொடங்கியாக வேண்டும். களவோடு தலைமக்கள் பிரிந்து விடும் நிலையை சங்கப்பாடல்கள் எங்கும் காணமுடியவில்லை.

திருமணச் செலவிற்காக சிறிது காலம் பொருள் வயின் பிரிவதும் நடந்திருக்கிறது. கற்பு வாழ்வின் தொடக்க நிகழ்வாக களவு ஒழுக்கம் கருதப்படுகிறது. கற்பு ஒழுக்கத்திற்கான இருத்தலின் தொடக்கம் வரைவு என்பதை பின்வருமாறு விளக்குகிறார் பக்தவத்சல பாரதி.

> குடும்பம் அதன் தொடர்ச்சியான சுழற்சி வட்டத்தில் பல கட்டங்களைக் கடந்து செல்கிறது. குடும்பமும் உயிரிகளைப் போன்றே தோன்றுகிறது, வளர்கிறது. அதன் வாழ்க்கைச் சுழற்சியில் பல வடிவங்களில் நிலைமாற்றம் பெறுகிறது. இத்தகைய நீண்ட பாதையில் குடும்பத்தின் தொடக்கம் திருமணமே. மணம்புரிந்த கணவனும் மனைவியும் சேர்ந்து இல்லற வாழ்வில் ஈடுபடக்கூடிய தொடக்கக் கட்டமே 'மணந்தகம்' (family of procreation) எனப்படுகிறது.[16]

பக்தவத்சல பாரதி, இலக்கிய மானுடவியல், பக். 352-353.

உடன் போக்கு மணம், களவு மணம், மடலேறுதல், தொன்றியல், மரபின் மன்றல், பரிசங் கொடுத்து மணத்தல், சேவை மணம், ஏறு தழுவி மணமுடித்தல், போர் நிகழ்த்தி மணமுடித்தல், துணங்கையாடி

மணத்தல் என்னும் முறைகளில் மணம் நிகழ்ந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது. *திருமணச் சடங்குகளில் பெண்களின் பங்களிப்பு முக்கியமாக இருந்துள்ளது.* பெண்களே திருமணச் சடங்கினை முன்னின்று நடத்தினர் என்பதை தமிழுலகம் மீள் நீட்சி கொள்வதும், நினைவு கூர்வதும் அவசியம். பழந்தமிழரின் வாழ்க்கை வரலாற்றில் ஆண் பெண்ணிடம் உடைமை கொள்ள பொருள் இன்றி சமூக ஒழுக்கமாக மட்டும் திருமணம் நடந்திருப்பதை உலகம் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதை இந்த ஆய்வேடு முன் வைக்கிறது.

மருத நிலத்தில் தொடங்கிய அரசு விதிமுறையான 'விதி வலியது' என்ற கருத்தாக்கம் தொடர்ந்து பெண்ணடிமை முறைக்கு வித்திட்டது. இனக்குழு வாழ்க்கையில் இணைந்த இல்லறம் கண்ட தமிழ்ச் சமூகத்தில் இவ்விதிகள் பெண்ணை அடிமைப்படுத்தப் பயன்படுத்தப்பட்ட மறைமுக கருத்தாக்கங்களாக அமைந்துள்ளன.

உச்சிக் குடத்தர், புத்தகல் மண்டையர்,
பொது செய் கம்பலை முது செம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தர,
புதல்வற் பயந்த திதலை அவ் வயிற்று
வால் இழை மகளிர் நால்வர் கூடி,
கற்பினின் வழாஅ, நற் பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆக![17]

அகம். 86. 8 -12

முதுசெம் பெண்டிர், வால் இழை மகளிர் என மூத்த பெண்கள் மணப் பெண்ணுக்குச் சடங்குகள் நடத்தி அவர்களுக்கு அறிவுரை கூறி, வாழ்த்துவதை மேற்கண்ட பாடல் விளக்கிச் செல்கிறது. திருமணத்தின் வாயிலாக குடும்ப அமைப்பு உருவாக்கப்படுவதற்கு குழந்தைப் பேறு முக்கிய காரணமாகும். பொருளுற்பத்திக்கு முதல் காரணியாக குழந்தைப் பேறு அமைவதால் சமூக உற்பத்தி நடவடிக்கையாகவும், வரைவுச் சடங்கினை முதுபெண்டிர் நடத்தினர் என்பது வரலாறு. மணம் முடிந்து

பிள்ளை பெற்ற மகளிர் மணப் பெண்ணை வாழ்த்தி குடும்ப வாழ்க்கை குறித்த அறிவுரைகளை வழங்குகின்றனர்.

பிள்ளைகளை பெற்ற மகளிர் வாழ்த்தினால் திருமணம் செய்த பெண் விரைவில் பிள்ளை பெறுவாள் என்ற நம்பிக்கை மக்களிடம் இருந்தது. அவர்கள் கற்பு நெறி வழுவாமல் பல நலன்களைச் செய்து கணவன் விரும்பத்தக்க மனைவியாக வாழ்க என வாழ்த்துகின்றனர். அச்சமூக அமைப்பு சமூகமாக இயங்க இளையோரை வழி காட்டுவது நடந்திருக்கிறது. சமூகவிதிப்படி வாழ்ந்துவந்த மற்ற பெண்களின் கடமையாகவும் அமைந்திருந்தது. பிற்காலத்தில் வர்க்கப் பிரிவும் அந்தணரின் சாதிப் பகுப்பும் பெண் தலைமை ஏற்று நடத்திய திருமண வரைவில் ஆதிக்கம் செய்து அந்தணர் முழுமையான இடம் பெற்றுள்ளனர்.

**புணர் உற்பத்தி**

புணர் உற்பத்திக்கு அடிப்படை பொருளாதார உற்பத்தி. உணவு உறைவிடம் முதலிய செல்வங்களை உற்பத்தி செய்யும் மனிதன், தனக்குப் பிறகு சமூக உற்பத்திக்காக மனித குலத்தை உற்பத்தி செய்வது புணர் உற்பத்தி என்றழைக்கப்படுகிறது. இந்த புணர் உற்பத்தியிள் வழிமுறை பாலுறவு ஆகும். பாலுறவை நெறிப்படுத்த வேண்டியது குடும்பத்தின் கடமையாக அமைகிறது. மனித குல தொடர்ச்சியை மேற்கொள்ளும் சிறப்பான பணியை பெண்ணுக்கு வழங்கியுள்ளது இயற்கை. அப் பொறுப்பை அன்றைய காலம் முதல் இன்றைய காலம் வரை மனித குலம் அறிந்து நடந்து வந்துள்ளது.

சங்க இலக்கியங்கள் கூறும் தலைவியர் தம் கணவருடன் மட்டும் உறவு கொண்டிருந்ததைக் காட்டுகிறது. மருத நிலத்தில் கணவன், பரத்தை ஒழுக்கம் மேற்கொண்டாலும் தலைவி அதற்கு ஊடல் என்னும் வகையில் எதிர்ப்பு தெரிவிக்கிறாள். பின் ஊடல் தணியப் பெற்று கணவனுடன் இணைந்திருக்கிறாள். *கணவனுக்கு எதிராக மனைவியும் வேறு ஆடவருடன் உறவு கொள்வதென்பதை எந்தப்பாடலிலும் காண முடியவில்லை. ஆனால் பொது மகளிர், பரத்தையர் போன்றோர் பல*

*ஆடவருடன் பரத்தை ஒழுக்கம் பேணியுள்ளனர்.* இருப்பினும் அவர்கள் குழந்தைப் பேற்றிற்கு தகுதிக்குரியவராகச் சுட்டி பாடல்கள் அமையவில்லை. பெண்களில் ஒரு சமூகப் பிரிவிலிருந்தோர் விதிகளிலிருந்து விலக்கப்பட்டவராக வரையறை செய்யப்பட்டிருக்கின்றனர். இவர்களின் வாயிலாக புனர் உற்பத்தி நடைபெறவில்லை. தலைவனிடம் காணப்பட்ட பரத்தமை ஒழுக்கத்தின் எதிர் விளைவாக பெண்ணிடத்தில் கற்பு மற்றும் கணவனைப் போற்றும் பண்புகள் திணிக்கப்பட்டமை அறியமுடிகிறது.

ஆக, ஆண் பொருளாதாரம் {male economy} வளர்ந்த வர்க்கச் சமூகத்தில் குழந்தை என்பது பொதுவாக சமூகத்தின் அடுத்தநிலை உற்பத்தி வளர்ச்சியை நடத்திச் செல்லும் சமூக அங்கம் என்னும் நிலையிலிருந்து தாழ்ந்து, ஆண்மகன் சேர்த்து வைத்த சொத்துக்களை காப்பாற்றும் வாரிசாக உருமாற்றம் அடைகிறது. மீண்டும் வர்க்கமற்ற சோசலிச சமூகத்தில்தான் குழந்தை குழந்தையாக மாற்றமடையும். அவ்வரலாற்றை எதிர் நோக்குதல் மனிதகுலத் தேவை.,

> குழந்தை வாரிசாக மாற்றடைந்த வர்க்கப் பொருளாதார கட்டத்தின் தொடக்ககால சமூகம்தான் சங்க சமூகம். சங்க இலக்கியத்தில் காணக்கிடைக்கும் குழந்தைக்கும் தாய்க்கும் உள்ள உறவு சங்கச் சமூகத்தில் பெண்ணின் முக்கியத்துவத்தை பல பாடல்கள் சுட்டிச் செல்கின்றன. தாய்வழிச் சமுதாயம் என்பது சங்க இலக்கியத்தில் இல்லை. எனினும் சங்கப் பாடல்களில் தாய் – மகள் உறவு, தாய் – மகன் உறவு தந்தையின் உறவைக் காட்டிலும் மிக அழுத்தமாக படைக்கப்பட்டுள்ளதைக் கண்டுணர இடமுளது. இதனைப் பெண்ணின் களவு காலத்தில் அதை தாய் முதல் உணர்கிறாள். அதே போன்று ஒரு பெண்ணுக்கு கடமையை உணர்த்துவதும் தாய்தான் என்பதை உய்த்துணரலாம். இதனால் குடும்பத்தின் அக நிலையில் தாய் முதன்மை வகிப்பது புலப்படுகின்றது.[18]

கேபி. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர். ப. 35.

குழந்தை வளர்த்தலிலும் பெண்ணின் கடமையை அறியமுடிகிறது. அக்கால சமூக உணர்வான வீரமூட்டுதலும் தாயால் மேற்கொள்ளப்படுகிறது. பெரும்பாண்மையான பாடல்களில் குழந்தைகள் உள்ள குடும்பங்கள் காட்டப்பட்டுள்ளன. ஆண் குழந்தைகளைப் பெறுதல் சிறப்பு எனக் கருதப்பட்டதையும் அறியமுடிகிறது. இருப்பினும் தவம் செய்து பெண் குழந்தை பெற்ற செய்தியும் சங்கப் பாடலில் இடம் பெற்றுள்ளது. போர் உள்ளிட்ட பல பொருளாதார நடவடிக்கைகளில் ஆண்களின் ஆதிக்கம் மிகுந்திருந்தலால் ஆண் பிள்ளை பெறுதல் சிறப்பாகக் கருதப்பட்டுள்ளது. சங்கப் பொருளாதாரம் போர்ப்பொருளாதாரம் ஆகையால், சங்க தலைமக்களின் வாரிசுகள் போருக்கு பயிற்று விக்கப்பட்டனர். அத்தகைய வீரர்களை உருவாக்குதலில் பெண்களின் பங்கு சிறப்பாக இருந்துள்ளது.

**கணவரைப் பேணுதல்**

உணவிட்டு கணவனைப் பாதுகாத்தல் என்ற நிலையைக் கடந்து, அவனுக்கு போர் காரணத்தால் காயம் ஏற்பட்டிருந்த பொழுது வேண்டிய மருத்துவ உதவிகளையும் செய்து மனைவி காத்துள்ளமையை அறியமுடிகிறது.

கணவன் மீது மிகுந்த அன்பும் மதிப்பும் கொண்ட பெண் போர்களத்தில் இறந்துவிட்ட தனது கணவனின் உடலை அப்படியே விட்டு வர முடியாமல் அவன் உடலை காக்க முற்பட்டுள்ளதைப் பின்வரும் புறநானூறு பாடல் விளக்குகிறது.

'ஐயோ' எனின் யான் புலி அஞ்சுவலே;
அணைத்தனனன் கொளினே, அகல் மார்பு எடுக்க வல்லேன்;
என் போல்பெரு விதிர்ப்புறுக, நின்னை
இன்னாது உற்ற அறன் இல் கூற்றே!
நிரை வளை முன் கை பற்றி -
வரை நிழல் சேர்கம் - நடத்தசின் சிறிதே![19]

புறம். 255

என வன்பரணர் பாடிய பாடலில் தலைவி தலைவன் பால் கொண்டிருந்த அன்பும் மதிப்பும் வெளிப்படுகிறது. அவன் உடலைகூட மிருகங்கள் தீண்டிவிடக்கூடாது என்கிற அக்கறை இப்பாடலில் புலப்படுகிறது. தன் வீட்டில் சீராட்டி வளர்க்கப்பட்ட தலைவி தலைவனுடன் உடன்போகி தலைவன் இல்லத்தில் கணவனுக்காக சிரமப்பட்டு உணவு சமைக்கு நிலை சுட்டப்பட்டுள்ளது. திருமணத்திற்குப் பின் கடினமாக இருப்பினும் தலைவனுக்காக இல்லற கடமைகளை ஆற்றி வாழ்வது சிறப்பானதாக வலியுறுத்தப்பட்டுள்ளதை பின்வரும் பாடல் சுட்டி உரைக்கிறது.

முளி தயிர் பிசைந்த காந்தள் மெல் விரல்,
கழுவுறு கலிங்கம், கழாஅது, உடீஇ,
குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்
தான் துழந்து அட்ட தீம் புளிப் பாகர்
'இனிது' எனக் கணவன் உண்டலின்,
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே[20]

குறுந். 167

புகையால் கண்கள் எரிய, அடுப்பின் கரியால் ஆடை அழுக்கடைந்த நிலையில் தலைவி தலைவனுக்கு உணவு சமைத்துப் பரிமாறுவதை செவிலி கண்டு இன்புறுகிறாள். எவ்வளவு செல்லமாக வளர்க்கப்பட்டாலும் தலைவன் இல்லத்தில் இல்லற கடமையாற்ற வேண்டியது பெண்களின் கடமை என்பதை அக்கால சமூக நிலையை உணர்த்தும் சங்கப் பாடல்கள் வழி உணர இடமுளது. தூது, போர், கல்வி பொருட்டு சென்று வந்த தலைவனுக்கு விருந்து செய்யும் தலைவியின் ஆர்வ மிகுதி சங்கப் பாடல்களில் பல இடங்களில் சுட்டப்பட்டுள்ளது. தலைவனை வரவேற்று மகிழ விருந்து சமைப்போம்.

அரும் பெறற் காதலர் வந்தென *விருந்து* அயர்பு[21]

குறுந். 398.

*விருந்து* அயர் விருப்பொடு வருந்தினள்[22] நற். 81.

மாலை நனி *விருந்து* அயர்மார்[23] குறுந். 155.

துயர் அறு கிளவியோடு, அயர்ந்தீகம் *விருந்தே.*[24] பாலை. 32

அட்டிற்சாலை என்றழைக்கப்பட்ட சமயலறை புகுந்து விருந்துணவை வருந்தி சமைத்தாள் என்றும் தேரை வாயிலில் நிறுத்த, தலைவி தானுற்ற துன்பம் நீங்கி விருந்தயரும் விருப்பினள்; என்னைப் புதியவனாகக் கருதி எனக்காக விருந்து செய்யும் விருப்பு கொண்டவளாய் அட்டிற் சாலை புகுந்து சமைத்தாள் என்ற தலைவன் கூற்றில் தலைவனுக்கு தலைவி விருந்து அளித்து மகிழ்வித்த செய்தி சுட்டப்பட்டுள்ளன.

கணவனைத் தொழுது எழும் பெண்களின் சகோதரரின் அம்பு பிழைத்ததில்லை என்னும் கூற்றைச் சங்கப்பாடல் கூறுகிறது. வறுமையான காலத்திலும் வறுமையை மறைத்து வாழ்தல் மனைவியின் சிறப்பாகக் கருதப்பட்டது. வறுமையிலும் விருந்தோம்புதல் மேற்கொள்ளப்பட்டது. இருக்கும் சிறிய அளவு உணவை எல்லோருக்கும் பகிர்ந்தளித்தல் எனப்படும் பாதீடு செய்பவளாக பெண் இருந்துள்ளாள்.

சங்ககால ஆடவன் மதிக்கப் பெறுவதற்கு அவனது உடைமை மற்றும் கல்வி, வீரம், ஆளுமை போன்றவை காரணமாக அமைந்தன. தற்காலத்திலும் இவையே ஒருவனின் மதிப்பைக் காட்டுகின்றன. உடைமை, கல்வி, வீரம் போன்றவை ஆணினால் மெய்பிக்கக் கூடியவை. ஆண்மை என்பதில் பெண்ணும் சேர்ந்து அவனது மதிப்பை மெய்ப்பிக்க வேண்டியவளாகிறாள்.

ஆணாதிக்க சமூகத்தில் சொத்து, ஆளுமை என்ற இரண்டிலும் ஒருவன் குறையுடையவனாக இருப்பின் அவன் சார்ந்திருக்கும் சமூகம் அவனைத் தாழ்ந்த வர்க்கமாகப் பார்க்கிறது. பெண்ணின் சொத்துரிமை மறுக்கப்பட்டு ஆண் சொத்துடையாளனாக மாறியதே ஆண் தலைமைச் சமூகம் கால் கொள்வதற்கு வழிகோலியது சொத்தினால் ஆடவனது சமூக மதிப்பு முன்பே கட்டமைக்கப்பட்டுவிட்டது. அடுத்த நிலையில் அவனது சமூக மதிப்பை உயர்த்துவது அவனது அதிகாரமாகும். அவன்

சார்ந்திருக்கும் சமூகம் அவனிடம் இதைக் கண்டிப்பாக எதிர் நோக்குகிறது. காட்டாகப் பொருளாதார நிலையில் சமூக மதிப்போடு வாழ்ந்து கொண்டிருக்கும் ஓர் ஆடவனின் மனைவி வேறொரு ஆடவனுடன் பாலியல் நடவடிக்கைகளில் ஈடுபடும் பொழுது பெண்ணுடைய கணவனின் ஆண்மையின் மீது அச்சமூகம் ஐயம் கொள்கிறது.

இதனால் அவனது சமூக மதிப்புக்கு களங்கம் நேர்கிறது. இந்நிலையில் அவனது சமூக மதிப்பை காக்க வேண்டி பெண் வேறொரு ஆடவருடன் தொடர்பு கொள்வது உறுதியாக மறுக்கப்பட்டுள்ளது. சமூக மதிப்புக்கு உடல்ரீதியான ஆண்மை தன்மையும் ஒரு காரணமாக அமைவதால் அதைக்காக்கவும் பெண்ணுக்கு கற்பு வலியுறுத்தப்டுவதைக் காணமுடிகிறது. இந்நிலையில் கணவனின் உடல் மற்றும் சமூக மதிப்பு காக்கப்பட வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகிறது. அக்கால சமூகப் பொருளாதார நடவடிக்கைகளில் எவ்வித ஊறும் ஏற்படா வண்ணம் காக்கும் பொறுப்பு பெண்ணைச் சார்ந்திருந்ததை உணர முடிகிறது.

**சுற்றம் ஓம்பல்**

சுற்றம் ஓம்பல் என்பது அக்கால பொருளாதார நிலையின் தவிர்க்க முடியாத செயலாகும். பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய குடிகள் தங்களது சுற்றங்களுடன் சேர்ந்து வாழ்ந்துள்ளனர்.

*எயினர் குடி, ஆயர் குடி* போன்ற குடிகள் இத்தகைய குடிகளாகும். இவர்கள் சமூகப் படிநிலையில் பின்தங்கியோராவர். இவர்களில் யாருக்கு வெளியே சென்று வேட்டைப் பொருள், பரிசில், விவசாயப் பொருள் எனப் பெற முடிகிறதோ அவர்கள் தங்கள் உழைப்பின் பொருளைத் தமது சுற்றத்தாரோடு பகிர்ந்து, பங்கிட்டு உறவோடு வாழ்ந்து, சுற்றம் ஓம்பல் என சமன்பட்ட வாழ்க்கையை வாழ்ந்திருக்கின்றனர். இச்சுற்றம் ஓம்பல் தலைவியின் வாயிலாகவே நடைபெற்றுள்ளது. அரசியர்க்கு பகிர்ந்தளிக்க வேண்டிய தேவை இல்லை. காரணம் அவர்கள் அதிகார வர்க்கத்தின் குடிகள். பின்வரும் நூற்பாவில் தலைவியின் மாண்புகளைக்

கூறுமிடத்து மகளிர் பகிர்ந்தளிக்கும் பண்புகளோடு வாழ்ந்திருந்தனர் என்பது சுட்டப்படுகிறது.

விருந்து புறந்தருதலும், சுற்றம் ஓம்பலும்,
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்[25]

தொல். 1098. 3 - 4.

சங்க காலத்தில் சுற்றம் எனப்பட்டோர் குறிஞ்சி மற்றும் முல்லை நில மக்களின் இனக்குழு வாழ்வில் இருந்த மக்களைக் குறிக்கலாம். அன்றி மருதநில அரசு குடிமக்களைப் போல் தாய் தந்தை உள்ளிட்ட சுற்றத்தைக் கூறவில்லை.

**விருந்தோம்பல்**

விருந்து என்பது புதுமை என பொருள்படும். விருந்தோம்பல் என்பது புதுமையை கொண்டு வரும் புதியவர்களுக்கு புதுமையான உணவுகளை அளித்து உபசரித்தல் ஆகும். விருந்தோம்பல் சுற்றம் ஓம்புதலில் இருந்து சற்று வேறுபட்டது.

தங்களுக்கு யார் என தெரியாத முன்பின் தெரியாதோருக்கு உணவும் தங்க இடமும் அளிப்பது விருந்தோம்பலில் அடங்குகிறது. இதன் பொறுப்பு பெண்களிடம் அளிக்கப்பட்டது. வீட்டில் ஆண்கள் இருந்தாலும் இல்லாலிருந்தாலும் விருந்தினருக்கு விருந்தளித்தலை பெண்கள் மேற்கொண்டுள்ளனர். இது பெண்களின் இல்லப் பொறுப்புகளில் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதைப் பின்வரும் கூற்று புலப்படுத்துகிறது.

நற்றிணை 266 ஆவது பாடல் தலைவி ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடு வீட்டில் தங்கியிருக்கிறாள் என்று தெளிவுபடுத்தப்படுகிறது. தலைவி தன்னைத்தானே தேற்றிக் கொண்டு தலைவனுடைய வருகைக்காகக் காத்திருத்தல் என்று உரையாசிரியர் இளம்பூரணர் விளக்குவார். தங்கள் கணவர்கள் கேட்டுக் கொண்டதற்கேற்ப, இல்லத்திலிருந்து தாம் ஆற்ற

வேண்டிய நேர்மையான கடமைகளை ஆற்றும் மகளிரின் குணநலம் அது என்று நச்சினார்க்கினியர் விளக்குவார்.[26]

கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 185.

அவர்கள் வீட்டில் தங்கி இருந்ததற்கு காரணம் விருந்தினரை ஓம்புதல் என நச்சினார்க்கினியர் கூறுவதை சுட்டிக்காட்டுகிறார் கார்த்திகேசு சிவதம்பி. அக்கால பொருளாதார நிலையில் உற்பத்தி குறைந்திருந்த இடங்களில் மக்களுக்கு உணவு தேவைப்படுகிறது. அவர்கள் உணவு இல்லாத இரவலர்கள் அன்றி பாணர் உள்ளிட்ட கலைஞர்கள் தம் சுற்றத்தைக் காக்க பரிசில் வேண்டிச் செல்லும் போதும் அவர்களைக் காத்தல் இல்லத்தாரின் கடன் என்ற நிலையில் விருந்தோம்பல் முன்மொழியப்படுகிறது.

தற்கால பொருளாதார நடவடிக்கைகளுள் ஒன்றான பங்கீடு (distribution) என்னும் செயல் அக்கால பொருளாதார அமைப்பில் விருந்தோம்பலாக இருந்துள்ளது என கருதவும் இடம் உள்ளது. உணவு சார்ந்து உழைக்கும் அல்லது உற்பத்தி மேற்கொள்ளும் வாய்ப்பு உடையோர் அது அன்றி வேறு தொழில் புரிவோர்க்கு தங்களது உற்பத்தியைப் பகிர்ந்தளித்தல் மற்றும் அவர்களது சமூகப் பணிக்கு மரியாதை செலுத்தும் முகனாகவும் விருந்தோம்பல் அமைகிறது எனலாம்.

ஏனெனில் பெரும்பாலும் *விருந்து என்பது கலைத்துறையைச் சார்ந்த பாணன் பாடினி விறலியர் கூத்தர் போன்றோருக்கு அளிக்கப்பட்டது* என்பதை ஆற்றுப்படை இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன. இவ்விலக்கியங்கள் அரசனிடம் புலவர்கள் சென்று பாடி பரிசில் பெறுவதை சித்திரிப்பினும் இச்சமூக செயற்பாட்டை மக்களோடு பொருத்தி அறிந்தால் இதன் உண்மை விளங்கும். இவ்வடிப்படையில் விருந்தோம்பல் என்னும் பண்பாட்டு நடவடிக்கையின் உள்புதைந்துள்ள பொருளாதார நடவடிக்கையை அறிகிறோம். இவ்விருந்தோம்பலைப் பெண்கள் முன்னின்று

செய்துள்ளனர். இருப்பினும் பெண்களைப் போன்று ஆடவர் விருந்தளிக்கும் மாண்புகள் விதந்து கூறும் பாடல்கள் இல்லை எனலாம்.

**ஆற்றியிருத்தல்**

ஆற்றியிருத்தல் என்பது இருவர் இணைந்து ஆற்றும் கடன்களை ஒருவர் இல்லாதபோதும் மற்றொருவர் ஆற்றுதல் ஆகும். சங்கஇலக்கியத்தில் தலைவன் தொழில் நிமித்தமோ பிறநிமித்தம் காரணமாகவோ பிரிந்து செல்லும் போதும் தலைவி, தலைவனும் தலைவியும் சேர்ந்திருக்கும் காலத்தில் ஆற்றிய இலலறக் கடன்களை விடாது தனியளாய் ஆற்றுவதாகும். கணவனைப் பிரிந்து பெண்டிர் ஆற்றியிருத்தல் அக்கால பொருளாதார நடவடிக்கைக்கு துணை சேர்க்கும் செயலாகும்.

கல்வி, தூது, போர், பொருள் ஈட்டல் போன்றவற்றின் காரணமாக தலைவனுக்கு பிரிவு நிகழும். தலைமகன் பிரிந்த பொழுது தலைவி அப்பிரிவை ஆற்றியிருக்க வேண்டும். காரணம் பொருளீட்டல் ஆடவரின் கடனாகக் கருதப்பட்டது. தனிமனித பொருளாதார வளர்ச்சி சமூகத்தின் பொருளாதார வளர்ச்சியாகும்.

இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லைத் திணைக்கான உரிப் பொருளாக உள்ளது. பிற நிலங்களிலும் பிரிவின் போது தலைவி ஆற்றியிருக்கிறாள். ஆனால் தொடக்ககால உற்பத்தி முறையில் முல்லை நிலத்தின் தலைமக்கள் பிரிந்திருக்கும் கால அளவு போர் செய்யும் போதும் கால்நடை மேய்ச்சலின் போதும் அதிகம் ஆகையால் இந்நிலத்திற்குரிய உரிப்பொருளாக இருத்தல் வைக்கப்படுகிறது எனக் கருதலாம்.

> முல்லை நிலத்திற்குரிய தொழில்களாக இரண்டினைச் சுட்டலாம். ஒன்று போர் மேற் செல்லுதல். மற்றொன்று கால்நடை மேய்த்தல். இவ்விருவகைத் தொழில்களிலும் போல் மேற் செல்லுதலையே சங்க இலக்கிய முல்லைப் பாடல்கள் முதன்மைப் படுத்தியுள்ளன.

> கால்நடை மேய்த்தலைப் போர் மேற் சென்று திரும்புதலுக்குப் பின்னணியாகவே கொண்டுள்ளன.[27]

அ. செல்வராசு, ஆண் ஆளுமையில் பெண் கற்பு, ப. 8.

என்ற செல்வராசுவின் கூற்றின் மூலம் போரின் கால அளவு தலைவியின் ஆற்றியிருத்தலுக்குக் காணமாகிறது என்பதை அறியமுடிகிறது. தலைவனின் பொருளாதார நடவடிக்கை *போராக* இருக்கும் போது இல்லத்தில் உள்ள பெண்களின் அக நடவடிக்கை ஆற்றியிருத்தல் ஆகிறது. இங்ஙனம் பெண்கள் பொருளாதார நடவடிக்கைக்கு தங்களது பங்கினை ஆற்றியுள்ளனர். கால்நடை மேய்ச்சலின் போதும் முல்லை நில தலைமக்களுக்குப் பிரிவு நிகழ்கிறது. இதுவும் போர் பிரிவு போன்றதொரு நீண்ட பிரிவாக இருந்துள்ளது.

> முல்லைநிலத்திற்குரிய கால்நடை மேய்த்தல் என்ற தொழிலின் அடிப்படையிலும் நீண்ட பிரிவு ஏற்பட வாய்ப்புண்டு. முல்லை நிலத்தில் வறட்சி நிலவும் காலங்களில் கால்நடைகளை மேய்ச்சலுக்காக வேற்று நிலத்திற்கு ஓட்டிச் செல்லுதல் உண்டு. அவ்வாறு ஓட்டிச் செல்லும் கோவலர்கள் குழுவாகச் சேர்ந்து செல்லுதல் உண்டு. கார்காலம் திரும்புவதாக அவர்கள் கூறிச் செல்வர். கார் காலம் மழை பெய்யும் காலம் என்பதால் கால்நடைகளுக்கான தீவனங்கள் அந்நிலத்திலேயே கிடைத்துவிடும். இவ்வாறு செல்லும் கோவலர்கள் ஆறு மாதங்கள் கழித்துத் திரும்பக் கூடும். எனவே இவ்வாறான பிரிவும் நீண்டதாகவே அமைந்துவிடுகிறது.[28]

அ. செல்வராசு, ஆண் ஆளுமையில் பெண் கற்பு, ப. 10.

எல்லா கோவலர்களும் வீடு திரும்பி விட்டனர். இன்னும் என் தலைவனைக் காணவில்லை என தலைவி வருந்துவதன் மூலம் கால்நடை மேய்த்தல் பொருட்டு பிரிவு நிகழ்ந்துள்ளமையை அறியமுடிகிறது. இந்நிலையிலும் இல்லப் பெண்கள் தங்கள் கணவன்

வரும் வரை ஆற்றியிருக்கின்றனர். இங்ஙனம் பொருளாதார நடவடிக்கையின் பொருட்டு பிரிந்து சென்ற தலைவன் வரும்வரை இல்லத்தின் கடமைகளைச் செய்தவாறு ஆற்றியிருப்பது அவளது சமூகக் கடனாக வலியுறுததப்பட்டுள்ளது, முல்லை நிலத்தில் நீண்ட பிரிவுகள் அமைவதால் அத்தகைய சூழல்களில் பெண்கள் வரகு, சாமை என பயிர்த் தொழிலில் ஈடுபட்டிருந்தல் பொருளாதார நடவடிக்கையில் சரிசமமான பங்களிப்பாகும்.

தலைவனைப் பிரிந்து ஆற்றியிருக்கும் பெண்கள் வெளியில் இல்லற கடனாற்றும் இடத்தின் எல்லைகளின் வரையறையை சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

விளங்கு நகர் அடங்கிய கற்பின்
நலம் கேழ் அரிவை புலம்பு அசாவிடவே[29]

குறுந். 338.

நகரத்தைத் தாண்டிச் செல்லாமல் நகருக்குள் அடிங்கிய பெண்கள் எனச் சுட்டுகிறது மேற்கண்ட பாடல் வரிகள்.

மனைமான் கற்பின் வாணுதல் ஒழியக்
கவை முறி இழந்த செந் நிலை[30]

அகம். 33.

மனையைத் தவிர வேறு இடத்திற்குச் செல்லாத ஒளி பொருந்தியை நெற்றியைக் கொண்ட பெண் என்கிறது இப்பாடல். பெண்கள் தலைவனைப் பிரியும் போது அவளுக்கான எல்லைக்குள்ளே இருந்து பருவத்திற்கு ஏற்றவாறு சிறிய அளவாக பயிர் செய்தல், தானியங்களைச் சுத்தம் செய்து சேமித்தல் போன்றவற்றைச் செய்திருக்கிறாள்.

அருங் கடிக் காப்பின், அஞ்சு வரு, மூதூர்த்
திருநகர் அடங்கிய மாசு இல் கற்பின்[31]

அகம்.114.

மூதூரைக் கடந்து வேறு இடங்களுக்கு செல்லாத மாசற்ற கற்பு கொண்ட பெண் எனப் பெண்ணின் கற்போடு அவளது இயங்கும் எல்லையையும் இவ்வரிகள் விளக்கி நிற்கின்றன.

துறை விட்டன்ன தூமயிர் எகினம்
துணையொடு திளைக்கும் காப்புடை வரைப்பில்[32]

அகம். 34.

அன்னப்பறவைகள் விளையாடும் பாதுகாப்புடைய வரைப்பு வரை தலைவி செல்லாம் எனச் சுட்டி தலைவி புழங்கும் இடங்களின் அடிப்படையில் அவளது கற்பு நிலை குறிப்பிடப்பட்டிருப்பதையும், ஒரு குறிப்பபிட்ட இட எல்லைக்குள் கடனாற்றுவதையும் மேற்கண்ட பாடல்வரிகள் புலப்படுத்துகின்றன. கற்பு வாழ்க்கையில் சமூகக் கடன்களும் பொறுப்புகளும் மிகுதியாகவே இருந்துள்ளமை அறியலாம். ஆகவே குறிப்பிட்டதொரு கட்டத்திற்குமேல் தலைவன் தலைவி இருவரும் அவ்வேலைகளைப் பிரித்து செய்தாலொழிய செய்து முடிக்க இயலாது. அங்ஙனம் செய்யாது விடின் இல்லறக் கடன்களிலிருந்து அவர்கள் பிறழ நேரிடும். பொருளாதாரம் கேள்விக்கு உள்ளாக்கப்படும்.

பெரும்பாலும் சங்க இலக்கிய குடும்ப வேலைப் பிரிவினைகளைப் பொறுத்த மட்டில், தலைவன் போர் மேற்சென்று கொணரும் பொருளைப் தலைவி பாதுகாத்து, முறைபடுத்தி, விருந்தோம்பி, சுற்றம் ஓம்பி இல்லறம் காக்க வேண்டும். இன்றேல் குடும்பம் சிதைவுறும். குடும்பம் சிதைவுற்றால் குடும்பச் சொத்து சிதைவுறும். இது சமூகத்தில் பொருளாதார பாதிப்புகளை ஏற்படுத்தும் என்பதால் *ஆற்றியிருத்தல் பெண்களின் கடன் எனக் கூறினர்.*

### வளமையின் குறியீடு

தாய்வழிச் சமூக அமைப்பில் வேட்டை உள்ளிட்ட எல்லா நடவடிக்கைகளிலும் பெண்கள் முன்னின்று நடத்திச் சென்றனர். குழந்தை பேறுருதல் பராமரித்து வளர்த்தல் என சமூகப் பொருளாதார

அமைவில் பெரும்பங்காற்றியவர்கள் பெண்கள். சமூகத்தின் அடுத்த தலைமுறையை பராமரிப்பதும் பெண்களின் பணியானது.

ஆதிப்பொதுவுடமைச் சமூகத்தில் எல்லா நிலைகளிலும் சமூக வளர்ச்சிக்குப் பெண்கள் அடிப்படைப்படையாக இருந்தமையால் அக்காலத்தில் அவர்கள் சமூகத்தின் வளமாக கருதப்பட்டனர். நாளடைவில் வர்க்கச் சமூகம் தோன்றிய பின்னர், ஆண் உடைமைச் சமூகத்தில் பெண், வளமையின் குறியீடாக வைக்கப்பட்டிருக்கிறாள். இதனைப் பின்வரும் கூற்று விளக்குகிறது.

> சமுதாயத் தலைமையைத்தான் பெண்டிரின் தினைப்புனக்காவல் பற்றிய வேளாண் சமுதாயப் பாடல்களும் காட்டுகின்றன. பெண்ணே இன உற்பத்திக்கான முதன்மை ஆதாரம். ஒரு இனத்தின் விருத்தி அவள் மூலமாகவே நடைபெறுகின்றது. எனவே பெண் வளமையின் குறியீடாகவே என்றும் இருக்கிறாள். பெண்ணுக்குப் பயிர்த் தொழிலோடு நெருங்கிய தொடர்பு இருப்பதும் இதனாலயே.[33]

பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், பக். 101 – 102.

தமிழகத்திலும் பழங்குடி இனமக்களின் வாழ்வியலை ஆய்தறிந்தால் இவ்வுண்மையை கண்டறிய இயலும். குறிஞ்சி முல்லை நிலங்களில் நடைபெற்ற வேளாண் செயல்களில் பெண்களின் பங்களிப்பு முக்கியத்துவம் வாய்ந்தது. சமூக வளமைக்கு அடிப்படையாக அமைவது பெண்களின் புனர் உற்பத்தியும் அவர்கள் மேற் கொண்ட வேளாண் உள்ளிட்ட பிற தொழில் நிர்வாகங்களுமாகும். இதனைப் பின்வரும் கூற்று சங்ககால சமூக சூழலில் நின்று விளக்குகிறது.

> குறை வளம் பொருந்திய நிலத்தில் பெண்களே சாகுபடியில் ஈடுபட்டு, ஆண்களுடைய கடினமான விவசாய வேலைகளுக்குத் தோள் கொடுக்கின்றனர். மிகவும் பூர்வ காலத்திற்குரிய பழங்குடிகளின் மத்தியில் ஆண்களுக்கு வேட்டைத் தொழில் எவ்வாறோ அது போலவே கம்புக் கொத்தி, கைகலப்பை

ஆகியவற்றின் உபயோகம்: அதாவது எல்லா விவசாய வேலைகளும் பெண்களுடைய ஏகபோகமாகத் திகழ்ந்தது' (1989 : 81) என டி. டி. கோசாம்பி கூறுவது மேற்காட்டிய தினைப்புனக் காவல் முதலான சங்கச் சமுதாய சூழல்களோடு மிகவும் பொருந்துவதாக உள்ளது. வளமைச் சடங்குள் நடைபெறும் எல்லாச் சூழல்களிலும் (இன்றும் கூட) பெண்களே முதலிடம் பெற்றிருந்தனர் என்பதை உறுதிப்படுத்துகின்றது. புறநானூற்றின் மூதின் முல்லைப் பாடலில் (333) விதைக்கெனப் பாதுகாக்கப்பட்ட தினைக்கதிர்களை உரலிலிட்டுத் தானியமாக்கி உணவு சமைத்த மூதின்முல்லை செயற்பாடு இயல்பு மீறிய ஒன்று. இப்பாடல் விதைத் தினையைத் தெரிவதும் பாதுகாப்பதும் பெண்களின் உரிமையாய் இருந்ததையும் அதை உணவாகச் சமைக்கும் அளவுக்கு அவர்களுக்கு உரிமை இருந்ததையும் காட்டுவதுடன் வேளாண்மை மூதில்மகளிரின் முழுப் பொறுப்பில் நடைபெற்றதற்கும் சான்றாய் உள்ளது.[34]

பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப. 102.

சமூகத்தின் மூத்த பெண்கள் விதைகள் குறித்த அறிவைப் பெற்றும் பாதுகாத்தும் வைத்துள்ளனர். விதை தானியங்கள் விவசாயத்தை முன்னெடுத்துச் செல்லும் பொருட்களாகும். அவை மீண்டும் மீண்டும் விதைத்து மீண்டும் மீண்டும் அறுவடை செய்யப்படும் விவசாயத்தின் அடிஆதாரம் ஆகும். விதை தானியங்கள் மத்திய காலத்தில் (கி.பி. 7 முதல் கி.பி. 9 வரை) கோயில் கலசங்களில் வைத்து பாதுகாக்கப்பட்டது. இத்தகு முக்கியத்துவம் வாய்ந்த தானியங்களைப் பாதுகாக்கும் கடமை பெண்களிடம் இருந்துள்ளது. மேலும் சமூகச் சடங்குகள் பலவற்றிலும் பெண்கள் முதனிலை வகித்துள்ளமை காணக்கிடைக்கின்றது. திருமணச் சடங்கிற்கு பின்வரும் பாடல் சான்றாக;

உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்

தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிருள் அகன்று கவின் பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென
வுச்சிக் குடந்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறை முறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
"கற்பினின் வாழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
"பேரில் கிழத்தி யாகென" தமர் தர[35]

அகம். 1 -19.

திருமணத்திற்கு அனைவருக்கும் பொங்கல் உணவாகக் கொடுக்கபட்டுள்ளது. பந்தல் அமைக்கப்பட்டிருந்தது. பந்தலின் கீழ் புது மணல் பரப்பப்பட்டு, மாலைகள் தொடங்கவிடப்பட்டு, விளக்கேற்றப்பட்டிருந்தது. உரோகிணியோடு திங்கள் கூடிய நல்ல நாளில் திருமணம் நடத்தப் பெற்றுள்ளது. முது பெண்டிர் திருமணத்தை நடத்தினர். புதல்வரைப் பெற்ற பெண்கள் நெல்லும் மலரும் தூவி மணப் பெண்ணை வாழ்த்தினர். சிறப்பான குடும்பத் தலைவியாக வாழ வேண்டும் என வாழ்த்தியுள்ளனர். திருமணச் சடங்குகளில் பெண்கள் சிறப்பிடம் பெற்றுள்ளனர். புதல்வரைப் பெறுதல் என்பது புனர் உற்பத்திக்கு அடிப்படையாதலால் அதற்கு காரணமாகிய பெண்கள் வளமையின் குறியீடாகக் கருதப்பட்டு இத்தகைய சங்குகள் மேற்கொள்ளப் பட்டதை சங்கப்பாடல்கள் சுட்டி விளக்குகின்றன.

வேளாண் சடங்குகள், திருமணச் சடங்குகள், பூப்புச் சடங்குகள் எல்லாம் பெண்களை முன்னிறுத்தி இன்றும் செய்யப்படுகின்றன. இவை எல்லாம் வளத்திற்கு அடிப்படைனவை. ஆகையால் இன்றும் இது போன்ற சடங்குகளில் பெண்கள் முதலிடம் பெறுகின்றனர். இவ்வகையில் சமூகத்தில் சடங்கு நடவடிக்கைகளில் பங்கு கொண்டு பெண்கள் சமூகத்தின் கலாச்சார வளமைக்கு ஆதாரமாகவும் சமூக வளமையாகவும் அமைகின்றனர்.

**வழிபாட்டில் பெண்கள்**

வழிபாடு என்பது பொருளாதார நடவடிக்கையின் மேல் எழும்பி நிற்கும் ஓர் கலாச்சார நடவடிக்கை ஆகும். இவ்வழிபாடு உற்பத்தியை மேற்கொள்ளும் தொடக்க நிலையிலும் உற்பத்தி முடிந்த பின்னர் அதனை போற்றும் விதமாகவும் அமைகின்றது. இன்றும் விவசாயம் முதற்கொண்ட தொழிலில் இதனை காணமுடிகிறது. பொங்கல் போன்ற பண்டிகைகளும் இவ்வுழைப்பு நடவடிக்கையின் ஒரு பாகம் ஆகும்.

செறி தொடி முன்கை கூப்பி, செவ்வேள்
வெறி ஆடு மகளிரொடு செறியத் தாஅய்[36]

பட்டினப். 154 – 155.

தொடக்க காலத்தில் வேட்டையில் அம்பு பிழைத்த போதும் மழை தேவைபட்ட போதும் வழிபாடு மேற்கொள்ளப்பட்டது. மழையின் தேவை முடிந்த போது மழையை நிறுத்தவும் வழிபாடு நடத்தப்பட்டுள்ளது. இவ்வழிபாட்டில் பெண்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். வழிபடு பொருட்களில் அந்தந்த நிலங்களின் அடிப்படை உணவுப் பொருட்கள் இடம் பெற்றிருந்தன.

மாண்தலைக் கொடியொடு மண்ணி அமைவர,
யெள்யோடு ஐயவி அப்பி, ஐதுஉரைத்து,
குந்தம் பட்டு, கொழுமலர் சிதறி,
முரண்கொள் உருவின் இரண்டுஉடன் உடீஇ,
செந்நூல் யாத்து, வெண்பொரி சிதறி,

மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
சில்பலிச் செய்து, பல்பிரப்பு இரீஇ,
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்து,
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணைஅற அறுத்துத் தூங்க நாற்றி,
நளிமலைச் சிலம்பில் நல்நகர் வாழ்த்தி[37]

திருமுருகு, 227 - 238.

இத்தகைய வழிபாடுகள் உற்பத்திக்குத் துணை நின்றன. உற்பத்திக்கான அக ஊக்கத்தை வழங்கின. முதன் முதலில் இவ்வழிபாடுகளைப் பெண்கள் மேற்கொண்டனர். காலப்போக்கில் ஆண்களும் வழிபாட்டு சடங்குகளை நடத்தியுள்ளனர். பெண்களின் நோய்களுக்கான வெறியாட்டு நிகழ்வின்போதும் பிற வெறியாட்டுகளிலும் ஆண்கள் இந்நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளனர். ஆனால் உற்பத்தி தொடர்பான வழிபாடுகளில் பெண்களின் பங்களிப்பு இன்றியமையாதது. விவசாயச் சடங்குகளில் உழுதல் முதல் அறுவடை வரையுள்ள சடங்குகளில் பெண்கள் முக்கியத்துவம் பெறுகின்றனர்.

## மந்திரச் சடங்குகளில் பெண்கள்

தொடக்க கால மனிதனின் கலை நடவடிக்கைகளுள் ஒன்று மந்திரம். மனிதன் உலகைப் புரிந்து கொள்ளும் முயற்சிகளில் இதுவும் ஒன்று. அக்கால மக்களிடையே இது பரவலாகக் காணப்பட்டது. இதற்கான சான்றுகள் உலகம் முழுமையிலும் உள்ள புராதன மக்கள் சமுதாயங்களில் இருக்கின்றன. இதனைப் புரிந்து கொள்ளும் விதத்தைப் பின்வருமாறு விளக்குகிறார் `காட்வெல்'.

பொருளாதார வளர்ச்சியினால் மனிதன் யதார்த்தம் பற்றி அதிகமாக அறிந்து கொள்ள, மந்திரம் தெளிவுள்ளதாகவும், விரிவான அலுவல்களை மேற்கொள்வதற்காகவும் மாறுகிறது. அனுபவத்தின் காரணமாகத் திருத்தப்படுகிறது. அது வினோதமான வாய்ப்புகளை

அளிக்கிறது. அதனை மனிதன் பயன்படுத்துகிறான். ஆனால் இவற்றை மந்திரத்தின் மூலமாகப் பெறுவதில்லை. பழங்கால வெறியாடுபவனின் (ஷாமன்) முட்டாள்தனமான இலக்குகள், ரசவாதியின் நிறைவேற்ற முடியாத நம்பிக்கை இல்லாவிட்டால் இவற்றை நிறைவேற்றும் வேதியியல் இடம் பெற்றிருக்காது. மந்திரவாதி விதியிடம் மாற்ற முடியாத நிர்ணயவாதத்திடம் தோற்றுவிடுகிறான். இதனைத் துல்லியமாக உணர்ந்த பின்னர்தான், மந்திரம் விஞ்ஞானமாக மாறிய பின்புதான், அது செய்வது போன்று தோன்றியவற்றை, விஞ்ஞானத்தின் மூலம் மனிதனால் செய்ய முடிகிறது.[38]

கிறிஸ்டோபர் காட்வெல், கானலும் உண்மையும், ப. 24.

விஞ்ஞானத்தின் தோற்றுவாயாக மந்திரம் இருந்துள்ளதை காட்வெல் விளக்குகிறார். மந்திரம் படிப்படியாக வளர்ச்சி அடைந்து இன்றைய விஞ்ஞான நிலையை அடைந்துள்ளமை புலனாகிறது. காட்வெல் சுட்டும் வெறியாட்டம் சங்க இலக்கியத்திலும் பல இடங்களிலும் காணப்படுகிறது. இது ஒரு மந்திர நிலையாகும். தொடக்கத்தில் சமூக மக்கள் அனைவராலும் மேற்கொள்ளப்பட்ட இந்நிகழ்ச்சிகள் நாளடைவில் ஒரு வேலைப் பிரிவினையாக ஒரு குறிப்பிட்ட நபர்கள் மேற்கொள்வதாக மாற்றம் கண்டன.

இந்நிகழ்வு ஆண்கள் மற்றும் பெண்கள் ஆகிய இருவராலும் மேற்கொள்ளப்பட்டன. பின்வரும் புறநானூற்றுப் பாடல் அடிகள் குறமகளிர் மழை வேண்டியும், மழை நிற்கவும் மந்திரம் செய்துள்ளமையை அறியமுடிகிறது.

மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்
புனைத்தினை யயிலு நாட[39]

புறம். 143. 1-5.

மந்திரத்தால் அக்கால மக்களின் அக மனம் ஒரு உணர்வில் ஒன்றுபட உதவியுள்ளது. இதனை அறியாமை எனக் கூறமுடியாது. விஞ்ஞான வளர்ச்சியின் தோற்றுவாய் எனக்கருதலாம். இத்தோற்றுவாய் இல்லை எனில் சமகாலத்தில் காணப்படும் விஞ்ஞானத்தின் மேம்பட்ட வளர்ச்சி இல்லை என்கிறது காட்வெல்லின் ஆய்வு. மனம் சார்ந்த நிலையில் மந்திரம் வேலை செய்வதை விளக்குகிறார் மாதையன்.

"மந்திரம் (magic) வெறும் அறியாமை எனல் தவறு. அது மனோதத்துவ வகையில் செயலுக்கு வழிகாட்டியாயிற்று. *ஆரம்ப கால விவசாயத்திற்கு இன்றியமையாததாயிற்று. தொடக்க காலத்தில் பெண் பயிர்த் தொழிலை ஆரம்பித்ததால் பெண்ணிற்கு முதலிடம் அளிக்கப் பெற்றது. மழைவளம் ஆகியவற்றை வேண்டிச் செய்யப்படும் சடங்குகளில் அக்காலத்தில் பெண்கள் முதலிடம் பெற்றது இதனாலேயே எனலாம்.*

பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், பக். 101.[40]

மனோதத்துவ முறையில் வேலை செய்யும் மந்திரத்தைக் கையாண்டவர் பெண்கள் என்பது புலனாகிறது. தொடக்க கால விவசாயத்தில் முதல்நிலை வகித்தோர் பெண்கள் என்பதால் அது சார்ந்த சடங்குகளிலும் முதல் நிலை வகித்தோர் பெண்களாவர்.

பயிர்த் தொழில் நடவடிக்கைகளை உற்று நோக்கவும் அவற்றின் வேறுபாடுகளை உய்த்துணரவும் இம்மந்திர முறைகள் அக்கால மக்களுக்கு உதவியுள்ளன. இதில் பெண்களின் பங்களிப்பும் அதிக அளவில் இருந்துள்ளதை அறியமுடிகிறது.

**போர்**

சங்க காலத்தில் இனக்குழுக்களுக்கு இடையில் போர் நிகழ்ந்துள்ளது. பல வருடங்கள் இனக்குழுக்கள் தங்களுக்குள் போரிட்டு ஒன்றை ஒன்று வெற்றி கொண்டு ஒன்றுடன் ஒன்று இணைந்து குலங்களாக வளர்ந்துள்ளன. இக்குலங்களுக்கு இடையிலும் போர் நடைபெற்றுள்ளது. குலங்கள் இணைந்து பேரரசுகள் உருவான பின்பும்

போர் நடைபெற்றுள்ளது. இவை அனைத்திற்கும் சங்க இலக்கியத்தில் சான்றுகள் உள்ளன.

வெட்சித்திணை பகைவருடைய ஆநிரைகளைக் கவர்தலாகிய ஒழுக்கத்தையும். கரந்தைத் திணை அங்ஙனம் பகைவரானே கவர்ந்து கொண்டு போகப்பட்ட நிரைகளை, அவற்றிற்கு உரியவர் மீட்டலையும் உணர்த்துவன

வஞ்சித்திணை பகைவரது நாட்டைக் கவர்தலை நினைந்து போர் செய்தற்கு மேற்செல்லலாகிய ஒழுக்கத்தையும், காஞ்சித்திணை அங்ஙனம் வந்த பகைவர்க்கு எதிர்சென்று அவரது முயற்சியைத் தடுத்தலையும் உணர்த்துவன.

நொச்சித்திணை பகைவருக்கு எதிராக தம்முடைய மதிலைக் காத்து நிற்றலையும், உழிஞைத்திணை பகைவரது மதிலைச் சுற்றி வளைத்துக் கொண்டு, காத்து நிற்கும் நொச்சியாளரை வெற்றி கொள்ளலையும் உணர்த்துவன.

தும்பைத்திணை தம்முடைய பேராண்மையின் மிகுதிப்பாடு தோன்றப் பகைவரொடு போரிடுதலையும், வாகைத் திணை போரின்கண் வெற்றி பெற்றுச் சிறத்தலையும் உணர்த்துவன.

பாடாண்திணை ஒருவனுடைய கீர்த்தி கொடை வலிமை தண்ணளி ஆகியவற்றை ஆராய்ந்து சொல்லிப் பாடுதலைக் குறிப்பது.

பொதுவியல் முற்கூறியவற்றுக்கெல்லாம் பொதுவாயுள்ளனவாக, அவற்றுள் கூறப்படாதொழிந்தனவற்றைக் கூறிச் செல்வது.

பெருந்திணை ஆண்பாற் கூற்று, இருபாற் பெருந்திணையென்னும் பகுப்புகளோடு இயங்கும் பொருந்தாக் காமத்தினது ஒழுக்கத்தையும் ஒழிவு பாடாண் பகுதியிலும் வாகையிலும் கூறப்படாதொழிந்த புறத் துறைச் செய்திகளையும் உணர்த்துவன.

புலியூர்க்கேசிகன், புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும், ப.IV–V.[41]

ஆநிரை கவர்தல் ஆநிரை மீட்டல் என்பவை குலங்களுக்கு இடையிலான போர்களாகும். தாய்வழிச் சமூகத்தில் பெண் முன்னணியில் நின்று வேட்டையையும் குழுக்களுக்கு இடையிலான சண்டைகளையும் நடத்தியுள்ளாள். அதன் தொடர்ச்சியாக சங்க கால பெண்கள் உணர்வில் போர் மிகப் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. போருக்கு ஆண்களைத் தயார் செய்யும் பணிகளையும் பெண்கள் செய்துள்ளனர்.

**வீரமூட்டுதல்**

பிள்ளைகள் தாயை முன்னிறுத்தி அழைக்கப்பட்டுள்ளமையை சங்க இலக்கியப் பாடல்கள் காட்டுகின்றன. குறிப்பாக வீர மகன்கள் தாயரை முன்னிறுத்தி அழைக்கப்பட்டனர். இது குழந்தைகளுக்கு வீரம் சார்ந்த உணர்வுகளை ஊட்டுவது தாய் என்பதை நிரூபிக்கிறது. பின்வரும் சங்கப்பாடலடிகள் குழந்தைகள் தாயினையொட்டி அழைக்கப்படுவதை சுட்டுகின்றன.

> இவர்கள் [பெண்கள்] புராதன தமிழ்ச் சமூகத்தில் தலைமை ஏற்றிருந்தனர். தாய்வழியாகவே குலத்தொடர்ச்சியும் வம்சாவளியும் குறிக்கப்பெற்றன. பின்வரும் சான்றுகள் மிக முக்கியமானவையாகும்.
>
> சிறுவர்தாயே பேரிற் பெண்டே[42] (புறம். 270)
>
> செம்முது பெண்டின் காதலஞ்சிறா அன்[43] (புறம். 276)
>
> வானரைக் கூந்தல் முதியோள் சிறுவன்[44] (புறம். 277)
>
> முளரிமருங்கின் முதியோள் சிறுவன்[45] (புறம். 278)
>
> என்மகள் ஒருத்தியும் பிறள்மகன் ஒருனும்[46] (பா. கலி. 8)[47]
>
> பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 51.

என தாயை முன்னிறுத்தி பிள்ளைகள் அழைக்கப்படும் நிலையைத் தொகுத்து உரைக்கிறார் பக்தவத்சல பாரதி. அதன்வழி முந்தைய தாய்வழிச் சமூகத்தை அவர் நிறுவிச் செல்கிறார்.

குழந்தை இறந்து பிறப்பினும் அல்லது பிறந்து இறப்பினும் அதனை வாளால் கீறி புதைக்கும் பழக்கத்தைச் சங்கப்பாடல் காட்டுகின்றது. இச்செயல் அச்சமூகம் போர்ப் பொருளாதாரத்துக்கு அளித்த முக்கியத்துவதைக் கூறுகிறது. பெண்களும் அப் பொருளாதார நிலைக்குள் நின்று அதற்கு கடமையாற்றும் வண்ணம் பிள்ளைகளை வளர்த்துள்ளனர். பின்வரும் கூற்று வீர மக்களை உருவாக்குதல் பெண்களின் கடன் என்பதற்கு சான்றாக அமைகிறது.

> கலைந்து போய் நரைத்துப் போன கேசத்தையுடைய முதுமகளின் இளைய வீர மகன், பகைவர் படையை அழிப்பதற்குத் தோன்றியவன்; அவன் குடத்துப் பாலுள் சொட்டு மோர் போன்றவன். "அம்முதுமகள்" (அக்குடியைச் சேர்ந்த இன்னொருத்தி) தன் மகன் போர்க்களத்தே ஒரு களிற்றோடு பொருது இறந்து பட்டான் என்று கேட்ட பொழுது அவனை ஈன்ற ஞான்றிலும் பெரிதுவந்தாள்; அவள் அப்போது சிந்திய இன்பக் கண்ணீர் வெதிர மலைமீது பெய்த மழைத்துளிகளை விட மிகுந்தது. வீரக்குலத்தாய் ஒருத்தி தனக்கேயுரிய மனோநிலையில் கூறுவது. "போருக்குச் சென்ற தனது மகன் களத்தினின்றும் கோழைத்தனமாகப் புறங்காட்டி ஓடிவிட்டான் என்று கேள்வியுற்று அவள் அவனுக்குப் பாலூட்டிய தனது மார்பகத்தை அறுத்து எறிந்து விடுவதாகச் சூளுரைத்துப் போர்க்களம் நோக்கி ஓடினாள்; ஆனால் அக்களத்தே தனது மகனுடைய உடலத்தைக் கண்ட போது அவள் அவனைப் பெற்ற போதிலும் மிகுந்த மகிழ்வெய்தினாள்.[48]

ந. சுப்பிரமண்யன், சங்ககால வாழ்வியல், பக். 166 – 167.

வீரம் உணர்வு பல நிலைகளில் அக்கால பெண்களிடம் வெளிப்பட்டுள்ளது. வீரத்தை பாடலாகப் பாடி அதன் வழி வீரத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்திய நிலையும் புலப்படுகிறது. வள்ளைப் பாட்டு என்றொரு பாடல் வகையில் *பெண்கள் வீரர்களைப் புகழ்ந்து பாடியுள்ளனர். இப்பாடலுக்கு உலக்கைப்பாட்டு புகழ்ப்பாட்டு என்னும்*

*வேறு பெயர்களும் உண்டு.* சங்க இலக்கிய சமூகத்தில் வீரர்கள் விரும்பும் புகழின் முக்கியத்துவம் மற்றும் குறித்து கைலாசபதி பின்வருமாறு கூறுகிறார்.

> புகழையும் அதன்வழி மதிப்பையும் ஒரு வீரன் ஈட்டியாக வேண்டும். இதில் அவனுக்குக் குடிப்பிறப்பு, அதிகாரம், செல்வம் போன்ற வாய்ப்புகள் இருந்தன என்பதில் ஐயமில்லை. எனினும் அவன் சமூகத்தின் பார்வையில் தன்னை மெய்பித்துக் கொள்ள வேண்டும். இதன் விளைவாக மதிப்பு, புகழ் ஆகியவற்றோடு தொடர்புடைய எண்ணம் மீண்டும் மீண்டும் உண்டாகும். அது போர் வீரர்கள் தம் புகழை நிறுவிக் கொள்ளுதற்குரிய முயற்சியை உண்டாக்கும்.[49]

க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப. 324.

போரில் இறந்தோர் இறந்த பின்னும் மக்களின் நினைவில் நிற்க வேண்டும் என்பதற்காக போரின் மூலம் கிடைக்கும் இறப்பை வேண்டுகின்றனர். இவ்வண்ணம் இறந்தால் புலவர்களால் போற்றி புகழப்படுவர். அது இறப்பை வெல்லுவதற்கான வழியாக கருதப்பட்டது. *போரில் அல்லாமல் ஒரு ஆண்மகன் இறப்பை எய்தினால் அவன் சொர்க்கம் புகமாட்டான் என்னும் கருத்தோட்டம் அக்கால மக்களிடை காணப்பட்டது. இயற்கை மரணம் எய்தியோரை வாளால் கீறி அந்தணர்களை வைத்து சடங்கு நடத்தி இறந்தோர் சொர்க்கத்திற்கு செல்ல உதவுமாறு கடவுளை வேண்டிய செய்தியையும் சங்க இலக்கியத்தில் உள்ளது.*

## நடுகல்

நடுகல் என்பது முதன் முதலில் வீரமரணம் எய்தவரின் நினைவாக நட்டு வைக்கப்படும் அடையாள கற்கள் ஆகும். முதன் முதலில் விலங்குகளுடன் போராடி மரணம் எய்த ஓர் கணவாழ்வைச் சார்ந்த பெண்ணுக்கோ ஆணுக்கோ நடுகல் நட்டு வைக்கும் வழக்கம் தோன்றியிருக்கலாம். வீரமூட்டும் பெண்களின் கூற்றுகளில்

குறிப்பிடத்தக்க ஒன்று, நடுகல் குறித்த செய்தியைத் தம் பிள்ளைகளுக்குக் கூறி அவர்களைப் போருக்குத் தயார் செய்தலாகும்.

பின்னர் வர்க்கங்கள் தோன்றி ஓர் இனக்குழு சேமித்த ஆநிரைகளையோ அவர்களது இதர பயன்பாட்டுப் பொருட்களையோ சண்டையிட்டு பறிக்கும்போது *உயிர்விடும் பிறிதோர் இனக்குழுவைச் சார்ந்த ஒருவருக்கும் நடுகல் வைப்பது தொடர்ந்திருக்கலாம்*. பின்னர் தோன்றிய, வேந்தர்களின் போர்களின்போது வீரர்கள் என்றென்றும் மக்கள் மனதில் நீங்காமல் இருக்க வேண்டும் என்பதற்காக அப்போரில் இறந்துபட்டோருக்கு நடுகல் வைக்கும் பழக்கம் பின்பற்றப்பட்டுள்ளது. *இந்நடுகற்களே பிற்காலத்தில் சிலைகளாக உருமாற்றம் அடைகின்றன.* பின்வரும் புறநானூற்றுப் பாடல் நடுகல்லை மட்டும் வணங்கும் சமூகம் இருந்துள்ளதைச் சுட்டுகிறது.

ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிரேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்ததெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே[50]

புறம். 335. 9 - 12.

*நடுகல்லைக் கடவுளாகக் கருதி வணங்குவதைத் தவிர்த்து வேறு எந்த கடவுளையும் வணங்குவதில்லை எனப் பாடுகிறார் மாங்குடிகிழார்.* சங்க இலக்கியத்தில் இது போன்ற நடுகல் பற்றிய குறிப்புகள் உள்ளன. பெண்கள் நடுகல்லில் தங்கள் இல்லைத்தைச் சேர்ந்தோர் இடம் பெறுவதைக் பெருமையாகக் கருத்தியுள்ளனர். தொல்காப்பியம் நடுகல் குறித்த செய்திகள் இலக்கியங்களில் அமைய வேண்டிய விதத்தைக் கூறும்போது, *கல்லைத் தேடுதல், நல்ல நேரம் குறித்தல், கல் நீராட்டு, கல்லை நிறுவுதல், கொண்டாட்டம், விருந்து பிற வாழ்த்து வழிபாடு என்னும் படிநிலைகளைக் கூறுகின்றது*. இதன்மூலம் அக்கால சமூகம் நடுகல் நடுதலில் குறிப்பிட்ட வழிமுறைகளைப் பின்பற்றியுள்ளமையை அறியமுடிகிறது.

தமிழர்கள் நடுகல் (நடப்பட்ட கல் என்னும் பொருளது) என்னும் நிலையைப் போற்றினர். அதனை வீரக்கல் என்றும் குறிப்பர். போரில்பட்ட வீரர்களின் பெருமைக்காக ஒரு நினைவுக்கல் அல்லது சமாதி நிறுவப்பெறும். அது ஒரு எளிய சாதாரணக்கல்; சாலையோரமாக ஒரு கல்லைப் போல நடப்பட்டது; அதன்மீது இறந்துபட்ட வீரனது பெயர் பொறிக்கப்பட்டது. மயிற் பீலிகள் அதன்மீது செருகப்பட்டன; மாலைகள் இடப்பட்டன. போரில் பட்ட ஒவ்வொரு முக்கியமான வீரனும் இத்தகைய நினைவுச் சமாதியைப் பெற்றனன். மறக்குடி மகள் ஒருத்தி கீழ்காணுமாறு பெருமையோடு கூறினாள். "என் தந்தை நடுகல்லாக நின்றனன்; என் கணவர் போரில் வீழ்ந்தனன். என் சகோதரர்கள் போரிட்டுக் கொண்டே மடிந்தனர்; என் மகன் (அம்பால் புண்பட்டு) பகையரசரோடு சண்டை செய்து இறந்தான்.[51]

ந. சுப்பிரமண்யன், சங்ககால வாழ்வியல், ப. 171.

எனக் கூறுவதைச் சுட்டிக்காட்டுகிறார். சங்க இலக்கியத்தில் பல நிலைகளில் நடுகற்கள் குறித்த தரவுகள் கிடைக்கின்றன. குறிப்பாக பெண்கள் தங்களது பேச்சு வழக்கில் தங்கள் குடும்பத்தில் போரில் இறந்து நடுகல் நடப்பட்டவரை புகழ்ந்து பெருமையடைகின்றனர். பின்வரும் மலை படு கடாம் பாடல் ஒன்று நடுகலின் பெருமையை விளக்குவதாக அமைந்துள்ளது.

ஒன்னார்த் தெவ்வர் உலைவு இடத்து ஆர்த்தென
நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்
செல்லா இல்இசைப் பெயரொடு நட்ட
கல் ஏசு கவலை எண்ணு மிகப் பலவே
இன்புறு முரற்கை நும்பாட்டு விருப்பு ஆக,
தொன்று ஒழுகு மரபின் நும் மருப்பு இகுத்துத் துனைமின்
பண்டு நற்கு அறியாப் புலம் பெயர் புதுவிர்
சந்து நீவிப் புல் முடிந்து இடுமின்
செல்லும் தேஎத்து, பெயர் மருங்கு அறிமார்,

கல் எறிந்து, எழுதிய நல் அரை மராஅத்த
கடவுள் ஓங்கிய காடு ஏசு கவலை[52]

மலை. 386 – 396.

போரில் புறமுதுகிட்டு ஓடிய பகைவரைக் கண்டு எதிரிகள் ஆரவாரிக்க அவர்களின் ஆரவாரத்தை இகழ்ச்சி எனக் கருதி திரும்பி வந்து போரிட்டு மடிந்த போர் வீரர்களுக்கு நடுகற்கள் நடப்பட்டதைச் சுட்டுகிறது மேற்கண்ட பாடல். அங்ஙனம் *நடப்பட்ட கற்கள் புறமுதுக்கிட்டு ஓடிப் பிழைத்தோரின் இகழ்வை தாங்கி நிற்கின்றன* என்றும் அப்பாடல் விளக்குகிறது. நடுகல் முறையின் தோற்றத்தைப் பின்வருமாறு விளக்குகிறார் கைலாசபதி.

வீர வணக்கமானது, திடீரெனத் தோன்றியதொன்றன்று. புராதனத் தமிழ் மக்களிடையே நிலவிய வேறு பல நம்பிக்கைகளுக்கும் இதற்கும் தொடர்புண்டு என நாம் நம்பலாம். பொதுவாகவே இறந்தவர்களுக்குச் செய்யும் இறுதிச் சடங்குகள் வீர வணக்கம் தோன்றிய விளை நிலமாகும்.[53]

க. கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 35.

இதே போன்று வீரயுக காலத்தில் தமிழகத்தைப் போன்று கிரேக்கத்திலும் புகழ் விருப்பம் அதிகமாக இருந்ததைக் காணமுடிகிறது.

*கிரேக்க இலக்கியத்தில் பெனிலோபால் என்னும் பெண் தனான்களில் மிகச் சிறந்த சிங்கம் போன்ற வலிமை வாய்ந்த என் கணவனை நான் இழந்தேன். ஆனால் அவன் புகழ் ஹெல்லாங் முதல் அர்கோசின் மத்திய பகுதிவரை அகலப் பரந்திருந்தது எனக் கூறுகிறாள். இதன் மூலம் பெனிலோபால் போரில் இறந்து பட்ட தன் கணவனின் புகழை எண்ணி பெருமையடைவதைக் காணமுடிகிறது.* உலகம் முழுதிலும் பெண்கள் போரில் உயிர் இழந்ததை எண்ணி பெருமை அடைந்துள்ளனர். இப்பெருமிதம் அச்சமூகத்தில் போரின் மூலம் பெருகிய பொருளாதார வளமையைப் போற்றி அப்பொருளாதாரத்துக்கு

(போர்ப் பொருளாதாரம்) பெண்கள் உறுதுணையாக நின்றனர் என்பதைக் காட்டுகிறது.

**குடியும் சாதியும்**

சங்க காலத்தின் தொடக்கத்தில் மக்கள் குடிகளாக வாழ்ந்தனர். குடிகளுக்குள் பெண்களைக் கொடுத்தலும் கொள்ளலும் இயல்பாக இருந்துள்ளது. இங்ஙனம் ஒரு குழுவிற்குள்ளாகவோ அல்லது ஒரு தொழில் செய்யும் மக்களுக்குள்ளாகவோ திருமணம் செய்து கொள்வது அகமணமுறை எனப்படுகிறது. அரசர்கள் பிற குடிப்பெண்களை மணம் முடித்துள்ளனர். செல்வ நிலைக்கு முக்கியத்துவம் அளித்து பிற குடிப் பெண்களையும் மண முடித்துள்ளனர் வேந்தர்கள். பிராமணர்களின் வருகை அகமணமுறையை ஊக்குவித்தது. இதனால் பெண்கள் அந்தந்த குடிகளுக்கு உள்ளேயே மணம் செய்யும் வழக்கம் உருவானது. இதனை பக்தவத்சல பாரதி பின்வருமாறு விளக்குகிறார்.

> குறவர்குடி, எயினர்குடி, கானவர்குடி, ஆயர்குடி, இடையர்குடி, பரதவர் குடி, உமணர் குடி, பாண்சமூகத்திற்குரிய 16 வகையான குடிகள் (பாணர், பொருநர், வயிரியர், துடியர், கிணைவர், அகவுநர் போன்றவர்கள்) முதலான இன்னும் பல்வேறு குடியினரும் குடி அமைப்புடைய சமூகமாகக் காணப்பட்டார்கள். இதன் பின்னர் பிராமணர்கள் முன்னெடுத்த அகமண முறையை மற்ற குடிகளும் தழுவத் தொடங்கியதால் குடி என்பது சாதியாக உருமாறியது. சாதிகளின் தோற்றத்திற்கு அகமண உருவாக்கமே முதன்மையான காரணமாக அமைந்தது.[54]

பக்தவத்சல பாரதி, தமிழகப் பழங்குடிகள், ப.187.

பெண்கள் குழந்தை பேற்றுக்கு ஆதாரமானவள். வர்க்கங்களின் வளர்ச்சியில் மோதல்கள் ஏற்பட்ட போது பெண்கள் தத்தமது வர்க்கத்தை விரிவாக்க அகமணமுறைக்கு உட்படுத்தப்பட்டுள்ளனர். பிற குடிகளுடன் மணஉறவு கொள்ளும் போது செல்வம் இங்கும் அங்கும் இடம் மாறுவதைத் தடுத்துத் தத்தமது குடிக்குள்ளேயே செல்வத்தை வளர்க்க

பெண்களைப் பிற குடிகளுக்கு மணமுடித்தலைத் தவிர்த்தனர். நாளடைவில் இது சாதி உருவாக்கத்திற்கு அடிப்படையாக அமைகிறது.

**நிலப்பரப்பு விரிவாக்கத்தில் பெண்கள்**

திருமணத்தின் போது பெண்களுக்குச் சீதனம் கொடுக்கும் வழக்கம், திருமணம் என்பது தொடங்கிய காலத்திலிருந்தே தொடங்கி இருக்கலாம். சங்க காலத்தில் எழுதப்பட்ட சான்றுகள் உள்ளன. *தொடக்க காலத்தில் பெண் வீட்டுக்குப் பொருள் கொடுத்து மணம் முடித்த செய்தியும் உள்ளது.*

உடைமைச் சமூகம் உருவாகி விட்டபின் தத்தமது பொருளாதார நிலைக்கு ஏற்ப பெண்களுக்குச் சீதனம் கொடுக்கப்பட்டது. வர்க்க சமூகத்தின் வளர்ச்சி நிலை காரணமாக பெண் வீட்டார் பொருள் கொடுத்தல் பரவலாக்கம் அடைந்துள்ளது.

*பெண்ணைத் திருமணம் முடிப்போருக்கு நிலம் வழங்கப்பட்டது.* அரசர்கள் மத்தியில் இது பெரிய அளவிலான நிலப்பரப்பைக் கொண்டிருந்தது. நிலப் பிரபுத்துவ வளர்ச்சியில் இந்நிலை முக்கியத்துவம் வாய்ந்ததாகும். *போரும் திருமணமும் நிலப்பரப்பு விரிவாக்கத்தில் முக்கியத்துவம் வகித்ததை பின்வரும் வானமாமலையின் கூற்றில் அறியலாம்.* பொருளாதார உயர்வு மேம்படல் என்பதே விவாகத்தின் உட்பொருளாக உள்ளதை அறியலாம்.

> நிலவுடைமை சமுதாய அமைப்பில் அரசர்களுக்கிடையில் நடைபெற்ற திருமணங்கள் மூலமாகவும், பெரும் போர்கள் மூலமாகவும் சாம்ராஜ்யங்கள் விஸ்தரிக்கப்பட்டதற்கு இந்திய இலக்கியங்கள் சான்று தருகின்றன. சந்திர குப்த மௌரியன், கரிகாலன், ராஜராஜசோழன் போன்றோர் போர்களின் வெற்றியின் மூலம் நிலவுடைமை அமைப்பை நிலைநாட்டினர். திருமணங்கள் மூலம் ஆட்சி விஸ்தரிக்கப்பட்டதற்கு சீவக சிந்தாமணி போன்ற நூல்களும் பிற இலக்கியங்களும் சான்று பகர்கின்றன.[55]

நா. வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்ளை, ப. 31.

நில விரிவாக்கத்திற்காக திருமணம் நடைபெற்றமை வேந்தர்களின் பிற்கால நடைமுறையாக கொள்ளலாம். சங்க இலக்கியத்தின் மகட்பாற் காஞ்சி பாடல்களை இதன் தொடக்க நிலையாக கருதலாம். மேலும், மகட்பாற் காஞ்சி பாடல்களில் பெரும்பாண்மையும் முதுகுடி மன்னர்கள் காட்டப்படுகின்றனர். இவர்கள் மருத வயல்களுக்குச் சொந்தக்காரராவர்.

நலம்சால் விழுப்பொருள் பணிந்துவந்து கொடுப்பினும்,
புரையர் அல்லோர் வரையலள் இவள் எனத்
தந்தையும் கொடாஅன் ஆயின் – வந்தோர்,
வாய்ப்பட இறுத்த ஏணி ஆயிடை
வருந்தின்று கொல்லோ தானே – பருந்து உயிர்த்து
இடைமதில் சேர்க்கும் புரிசை,
படைமயங்கு ஆரிடை, நெடுநல் ஊரை?[56]

(புறம். 343. 11 – 17.)

முசிறியைப் போன்ற வளம் கொண்ட பொருட்களைக் கொண்டு வந்து, பணிந்து பெண்ணைக் கேட்டாலும், தன் குடிக்கு ஒத்தவர் அல்லாதவரை என் மகள் மணக்க மாட்டாள் என தந்தை கூறுவதாக அமைந்துள்ளது மேற்கண்ட பாடல். மேலும் மகட் கொடை மறுத்ததால் அழியப் போகிற அந்த வீரனது நெடிய நல்ல ஊர் பரிதாபமுடையது எனவும் சுட்டுகிறது இப்பாடல். மகட் கொடை மறுப்போர் மருத நில உடைமையைப் பாதுகாக்கும் பொருட்டு மதில்கள் எழுப்பட்ட ஊர்களில் வசிக்கும் மக்களின் தலைவராவர். மகட்பாற் காஞ்சி பாடல்கள் வேந்து உருவாக்ததின் தொடக்க காலத்தில் உருவாகியவை என்பது புலனாகிறது. இத்தகைய *முதுகுடி மன்னர்களிடம் மகட்கொடை வேண்டியோர் வேந்தர்களாக இருந்துள்ளனர்*. இதற்கு சங்க இலக்கியச் சான்றுகள் பல உள. பின்வரும் தொல்காப்பிய நூற்பாவின் மூலமும் இதனை அறியமுடிகிறது. *முதுகுடி மன்னர் காலத்தில் பெண்கள் பொருளாதார நிலையில் மதிக்கப்பட்டிருந்தமை காணலாம்.*

நிகர்த்து மேல்வந்த வேந்த னொடுமுதுகுடி
மகட்பாடு அஞ்சிய மகட்பா லானும்[57]

தொல். 1025. 14-15.

இந்நூற்பா வரிகளுக்குத் தம்மைப் பகைத்து படையெடுத்துச் செருக்குடன் வந்த வேந்தனுக்கு 'தொல்' குடி பெருமக்கள் தம் மகளை மணம் செய்து கொடுக்க மறுப்பது மகட்பாற்காஞ்சி என உரை எழுதுகிறார் தமிழண்ணல். ஆனால் வேந்தர்களை எதிர்த்து முதுகுடி மன்னர்களால் நீண்டகாலம் எதிர்கொள்ள இயலவில்லை என்பதுதான் சங்க இலக்கியங்களின் வழி கிடைக்கும் வரலாற்று ஆதாரங்களின் தெளிவு.

முதுகுடி தலைவர்களிடம் மகட் கொடை வேண்டியோர் வேந்தர்களாக இருந்துள்ளனர். வேந்தர்கள் தங்களது ஆட்சிப்பரப்பை விரிவு செய்ய மகட் கொடை வேண்டியதும், அதற்கு இசையாத பொழுது போர் தொடுத்ததும் சங்ககால இலக்கியத்தின் இரண்டாம் காலகட்டம் முழுவதும் நடந்தேறியது. பாரிக்கு நிகழ்ந்த முடிவும் இதுவேயாகும்.

முதுகுடி மன்னர் தமக்கொத்த குடியைத் தவிர வேந்தருக்கும் தங்களது பெண்ணைத் தர மறுத்துள்ளனர். முதுகுடி மன்னர்கள் தங்கள் வீட்டு மகளிரை வேறு குடிகளுக்குக் கொடுக்காமையைத் தங்களது கௌரவமாக கருதியுள்ளனர். இதனை அறிந்தும் வேந்தர்கள் இம்மன்னர்களிடம் மகட்கொடை வேண்டியமைக்கான காரணத்தை மாதையன் பின்வருமாறு விளக்குகிறார்.

> *மருத நிலங்களைக் கைபற்றுதல் என்பதே மகட்பாற் காஞ்சிப் பாடல்கள் காட்டும் வேந்தர்களின் அடிப்படை நோக்கமாய் இருந்துள்ளது. மகள் வேண்டல் என்பது அடிப்படை நோக்கம் அல்ல.* உரியவர்களுக்கு அல்லது பிறருக்குப் பெண் தருதல் இல்லை என்ற வரையறைப்பட்ட திருமண உறவுடையவர் முதுகுடி மன்னர் என்பது,
>
> வேம்பு மாரும் போந்தையு மூன்றும்
> மலைந்த சென்னிய ரணிந்த வில்லர்
> கொற்ற வேந்தர் வரினுந் தற்றக
> வணங்கார்க் கீகுவ னல்லன்[58] (புறம். 338. 6 -9)

திருநயத் தக்க பண்பினிவ ணலனே
பொருநர்க் கல்லது பிறர்க்கா காதே[59]     (புறம். 342. 5 -6)

எனப் புலவர்களால் அறிவுறுத்தப்பட்ட நிலையிலும் மகட்கொடை வேண்டிச் சென்ற வேந்தர் நோக்கம் மருத வயல்களைக் கைப் பற்றுதலே.[60]

பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், பக். 76-77.

என புறநானூற்று வரிகளை எடுத்துக்காட்டி விளக்குகிறார் மாதையன். இதன்மூலம் மகட் கொடை வேண்டல் என்பது போருக்கொரு காரணியாக அமைந்திருந்தது புலனாகிறது. மற்றொரு புறத்தில் பெரிய சீரும் அரிய போர் செய்து பகைவரிடத்தில் இருந்து கொண்டு வந்த பொருளும் தன் மகளுக்கு கொடுக்கப் படுதல் என்னும் பொருளில் அமைந்த "பெருஞ்சீரருங் கொண்டியள்" என்னும் தொடர், மகளை மணம் செய்து கொடுக்கும் போது பெரும் பொருள் கொடுக்கப்பட்டதை விளக்குகிறது. மகளைக் கொடுத்தாலும் கொடுக்கவில்லை எனினும் அதில் பெண்களின் விருப்பம் மற்றும் விருப்பமின்மை முக்கியத்துவம் பெறவில்லை.

**முடிவுரை**

*இதுவரை உள்ள மனித சமூக வரலாற்றை ஆதிப் பொதுவுடமைச் சமூகம், ஆண்டான் அடிமைச் சமூகம், பண்ணையடிமைச் சமூகம், முதலாளித்துவச் சமூகம், சோசலிச சமூகம் என சமூக அமைப்பின் அடிப்படையில் பிரிக்கலாம்.* சங்கப்பாடல்களில் முதல் மூன்று சமூக நிலைகளையும் அவை ஒன்றிலிருந்து ஒன்று வளர்ந்த நிலையையும் காணமுடிகிறது.

ஆதிப் பொதுவுடமைச் சமூகத்தில் பெண்கள் முதல்நிலையில் இருந்துள்ளனர். உற்பத்திக் கருவிகளின் வளர்ச்சி பொருளாதார நிலையைப் பெண்கள் கைகளில் இருந்து ஆண்களின் கைகளுக்குக் கொண்டு சேர்த்தது. குறிஞ்சி, முல்லை, நிலங்களின் பொருளாதாரம்

மருதநில பொருளாதாரமாக வளர்ந்ததைச் சங்க இலக்கியங்கள் விவரிக்கின்றன.

ஒரு சமூகத்தின் அடிப்படை அமைப்பாக பொருளாதாரம் அமைகிறது. அப்பொருளாதார அமைப்புக்கு துணையாக அமையும் நடவடிக்கைகளை 'புறம்' எனக் குறித்தனர் தமிழர். இப்புற நடவடிக்கைகளுக்கு உறுதுணையாக அமையும் நடவடிக்கைகளை அகம் எனக் குறித்தனர். இவ்விரண்டும் ஒரு சமூகத்தை இயக்கும் சக்திகளான அமைந்துள்ளதை சங்கப்பாடல் வழி அறியமுடிகிறது.

பெண்கள் அறத்தொடு நிற்றல், குடும்பம் பேணுதல், சுற்றம் ஓம்புதல், விருந்தோம்புதல், ஆற்றியிருத்தல் போன்ற மையக் கடமைகளை (அகக்கடன்கள்) நிறைவேற்றுகின்றனர். முதுமகளிர் வேளாண் சார்ந்த வழிபாடுகளை நடத்துகின்றனர். அவற்றுள் முக்கியமாக மந்திரச் சடங்குகள் நடத்தப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது. *தொடக்க காலத்தில் வளமையின் அடிப்படையாக அமைந்த பெண்கள் நாளடைவில் வளமையின் குறியீடாக மாற்றம் கண்டனர்.* தற்காலம் வரை வளமை சார்ந்த சடங்குகளில் பெண்கள் முன்னணியில் நிற்பதற்கு ஆதாரம் பெண்களின் தொடக்ககால வளமை நிலையாகும். ஆனால் சமகாலத்தில் பொருளுடைமை மறுக்கப்பட்ட சூழல் நிலவுகிறது. அதனால் திருமணச் சடங்குகளில் பெண்கள் முக்கியத்துவம் பெறுவதில்லை

சங்க இலக்கியத்தின் முக்கிய பொருளாதார நடவடிக்கை போராகும். அப்போரில் நேரடியாக பெண்கள் பங்கு கொள்ளாவிடினும் பின்புலமாக இருந்து பெரும் பங்காற்றியுள்ளனர். புதல்வர்க்கு வீரம் ஊட்டி வளர்க்கும் பொறுப்பு முதற்கொண்டு அவன் வீரமரணம் அடைந்தால் பெருமைகொள்வது வரை அவனை ஒரு வீரனாக அடைகாத்து வருபவள் பெண் ஆவாள். வள்ளை பாட்டு போன்ற பாடல்கள் மூலம் வீரர்களின் புகழைக் கூறி நடுகல்லின் சிறப்பை உணர்த்தித் தம் புதல்வரை போரில் நாட்டம் கொள்ளச் செய்துள்ளனர் பெண்கள்.

தொடக்கால வேலைப் பிரிவினை வளர்ந்த நிலையில், பெண்கள் அகமணமுறைக்கு உட்படுத்தத் தொடங்கிய போது சமூகம் ஒருவித இறுக்கம் கொண்டது. இவ்விறுக்கம் காலப் போக்கில் சாதியாக உருமாறியது. போரின் மூலமும் திருமணத்தின் மூலமும் நிலப்பரப்பை விரிவாக்க பெண்கள் மகட்கொடை மூலமும் கைப்பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளனர்.

ஆண்ஆதிக்க பொருளாதாரம் வளர்ந்த பிறகு அப்பொருளாதார நிலைக்கும் பக்கபலமாய் இருந்து செயலாற்றியோர் பெண்களாவர். சங்கச் சமூகம் முழுக்க முழுக்க போர்ச்சமுதாயமாக இருப்பினு போர்புரியும் ஆண்களை மட்டும் கொண்டு அச்சமூகம் இயங்கவில்லை. அங்ஙனம் ஆண்களை மட்டுமே கொண்ட சமூக இயக்கம் என்பது எங்கும் என்றும் இல்லை. ஆண்களால் தலைமை ஏற்று இயக்கப்பட்ட பொருளாதார சமூகமாக இருந்தாலும் சங்கச் சமூகத்தில் பெண்கள் அவ்வியக்கத்தின் சமபாகமாக இயங்கியுள்ளனர் என்பது எதார்த்த உண்மை.

காதலும் வீரமும் போற்றிப்பாடும் சங்க இலக்கியத்திற்குள் பெண் தாய்வழிச் சமூகத்தின் தலைமை என்றோ, பொருளாதார உற்பத்தியில் பெரும் பங்காற்றியவள் என்றோ விவசாயம், கைவினைத் தொழில் என முக்கியத்துவ செயல்பாட்டிற்குரியவள் என்றோ பொருளாதார உற்பத்திக்கு மூலமாக அமையும் மனித குல உற்பத்திக்கு முதன்மைக்குரியவள் என்றோ பொதுவுடைமையின் முதற்பொருளாய் மனித குலத்தை வழி நடத்திச் சென்றவள் என்றோ பதிவுகள் முக்கியத்துவம் பெறவில்லை. புறம் என்ற பகுதிக்குள் பெண் முதன்மைப்படுத்தப்பட்டு பாடல்கள் அமையவில்லை. அகத்தில் சில பெண்கள் பரத்தை என்னும் நிலைக்குத் தாழ்ந்தமைக்குத் காரணம் பொருட்களை உடைமையாக்கிக் கொள்ள முடியாமல் போனதாகும்.

போர்க்களத்தில் ஒப்பீட்டளவில் பெண்கள் மிக மிகக் குறைவாக அனுமதிக்கப்பட்டுள்ளனர். தாய் வழிச் சமூகத்தில் தலைமை பாத்திரம் வகித்த பெண்கள் ஐயரால் நடத்தி வைக்கப்பட்ட எண்வகைத் திருமணத்துள்ளும் சடங்குகளைச் செய்யும் பாத்திரத்தை வகிப்பதைக்

காணமுடிகிறது. பல பாடல்களில் மகட் கொடை மறுக்கப்பட்டிருப்பினும் அதில் பெண்ணின் விருப்பு வெறுப்புக்கு முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை என்பது புலனாகிறது. மடலேறுதல் பெண்களுக்கு மறுக்கப்பட்டதன் மூலம் அவர்கள் தம் உள்ளகிடக்கையை உரைக்கத் தடை விதிக்கப்பட்டிருந்தமையைக் காணமுடிகிறது.

காமக்கிழத்தி, இற்கிழத்தி, பரத்தை, காதற் பெண்டிர், சேரிப் பரத்தை எனச் சுட்டப்பட்ட பெண்கள் உடைமைச் சமூகத்து ஆண்களால் நுகர்வுக்குரியவளாக மட்டுமே அணுகப்பட்டிருக்கின்றனர்.

குடும்பத்தைச் சமூகத்தை முன்னின்று நிர்வகித்த முது செம்பெண்டிர் எனப் பெயர் பெற்ற பெண்கள் மருத நிலத்தில் பொருளுற்பத்தியின் வளர்ச்சியால் விளைந்த அரசு உருவாக்கம் பெற்ற ஆணாதிக்கச் சமூகத்தில் எல்லாவற்றுக்கும் கணவனைச் சார்ந்திருக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

சமூக வளர்ச்சிக்கும், பண்பாட்டு வளர்ச்சிக்கும் வளமாக தோள் கொடுத்து நின்ற சக பொருளாதார உற்பத்தியாளர்களை 'இழிசினர்' என்ற பொதுவான சாதிய வர்க்க பிரிவிற்குள் நிறுத்திப் பார்ப்பது சமூக பொருளாதார வளர்ச்சி பாதைக்கு பெரும் தடையாய் அமைந்திருக்கும் பார்வையை இந்த ஆய்வு ஆய்ந்தறிந்து முன் வைக்கிறது.

## சான்றெண் விளக்கம்

1. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமூகம், ப. 73
2. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமூகம், ப. 73.
3. கார்ல் மார்க்ஸ், அரசியல் பொருளாதார விமர்சனத்துக்கு ஒரு பங்களிப்பு. முன்னுரை.
4. புறம். 287 – 2.
5. புறம். 82. 3.
6. க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப. 367
7. க. கைலாசபதி, தமிழ் விரநிலைக் கவிதை. ப. 372.
8. சிறுபாண். 31 – 33
9. தொல். 1060
10. நற், 45.
11. குறுந். 23.
12. தொல். 1099
13. பெரும். 248 – 252
14. https://ta.wikipedia.org
15. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானுடவியல், ப. 350
16. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானுடவியல், பக். 352-353.
17. அகம். 86. 8 -12
18. கேபி. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர். ப. 35.
19. புறம். 255
20. குறுந். 167
21. குறுந். 398.
22. நற். 81.
23. குறுந். 155.
24. பாலை. 32
25. தொல். 1098. 3 - 4.
26. கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 185.
27. அ. செல்வராசு, ஆண் ஆளுமையில் பெண் கற்பு, ப. 8.
28. அ. செல்வராசு, ஆண் ஆளுமையில் பெண் கற்பு, ப. 10.
29. குறுந். 338.
30. அகம். 33.
31. அகம்.114.
32. அகம். 34.
33. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், பக். 101 – 102.
34. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப. 102.
35. அகம். 1 -19.
36. பட்டினப். 154 – 155.
37. திருமுருகு, 227 – 238.

38. கிறிஸ்டோபர் காட்வெல், கானலும் உண்மையும், ப. 24.
39. புறம். 143. 1-5.
40. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், பக். 101.
41. புலியூர்க்கேசிகன், புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும், ப.IV - V.
42. புறம். 270
43. புறம். 276
44. புறம். 277
45. புறம். 278
46. பா. கலி. 8
47. பக்தவத்சல பாரதி, இலக்கிய மானிடவியல், ப. 51.
48. ந. சுப்பிரமண்யன், சங்ககால வாழ்வியல், பக். 166 - 167.
49. க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப. 324.
50. புறம். 335. 9 - 12.
51. ந. சுப்பிரமண்யன், சங்ககால வாழ்வியல், ப. 171.
52. மலை. 386 - 396.
53. க. கைலாசபதி, பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், ப. 35.
54. பக்தவத்சல பாரதி, தமிழகப் பழங்குடிகள், ப.187.
55. நா. வானமாமலை, மார்க்சிய சமூகவியல் கொள்ளை, ப. 31.
56. புறம். 343. 11 - 17.
57. தொல். 1025. 14-15.
58. புறம். 338. 6 -9
59. புறம். 342. 5 -6
60. பெ. மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், பக். 76-77.

# இயல் 5

## சங்க இலக்கியத்தில் பெண்களின் பதிவுகளும் மறுக்கப்பட்ட உரிமைகளும்

பெண்களுக்கு உரிமைகள் மறுக்கப்படுகின்றன என்பது இக்காலத்தின் சமூகவியல் மற்றும் பெண்ணியக் கருத்தாக்கமாகும். தற்கால சமூக சூழல் அங்ஙனம் இருப்பதும் உண்மை. இக்கருத்தைச் சங்ககாலப் பெண்களின் வாழ்நிலையோடு ஒப்பு நோக்கி அவர்களது வாழ்க்கை பற்றிய உண்மை நிலையினை வெளிப்படுத்துவது அவசியம். அவ்வகையில் சங்கப் பாடல்களைத் தற்கால பெண்ணியக் கருத்துக்களோடு ஒப்பு நோக்கி அவற்றில் காணப்படும் பெண்களின் நிலையை அறியலாம்.

இலக்கியத்தில் கூற்று என்பது ஒரு உத்தியாகும். இவ்வுத்தியைக் கொண்டு சிறப்பான வகையில் புலவர்கள் பாடல்களை யாத்துள்ளனர். கூற்று என்னும் இவ்வுத்தியின் வழி சங்கப் புலவர்கள் அக்கால வாழ்வியலின் ஒரு கோணத்தை வெளிப்படுத்துகிறார்கள். சங்க இலக்கியத்தில் பெண்கள் தலைவியாவும், தோழியாகவும், செவிலியாகவும், நற்றாயாகவும், விறலியாகவும் பதியப் பெற்றுள்ளனர்.

பெண் பதிவுகளைத் தலைவி கூற்று, தோழி கூற்று, செவிலி கூற்று, நற்றாய் கூற்று, தலைமகன் கூற்றில் பெண்கள், பாணர் கூற்றில் பெண்கள் என்னும் நிலைகளில் ஆய்வு செய்து அவற்றுள் காணப்படும் முரண்பாடுகள் மற்றும் அவற்றிற்கான சமூகப் பொருளாதாரகக் காரணிகளை ஆய்ந்து அதன் வழி படிப்படியாகப் பெண்களுக்கு உரிமைகள் மறுக்கப்பட்ட விதிம் குறித்து இவ்வியல் ஆராயப் புகுகிறது.

சங்கப் பாடல்களின் பெண் குறித்த பதிவுகளைப் பகுப்பாய்வு செய்து, மனித சமூகத்தின் வளர்ச்சிப் போக்கோடு பொருத்திப் பார்க்க கூற்றுகளின் அடிப்படையில் அணுகுவது துணையாக அமையும்.

**கூட்டு வாழ்க்கையில் பெண் பதிவுகள்**

ஆதிப் பொதுவுமைச் சமூகத்தில் பெண் முதன்மை நிலையில் இருந்தாள். சமூகத் தலைமையும் பெண்ணுகுரியதாக இருந்துள்ளது. சமயத் தலைமையிலும் பெண் இருந்துள்ளாள். இன்றும் சமயச் சடங்குகளில் பங்கு பெறும் ஆண்களும் பெண் வேடம் அணிந்திருப்பது இதற்குச் சான்றாக அமைகிறது. இதன் தொடர்ச்சியாக சங்கப் பாக்கள் சுட்டும் குறிஞ்சி நில வாழ்வைக் கூறலாம். இது முழுமையான புராதன பொதுவுடைமைச் சமூகம் இல்லை எனினும் ஒரு ஒழுங்குபடுத்தப்பட்ட கூட்டு வாழ்க்கை மேற்கொண்ட சமூகம் என்பதில் ஐயமில்லை. குறிஞ்சி நிலப்பாடல்களில் இக்கூட்டு வாழ்க்கை பிரதிபலிப்பதைக் காணமுடிகிறது.

ஆதிப் பொதுவுடைமைச் சமூகத்துப் பெண்களின் சுதந்திர நிலை படிப்படியாக வர்க்க சமூகத்தில் எங்ஙனம் மாற்றம் அடைந்தது என்பதைப் பின்வரும் கூற்று விளக்குகிறது.

> இத்தகு சமூக அமைப்பில் காதல் வாழ்விலும் பெண்களின் ஆதிக்கமே நிலவி இருந்தது. சுதந்திரமாகக் கணவனைத் தெரிவு செய்யும் உரிமையைப் பெண் பெற்றிருந்தாள். தமிழில் களவியலின் தொடக்கம் இவ்வாறுதான் இருந்தது. ஆயின் உற்பத்தி உறவில் ஏற்பட்ட மாற்றங்களும் உபரி உற்பத்தியும் பெண்வழித் தலைமையை வீழ்த்தி ஆண் வழித் தலைமையை நிலைநிறுத்தியது. இம்மாற்றம் சமூக அமைப்பில் திடீரென்று தோன்றியது அன்று. நீண்ட கால நீட்சிமையில் இம்மாற்றம் நிகழ்ந்தேறியது. இம்மாற்றத்தின் விளைவாகப் பெண்களின் அதிகாரம் விழ்ந்தது. ஆண் அதிகாரம் உடையவனாக மாற்றம் பெற்றான். பொதுவுடைமைச் சமூகம் வீழ்ந்தது. ‘உடைமைச் சமகம்’ உருப்பெற்ற போது சொத்து ஆணுக்குரியது ஆனது. இந்நிலையில் பெண்ணும் ஆணின் உடைமையாக்கப்பட்டாள். வாரிசுரிமை காரணமாக ஏற்பட்ட மணச்சடங்குகள், கற்பு முதலியன பெண் ஆணுக்கு உடைமையாக்கப்பட்டதை உறுதி செய்தன.[1]

சிலம்பு நா. செல்வராசு, இலக்கிய மீள்பார்வைகள், பக். 12 –13.

இங்ஙனம் பெண் பொருளாதார சமூக மாற்றத்தின் விளைவால் படிப்படியாக தனது அதிகாரத்தை இழந்துள்ளமையைக் காணமுடிகிறது. பெண் தலைமை வகித்ததும் அந்நிலை மாறி ஆண் தலைமை வகித்ததும் தனிநபர்களின் விருப்பங்களால் உருவானதல்ல. அது ஒரு சமூக இயக்கப் போக்கு என்பதையும் இக்கூற்று விளக்கிச் செல்கிறது. இம்மாற்றம் சங்கப்பாடல்களில் சிறப்பான முறையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

தலைவி, தலைவன், தோழி, செவிலி என எவர் கூற்றாக இருப்பினும் அதில் அக்கால மக்களின் கூட்டு வாழ்க்கையையும் படிப்படியாக அக்கூட்டு வாழ்க்கை சிதைந்த விதமும், அவ்வாழ்கையினுள் பெண்களின் நிலையில் ஏற்பட்ட மாற்றங்களும் சங்கப்பாடல்களில் காட்டப்பட்டுள்ளன.

**தோழி கூற்றில் வரைவு**

குறிஞ்சி நிலத்தில் தோழி தலைமக்களின் காதலுக்குத் துணையாக நிற்கிறாள். அவள் கூற்றின் வழி தலைவன் வரும் வழியின்கண் ஏற்படக் கூடிய இன்னல்கள், களவு வெளிப்பட்டுவிட்டால் உண்டாகும் அலர், தாயர்க்குத் தெரிந்தால் இற்செறித்தல் நிகழும், போன்ற செய்திகள் காணப்படுகின்றன. இவ்வகைப் பாடல்களில் தலைவன் தலைவியரின் பொருளாதார ஏற்றத்தாழ்வு பெரும்பாலும் குறிக்கப்படவில்லை. தலைவனின் பிரிவால் தலைவி வருந்தும் நிலை உண்டு. ஆனால் மற்ற நில மகளிரைப் போல் பொருளாதாரத் தேவையை முன்னிட்டு பிரிந்து நிற்கும் நிலை இல்லை. இதனால் அந்நிலத்தைச் சேர்ந்த மக்களிடையே பெண் அடிமை நிலை காணப்படவில்லை என்பது புலனாகிறது.

**தலைவி கூற்றில் தலைவன் சிறப்பு**

குறிஞ்சி நிலத்தில் களவு காலத்தும் கற்பு காலத்தும் தலைமக்கள் ஒத்த அன்புடன் இணைந்து வாழ்கின்றனர். இவர்களுக்குள் பொருளாதாரப் பிரிவினைகள் பெரும் அளவில் இல்லை. இம்மக்களுக்குப்

பெயரளவிலான உடைமை மட்டும் உண்டு. ஆகையால் இவர்களது வாழ்வு இன்ப வாழ்வாகவும், ஆணுக்கு இணையாக பெண்ணின் வாழ்வும் இருந்துள்ளது. பின்வரும் பாடலில் தலைவனின் சிறப்புக் கூறும் தலைவியின் கூற்றில் தலைவனுடன் அவள் கொண்ட அன்பின் இயல்பு விளக்கப்பட்டுள்ளது. சமத்துவ சமுதாய நிலை இருந்தமையும் உணரமுடிகிறது.

நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று;
நீரினும் ஆர் அளவின்றே – சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே[2]

குறுந். 3.

என்று தலைமக்களின் காதல் சிறப்பு குறித்து கூறப்படுகிறது. அன்பொத்த நிலையும் கூட்டு வாழ்வின் இயல்பையும் இப்பாடலில் காணமுடிகிறது. இதே போன்று நெய்தல் நிலத்திலும் தலைவி தலைவனையும் அவனது அன்பையும் சிறப்பித்துக் கூறுகிறாள். இவ்விரு சமூகத்திலும் தொடக்கால வேட்டை பொருளாதாரம் காணப்படுவதால் இவ்விரு நிலங்களிலும் தலைமக்கள் காதல் வேட்கைக்குத் தடையாக வரும் சிக்கல்களைத் தவிர வேறொரு சிக்கல்களும் அறியாதாராய் இருந்தனர் என்பது புலப்படுகிறது.

தலைவனின் பிரிவைக் காட்டிலும், தலைவன் நம்மைப் பிரிந்துவிட்டான் எனக் கூறிய தோழியின் சொல்லால் மன வேதனைக் கொள்ளுவதாக குறுந்தொகைப் பாடல் ஒன்று அமைகிறது. இப்பாடல் நெய்தல் நிலத்துப் பாடலாகும். காம நோய் என்பது என்ன தோழி என்றும், தலைவனைப் பிரிந்தால் உறக்கம் வருதில்லை அதுவோ என்றும் தலைவி தோழியிடம் வினவுகிறாள். இதனைப் பின்வரும் பாடலால் அறியலாம்

அதுகொல், தோழி! காம நோயே?
வதிகுருகு உறங்கும் இன்நிழற் புன்னை,

உடைதிரைத் திவலை அரும்பும் தீம்நீர்,
மெல்லம் புலம்பன் பிரிந்தென,
பல்இதழ், உண்கண் பாடு ஒல்லாவே[3]

குறுந். 5

தலைவன் நம்மைப் பிரிந்தான் என்று எண்ணி நம் கண்கள் அழுகின்றன. ஆனால் அவர் நம்மிடம்தான் இருக்கின்றார். இதை அறியாமல் கண்கள் அழுகின்றன. இதுதான் காதலோ எனக் கேட்கிறாள் தலைவி. மேலும் கண்கள் பார்க்கும் புறப் பொருட்களை எல்லாம் இருக்கின்றன என எண்ணுகின்றன. ஆனால் நம் தலைவன் இருப்பதை அவைகளால் காண முடியாமல் தவிக்கின்றன எனக் கூறுகிறாள் தலைவி. தலைவியால் தலைவன் பிரிந்து விட்டான் என்ற உண்மையை நம்ப முடியவில்லை. அவள் தன் தலைவன்பால் கொண்ட அன்பு அவள் கண்ணையும் நம்ப விடாமல் செய்கிறது என கூறுகிறது இப்பாடல். இதன் மூலம் தலை மக்களின் அன்பின் திறம் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளது.

**தலைவன் கூற்றில் தலைமகள் இயல்பு**

குறிஞ்சிப் பாடலில் தலைவன் தலைவியின் நலம் புனைந்து உரைக்கும் பாடல்கள் பல உள்ளன. இவை தலைவன் மற்றும் தலைவியின் இன்ப வாழ்க்கையை வெளிப்படுத்துகின்றன. பிறவி தோறும் தலைமக்கள் சேர்ந்து வாழ விரும்பியுள்ள செய்தி கூறப்படுகிறது.

இவை இலக்கிய இன்பத்தை மிகுவிக்கக் கூறப்பட்ட செயதிகள் எனினும் இச் செய்தியைக் குறிஞ்சி நிலத்தில்தான் கூறமுடியும். ஏனெனில் இந்நிலத்தில்தான் அன்பொத்த தலைமக்கள் ஒன்றி அவர்தம் காதல் வெளிப்படுகிறது. முல்லைத் திணையிலோ மருதத்திணையிலோ இங்ஙனம் கூற இடம் இல்லை. வாடைக் காற்றிடம் தன் காதலி இருக்கும் ஊருக்கு போய் அவளை வருத்த வேண்டாம் எனக் கூறுவதாக அமைந்துள்ளது பின்வரும் பாடல்.

ஓம்புமதி; வாழியோ – வாடை! – பாம்பின்
தூங்குதோல் கடுக்கும் தூவெள் அருவிக்
கல்உயர் நண்ணியதுவே – நெல்லி
மரையினம் ஆரும் முன்றிற்
புல்வேய் குரம்பை நல்லோள் ஊரே[4] குறுந். 235.

இப்பாடலில் தலைவன் தன் காதலியின் மெல்லியல்பு குறித்து கூறுகிறான். தன் இல்லின் முன் நெல்லிக் காய்களைத் தின்னும் இணை மான்களைக் கண்டு வருந்துவாள் என தலைவன் எண்ணுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இந்நிலத்தின் வேட்டை மற்றும் சிறிய அளவு வேளாண் உற்பத்தி அம்மக்களிடையே கூட்டு வாழ்வையும் காதல் வேட்கையையும் அளித்துள்ளமையை அறியமுடிகிறது. இந்நில மக்களின் அக வாழ்வை இலக்கியத்தில் புணர்தல் புணர்தல் நிமித்தம் எனக் குறித்தனர் இலக்கண ஆசிரியர்.

குறிஞ்சி நில மக்கள் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் வாழ்ந்த மக்களாவர். அக்காலம், மனித இனம் உருவாகி சமூகமாக வாழ தலைப்பட்ட தொடக்க காலம் ஆகும். அங்கு ஆணுக்கும் பெண்ணுக்கும் பெரிய அளவிலான வேறுபாடுகள் இல்லை. பொருளாதார முறையிலும் சமூக முறையிலும் ஆணும் பெண்ணும் இணைந்து செயல்பட்டுள்ளனர். தாய்வழிச் சமூகத்தின் எச்சமாக அக்காலத்தில் சேவை மணம் இருந்துள்ளதைக் காணமுடிகிறது. இதனைப் பின்வரும் கூற்று உறுதி படுத்துகிறது.

> சேவை மணம் ஒரு பாடலில் மட்டுமே காணப்படுகின்றது. இங்கும் பெண்ணின் இடம் பற்றி அறிய வாய்ப்பில்லை. இதன் தொடர்ச்சி போன்று சேலம் மாவட்டத்தில் வாழும் பள்ளர்களிடம் இப்பழக்கம் காணப்படுகிறது. திருமணம் செய்து கொள்ள விரும்புபவன் பெண்ணின் தந்தை வீட்டில் தங்கி பலகாலம் உழைத்த பின்னரே திருமணம் செய்து கொள்ள இயலும்.[5]

கேபி. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர், ப. 22.

சங்க காலத்தில் திருமணத்திற்குப் பின் மணமகன் மணமகள் இல்லத்தில் தங்குதலும் உண்டு. தனி இல்லத்தில் தங்குதலும் உண்டு. இவர்கள் ஆங்காங்கே தினைப்புனத்திற்கு அருகில் குடியிருப்புகள் அமைத்து வாழ்ந்திருந்தனர். இங்ஙனம் கூட்டு வாழ்க்கை இம்மக்களிடையே சிறப்பாக இருந்துள்ளது அறியவருகிறது.

ஆணும் பெண்ணும் ஒன்றாக வேலை செய்து வாழ்ந்து வந்தனர். பிற்காலத்தைய பிரிவுத் துயர் இவர்களை நெருங்கவில்லை. இவர்கள் குறைந்த அளவு உற்பத்தி பொருளுடன் ஒரு தன்னிறைவு வாழ்க்கையை மேற்கொண்டிருந்தனர். அவ்வப்போது மலைபடு பொருட்களைப் பண்ட மாற்று செய்து கடல்படு பொருட்களையும் வயல்படு பொருட்களையும் பெற்றுள்ளனர். பொருளீட்டும் பணி பால் நிலை பாகுபாடின்றி சமனாக இருந்துள்ளது.

**உடைமைச் சமூகத் தோற்றத்தில் பெண் பதிவுகள்**

மலையில் வாழ்ந்த மனித இனம் தமது பொருளாதரத் தேவைகளை நிறைவு செய்யும் பொருட்டு பவரத் தொடங்கிய போது காடும் காடு சார்ந்த இடமான முல்லை நிலத்தை வந்தடைந்தனர். இவ்விடத்தில் ஆணும் பெண்ணும் குறிஞ்சி நிலத்தில் காணப்பட்டது போல் வாழ பொருளாதார நிலை வாய்ப்பு அளிக்கவில்லை. கால்நடை மேய்த்தலின் பொருட்டும், அக்கால்நடைகளைப் பிற குழுக்கள் கவர்ந்தால் அதனை மீட்டல் காரணியாக போர்மேற் செல்லுதலின் பொருட்டும் இவர்கள் வெகு காலம் பிரிந்து வாழ வேண்டிய சூழலில், பெண் இல்லக்கடன்களை ஆற்றி இருக்க வேண்டியிருந்தது. கால்நடைகள் பொருளாதாரத் தேவை என்ற நிலையைக் கடந்து சொத்து என்னும் வடிவத்தை அடைந்தன. இச்சூழலில்தான் பொருளீட்டி வந்ததும் அதனைச் சொத்துடைமையாக ஆக்கிக் கொண்டதும் என ஆண்கள் உடைமையாளர்களாகவும், பெண்கள் இல்லக் கடனாற்றியதால் சொத்துடைமை அற்றவர்களாகவும் ஆகிவிட்ட நிலையில் பெண்ணினம் அடிமை நிலைக்கு ஆட்பட்டுப் போயினர் என்பது சமூக வரலாறு என்பதை இவ்வாய்வு ஈண்டு பதிவு செய்கிறது.

## தோழி மற்றும் தலைவி கூற்றில் ஏறுதழுவல்

தாமே எதிர்பட்டு காதலுற்று களவு மேற்கொண்ட நிலை மாற்றமடைந்தது. தலைமக்கள் திருமணம் ஏறு தழுவுதல் மூலம் நடைபெற்றதை முல்லைக் கலி பாடல்கள் விளக்குகிறன்றன. இதனை ஒரு இலக்கிய உத்தி என்று புறந்தள்ள முடியாது. சமூகத்தில் இல்லா எதையும் படைப்பாளியால் படைக்க இயலாது.

தலைமக்கள் காதலித்தாலும் அவர்களாக மணம் முடித்துக் கொள்ள முடியாது. தலைவன் தனது *வீரத்தை நிலைநாட்டி தலைவியை மணம் முடிக்க வேண்டும். தலைவி ஒருத்தி ஏறுதழுவிய ஆண்மகனைக் கண்ட உடனே என்மனம் அவன் பால் சென்றுவிட்டது, இனி எதற்காக என்னை திருமணம் செய்து கொடுப்பதாக உறுதி கொடுக்கின்றனர் என கேட்பதைப் பின்வரும் முல்லைக் கலி பாடல் வரிகள் விளக்குகின்றன.*

ஒண்ணுதல்!
இன்ன உவகை பிறிது யாது – யாய் என்னைக்
கண்ணுடைக் கோலள் அலைத்தற்கு, என்னை
மலர் அணி கண்ணிப் பொதுவனோடு எண்ணி,
அலர் செய்துவிட்டது இவ் ஊர்?

ஒன்றிப் புகர்இனத்து ஆயமகற்கு – ஒள்ளிழாய்!
இன்று எவன், என்னை எமர் கொடுப்பது – அன்று, அவன்
மிக்குத் தன்மேல் சென்ற செங்காரிக் கோட்டிடைப்
புக்கக் கால் புக்கது என் நெஞ்சு?

என,
பாடு இமிழ் பரப்பக்கத்து அரவணை அசைஇய!
ஆடு கொள் நேமியாற் பரவுதும் – `நாடுகொண்டு'
இன் இசை முரசின் பொருப்பன், மன்னி
அமைவரல் அருவி ஆர்க்கும்
இமையத்து உம்பரும் விளங்குக! எனவே[6]

முு. கலி. 61-75.

என காதலுக்கு அடிப்படையாக வீரம் அமைவதையும் காணமுடிகிறது. இத்தொடக்க கால வீர உணர்வு பிற்கால போர் வீரத்திற்கு அடிப்படையாய் அமைந்திருத்தலையும் காணமுடிகிறது. மேலும் இப்பாடலில் தலைமகளின் காதல் அலராகிவிட்டதற்குத் தலைவி மகிழ்ச்சி அடைவதைக் காணமுடிகிறது. அகஉணர்வை விளக்க உருவாக்கப்பட்ட கவிதை என்றாலும் சமூகம் அங்கீகரித்த பிறகுதான் தலைமக்கள் மணம் புரிந்து கொண்டனர் என்பதைச் செவ்வனே விளக்குகிறது இப்பாடல்.

இங்கு தலைமக்களின் கற்பு ஒழுக்கத்துக்குள் சமூகத் தலையீடு இருத்தலைக் காணமுடிகிறது. முல்லை நிலச் சமூகம் குறிஞ்சி சமூகத்தைக் காட்டிலும் வளர்ச்சியுற்ற சமூகம் ஆகையால் அங்கே திருமணத்திற்கான வரையறைகள் வகுக்கப்பட்டு, கற்பு வாழ்க்கை நெறிப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இங்ஙனம் மனதகுல வளர்ச்சியின் ஒருகட்டத்தில் கற்பு வாழ்க்கை தொடங்கப்பட்டுள்ளது. முல்லை நில பொருளாதார அமைப்பினால் கால்நடை, போர் என சொத்துடைமை ஆக்கங்களால் தலைமக்கள் மேலும் பல போராட்டங்களையும், துயர்களையும் தங்கள் சமூக நலன் கருதி ஏற்க வேண்டியவர்களாக இருந்தனர். உடைமையற்ற சமூகத்திலும் பெண்கள் விதைத்து விவசாயம் செய்து குடும்பத்தின் உற்பத்தி பெருக்கத்தில் பங்கு வகித்துள்ளனர் என்பதை கவனப்படுத்துதல் இவ்வாய்வின் இலக்கு.

### தோழி கூற்றில் பிரிவாற்றல்

முல்லை நிலத்தின் உரிப் பொருள் இருத்தல் இருத்தல் நிமித்தமும் ஆகும். இதில் தலைவி பிரிவு துயரால் வாடுபவளாகவும் தோழி அவளைத் தேற்றுபவளாகவும் உள்ளாள். இந்நிலத்தில் தோழியும் தலைவியும் கிட்டத்தட்ட ஒரே சமூக பொருளாதார தளத்தில் உள்ளவர்களாக இருக்கின்றனர்.

இருவரில் எவர் வேண்டுமானாலும் தோழியாகவும் தலைவியாகவும் இருக்கலாம். ஒருவர் துயரை ஒருவர் ஆற்றி ஒருவருக்கு ஒருவர் ஆதரவாக இருக்க வேண்டும். அக்காலத்து பொருளாதார நிலைக்கு

உறுதுணையாக அமையும் வகையில் தோழியும் தலைவியும் அன்புடனும் அக்கறையுடன் வாழ்ந்துள்ளனர். தோழி தலைவியைத் தேற்றி தனது சமூகக் கடனை நிறைவேற்றி வாழ்ந்த நிலையைப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

வீங்குஇறை நெகிழ விம்மி, ஈங்கே
எறிகண் பேதுறல்; ஆய்கோடு இட்டுச்
சுவர்வாய் பற்றும் நின்படர் சேண்நீங்க
வருவேம் என்ற பருவம் உதுக்காண்;
தனியோர் இரங்கும் பனிகூர் மாலைப்
பல்ஆன் கோவலர் கண்ணிச்
சொல்லுப அன்ன, முல்லைவெண் முகையே.[7]

குறுந். 358.

தலைவனை பிரிந்த தலைவி வருந்த, தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற கார் காலம் வந்துவிட்டது; இனி தலைவர் வந்துவிடுவார்; ஆகையால் துயர் கொள்ள வேண்டாம் எனக்கூறுகிறாள் தோழி. எவ்வளவு காலம் தாழ்த்தினாலும், பிரிவை நீட்டித்தாலும் தலைவனை எண்ணி துயருறும் வாழ்க்கை முல்லை நிலத் தலைவியுடையதாகிறது. இத்துயரம் தலைவனிடத்தும் காணப்படுகிறது.

இருவரும் துயருற்றாலும் முல்லை நிலத்தில் பிரிவு தவிரிக்க இயலாத ஒன்று. அது அவர்களின் சமூகப் பொருளாதார நடவடிக்கை. ஆகையால் அதைக் கைவிட முடியாது. பெரும்பாண் ஆற்றுப்படையில் கோவலர் குடியிருப்பில் *ஆயர் மகள் பாணருக்கு விருந்து வைக்கும்* நிகழ்வும் அதை அடுத்து, காட்டில் கோவலர் தம் சுற்றத்தைப் பிரிந்து கால்நடைகளை மேய்த்துக் கொண்டு *இசைக் கருவிகளை மீட்டி பொழுது போக்கும் நிலையும் ஒருங்கே கூறப்பட்டுள்ளன.* பின்வரும் பாடல் வரியில் ஒரு தலைவியின் பிரிவுத் துயரும், ஆயனின் தனிமை நிலையும் ஒருங்கே விளக்கப்பட்டுள்ளன.

இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்.
தொடுதோல் மரீஇய வடுஆழ் நோன்அடி,
விழுத்தண்டு ஊன்றிய மழுத்தின் வன்கை,
உறிக்கா ஊர்ந்த மறுப்படு மயிர்ச்சுவல்,
மேம்பால் உரைத்த ஓரி, ஓங்குமிசைக்
கோட்டவும் கொடியவும் விரைஇ, காட்ட
பல்பூ மிடைந்த படலைக் கண்ணி,
ஒன்றுஅமர் உடுக்கை, கூழ்ஆர் இடையன்
கன்றுஅமர் நிரையொடு கானத்து அல்கி,
அம்நுண் அவிர்புகை கமழ, கைம் முயன்று
ஞெலிகோல் கொண்ட பெருவிறல் நெகிழிச்
செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்
இம்தீம் பாலை முனையின்[8]

பெரும். 167-180.

இடையன் காட்டில் கால்நடைகளுடன் இருக்கும் போது வீட்டில் ஆயர் மகள் பாணர்க்கு நண்டின் குட்டி போன்ற மூரலைப் பாலோடு கொடுத்து உபசரிக்கிறாள். இங்ஙனம் இல்லறக் கடன்களை ஆற்ற வேண்டியது அக்கால சமூகத்தின் தேவை. அத்தேவையை உணர்ந்து தலைவி ஆற்றி இருந்தாள். தன்னளவில் அவள் சுதந்திரமானவளாக இருந்தாள். இருப்பினும் தலைவனது பிரிவை எண்ணி வருந்தி இருந்தாளன்றி தான் அடிமைப் படுத்தப்பட்டு விட்டதாக எண்ணி வருந்தியிருக்கவில்லை.

**தலைவி கூற்றில் பிரிவுத் துயர்**

தலைவன் பிரிவு மேற்கொள்ளும் போது அவனுடன் சில ஆடவர்களைக் கொண்ட குழு செல்லும். அரசன் போருக்குப் போகும் போது பாணர் தம் சுற்றத்துடன் செல்வதும் உண்டு. அப்பாணருள் விறலியரும் இருத்தல் உண்டு. ஆனால் ஒரு போதும் தலைவியை உடன் கொண்டு எங்கும் தலைவன் சென்றதாகக் குறிப்பு இல்லை. இது

அக்கால சமூக வழக்காக இருந்திருக்கும். இக்கருத்தை இலக்கியப் படைப்பாக்கத்திற்கான இலக்கணத்தில் தொல்காப்பியர் பின்வருமாறு சுட்டுகிறார்.

முந்நீர் வழக்கம் மகடூவோடு இல்லை[9]

தொல். 980.

கடல் கடந்து செல்லும் பிரிவில் தலைவியை அழைத்துச் செல்லக் கூடாது என தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார். இருப்பினும் உடன் போக்கு தவிர வேறெங்கும் தலைவன் தலைவியை அழைத்துச் சென்றதாக குறிப்புகள் இல்லை. பாணர் தம் சுற்றத்தோடு பரிசில் வேண்டி செல்லும் பொழுதும், கலை நிகழ்ச்சிகளின் காரணமாக வேறு ஊர்களுக்குச் செல்லும் போதும் தமது மனைவியரை அழைத்துச் சென்றுள்ளனர். அதே போல் உப்பு வணிகரும் வண்டி கட்டி உப்பு ஏற்றி வேறு இடங்களுக்குச் செல்லும் போது தம் மனைவி உள்ளிட்ட சுற்றத்துடன் சென்றுள்ளனர்.

இருப்பினும் முல்லைத் திணையில் தலைவியைத் தலைவன் உடன் அழைத்துச் செல்லுதல் இல்லை. இலக்கிய பாத்திரத்தின் ஆர்வமேலீடு காரணமாக தலைவி, நான் தலைவனிடம் செல்வேன் எனக் கூறுவது போலும் பாடல்கள் புனையப்பட்டுள்ளன. பின்வரும் பாடல் அத்தன்மையதாகும்.

வானம் ஊர்ந்த வயங்கு ஒளி மண்டிலம்,
நெருப்பு எனச் சிவந்த உருப்பு அவிர் அம் காட்டு,
இலை இல மலர்ந்த முகை இல் இலவம்
கலி கொள் ஆயம் மலிபு தொகுபு எடுத்த
அம் சுடர் நெடுங் கொடி பொற்பத் தோன்றி,
கயம் துகள் ஆகிய பயம் தபு கானம்
எம்மொடு கழிந்தனர் ஆயின், கம்மென,
வம்பு வரித்தன்ன பொங்கு மணற் கான் யாற்றுப்
படு சினை தாழ்ந்த பயில் இணர் எக்கர்,

மெய் புகுவு அன்ன கை கவர் முயக்கம்
அவரும் பெருகுவர் மன்னே![10]

அகம். 11. 1-11.

என்னும் இப்பாடலில் தலைவி தன் தலைவனுடன் செல்ல விரும்பும் நிலையை அறியமுடிகிறது. ஆனால் எதார்த்தத்தில் அங்ஙனம் செய்ய முடியாத நிலை இருந்துள்ளதைக் காணமுடிகிறது. தலைவனைப் பிரிந்திருக்க முடியாத தலைவி தன் பிரிவாற்றாமையால் அங்ஙனம் கூறுகிறாள். அங்ஙனம் சென்றால் அது அச்சமூக ஒழுங்கதை சீர் குலைக்கும்.

இல்லக் கடமைகளை ஆற்ற பெண் வீட்டில் இருந்தாக வேண்டிய சூழல் நிலவிய காலம் சங்க காலம். மற்றொரு பாடலில் நான் தலைவன் சென்றுள்ள இடத்திற்கு செல்லத் துணிந்துவிட்டேன் என தன் நெஞ்சுக்குக் கூறுவதாக அமைந்துள்ளது. இப்படி, தலைவி தலைவனுடன் போய் மகிழ்ந்திருப்பேன். தலைவனிடம் போகப் போகிறேன் என்றெல்லாம் கூறுதல் அவளது காதல் துயரின் வெளிப்பாடாகும். நடைமுறையில் அங்ஙனம் செல்லுதல் சாத்தயம் அன்று.

இது போன்று நடைமுறை மரபை மீறிய பாடல்களைப் பெண்பாற் புலவர்கள் இயற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது. ஒப்பீட்டளவில் ஆண்பாற் புலவர்களைக் காட்டிலும் பெண்பாற் புலவர்கள் இது போன்ற தமது கருத்துக்களால் சமூகத் தடைகளை இலக்கிய அளவில் உடைக்க முயன்றுள்ளனர். சமூகம் அடுத்த கட்ட நிலைக்கு மாற தயாராக உள்ள நிலையை இதன் மூலம் அறியலாம்.

‘முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல்’ என்ற சங்க இலக்கியப் பாடலில் பெண் தன் உள்ள கிடக்கையை தெற்றெனப் பேசும் மனஉறுதிப் பாங்கு பதிவு செய்யப்பட்டுள்ளது. பெண் உறுதியும் உரிமையும் பேசும் மரத்தமிழ்ப் பெண்கள் இருந்துள்ளமையை உய்த்தறிய வேண்டும்.

## தலைவன் கூற்றில் பிரிவுத் துயர்

மனித குல வளர்ச்சி எல்லா இடங்களிலும் ஒரே சீராக வளரவில்லை. பல மனித குழுக்களை ஆய்வு செய்த எங்கல்ஸ் காதல் கொள்வதற்கு ஆண் பெண் சமத்துவம் அடிப்படை என்கிறார். இக்காதலுக்கு வெறும் பாலுறவு மட்டும் அவசியமாகக் கருதப்படுவது இல்லை. அது ஒரு பொருளாதார ஒப்பந்தம்.

அதே சமயத்தில் அது இரு பாலரின் சமநிலையிலும் மலர்கிறது. இக்காதல் நவீன காலத்தில் ஆண் பெண் சமநிலை உறவில் சாத்தியம் என்பதைப் பின்வருமாறு விளக்குகிறார்.

> முதலாவது, அது பரஸ்பரக் காதலாக இருக்க வேண்டும். இந்த அம்சத்தில் ஆணுக்குச் சமமாகப் பெண் இருக்கிறாள். இரண்டாவதாக, இரு தரப்பினரும் அன்புடையவர் அருகில் இல்லாததை அல்லது பிரிவைப் பெரிய – எல்லாவற்றிலும் பெரியதாக இல்லாவிட்டாலும் – துன்பம் என்று கருகின்ற பொழுதுதான் காதல் தீவிரமும் நிரந்தரமும் பெற்று விளங்குகிறது. அவர்கள் ஒருவரையொருவர் அடைவதற்கு மாபெரும் அபாயங்களைச் சந்திக்கிறார்கள், உயிரைப் பணயம் வைப்பதற்குக் கூட முன்வருகிறார்கள்.[11]

பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.121.

முல்லை நிலத்துக் காதலை நவீன காலக் காதலுடன் ஒருவாறு ஒப்பிடலாம். அங்கே தலைவன் போரில் அல்லது கால்நடை மேய்த்தலில் தலைவியைப் பிரிந்து துயருருகிறான். இங்கே தலைவி இல்லத்தில் இல்லக்கடன்களை ஆற்றிக் கொண்டு தலைவனை எண்ணி துயருருகிறாள். இருவரும் நவீன காலக் சமத்துவம் கொண்ட காதலர்களைப் போன்று பிரிவைத் தாங்க முடியாமல் தவிக்கின்றனர். காதல் வாழ்க்கையில் இருந்த ஒருமித்த உணர்வு காலப்போக்கில் மாற்றம் அடைந்தது. கால்நடை உடைமையில் ஆண் அதிகாரம் மிக்கவனாகவும் பெண்ணின் உழைப்பு பெரும் பொருளாதார

நடவடிக்கையில் மதிப்பு குறையத் தொடங்கிய நிலையையும் அறியமுடிகிறது.

தலைவியைப் பிரிந்து சென்று வினை முடித்துத் திரும்பிய தலைவன் தலைவியை எண்ணி, தேர்ப் பாகனிடம் வேகமாகப் போகும்படி கட்டளை இடுகின்றான். கானக் கோழி புழுவைக் கொண்டு சென்று தன் பெடையை நோக்கும் அது போல நானும் நான் கொண்டு வந்த பொருளுடன் தலைவியைக் காண வேண்டும் என்று கூறுவதாக அமைந்துள்ளது பின்வரும் பாடல்,

விரைப் பரி வருந்திய வீங்கு செலல் இளையர்
அரைச் செறி கச்சை யாப்பு அழித்து அசைஇ,
வேண்டு அமர் நடையர், மென்மெல வருக!
ஏமதி, வலவ, தேரே! உதுக்காண் -
உருக்குறு நறு நெய் பால் விதிர்த்தன்ன
அரிக் குரல் மிடற்ற அம் நுண் பல் பொறிக்
காமரு தகைய கானவாரணம்
பெயர் நீர் போகிய வியல் நெடும் புறவில்
புலரா ஈர் மணல் மலிரக் கெண்டி,
நாள் இரை கவர மாட்டி, தன்
பேடை நோக்கிய பெருந்தகு நிலையே[12]

நற். 21

எல்லோரும் கூடி உழைத்து கூடி பகிர்ந்து கொண்ட நிலை மாறி, வாய்ப்பு வாய்க்கப் பெற்றோர் உழைக்க, வாய்ப்பற்றோர் அவர்களை நம்பி வாழும் உடைமை நிலையின் தோற்றத்தில் தலைவன் தலைவியைப் பிரிந்து சென்று பொருள் ஈட்டி வருகிறான். தலைவி இல்லத்தில் இருந்து அப்பொருளைப் பகிர்ந்தளித்து வாழ்கிறாள். இருவரும் துயருற்று கடமையாற்றி கூடிய வரை சமநிலையில் வாழ்கின்றனர்.

**தலைமக்கள் கூற்றில் மிக்கக் காமத்து மிடல்**

பெருந்திணைக்கு இலக்கணம் கூறும் போது தொல்காப்பியர் மிக்கக் காமத்து மிடல் என்னும் ஒரு நிலையைக் குறிக்கிறார். இது காமம் மிகுந்த நிலையில் எதையும் கருதாமல் அதை அடைவதாகும்.

இவ்வகைப் பாடல்கள் சங்க இலக்கியத்தில் ஆங்காங்கே காணப்படுகின்றன. முல்லைக் கலியின் நூற்றி பன்னிரெண்டாவது பாடல் (112) மற்றும் நூற்றி பதின்மூன்றாவது பாடல் ஆகியவற்றில் தலைவி தலைவனுடன் புலப்பது போல் உரையாடி பின் காமத்தை மறைக்க முடியாதவளாய் தலைவனுடன் கூடி இன்பம் பெறுவதைக் காணமுடிகிறது.

யார் இவன், என்னை விலக்குவான்? நீர்உளர்
பூந் தாமரைப் போது தந்த விரவுத் தார்க்
கல்லாப் பொதுவனை; நீ மாறு; நின்னொடு
சொல்லல் ஓம்பு என்றார், எமர்.

எல்லா! `கடாய கண்ணால், கலைஇடய நோய் செய்யும்
நடாஅக் கரும்பு அமன்ற தோளாரைக் காணின்
விடாஅல்; ஓம்பு' என்றார், எமர்,

கடாஅயார், நல்லாரைக் காணின், விலக்கி, நயந்து அவர்
பல்இதழ் உண்கண்ணும் தோளும் புகழ்பாட
நல்லது கற்பித்தார் மன்ற; நுமர் பெரிதும்
வல்லர், எமர் கண் செயல்.

ஓஓ! வழங்காப் பொழுது, நீ கன்று மேய்ப்பாய் போல,
வழங்கல் அறிவார் உரையாரேல், எம்மை
இகழ்ந்தாரே அன்றோ, எமர்?

ஒக்கும் அறிவல் யான் - எல்லா! - விடு

விடேன், யான்; என், நீ குறித்தது? இருங்கூந்தால்!
நின்னை, "எம்முன் நின்று

செல்லல் ஓம்பு" என்றமை அன்றி, "அவனை நீ
புல்லல் ஓம்பு" என்றது உடையரோ? 'மெல்ல
*முயங்கு; நின்முள் எயிறு உண்கும்' - எவன்கொலோ?*

மாயப் பொதுவன் உரைத்த உரை எல்லாம்
வாய் ஆவது ஆயின், தலைப்பட்டாம்; பொய் ஆயின்,
சாயல்இன் மார்பில் கமழ்தார் குழைத்த நின்
ஆய்இதழ் உண்கண் பசப்ப, தடமென் தோள்
சாயினும், ஏஎர் உடைத்து.[13]

மு. கலி. 112.

இப்பாடலில் தலைமக்களின் உரையாடலின் இறுதியில் இருவரும் காம மிகுதியால் உடன்பட்டு இன்புற்று இருப்பதைக் காணமுடிகிறது. ஒருவரை ஒருவர் கண்டு உரையாடிய மாத்திரத்திலேயே காதலுற்று காம விழைவினால் முயக்கம் கொள்வதாக அமைந்துள்ளது இப்பாடல்.

மற்றொரு பாடலிலும் தலைவனும் தலைவியும் சந்தித்து கொள்கின்றனர். தலைவன் தலைவியின் வழியை மறித்து உன்னால் எனக்கு ஏற்பட்ட நோயை தீர்த்துவிட்டு செல்வாயாக எனக் கூறுகிறான். இதைக் கேட்ட தலைவி நீ யார் என வினவுகிறாள். அதற்கு அவன் தான் ஒரு வீரம் மிக்க ஆட்டினத்து ஆயர் மகன் என்று கூறுகிறான். அதற்கு அவள் நான் பசு இனத்து ஆயர் மகள் என்கிறாள். தலைவன் அப்படியானால் உன்னுடன் பேசக் கூடாதோ என வினவுகிறான். இங்ஙனம் உரையாடிய இருவரும் ஒன்று கூடி இன்பம் துய்த்தனர் என்பதை அப்பாடல் *நல்ஏறு நாகுடன் நின்றது என்னும் தொடர் மூலம் விளங்குகிறது*. இப்பாடல்களின் மூலம் பெருந்திணை என்பது சமூக நடைமுறை என்பதைக் காணமுடிகிறது. இந் நடைமுறையும் அக்கால சமூகப் பொருளாதாரத்தின் விளைவாகும்.

## தலைவி கூற்றில் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்

நெய்தற் பாடல்கள் சிலவற்றுள் தலைவியின் மிக்கக் காமத்து மிடல் வெளிப்படுகிறது. வரைதலுக்காக பொருள் ஈட்டச் சென்ற

தலைமகன் காலம் தாழ்த்திய காரணத்தால் தலைவி தனது நாணத்தை மீறி தனது காதலை எல்லோரும் அறியும்படி வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளது. பின்வரும் பாடல் ஒன்றில் தலைவி தனது காம நோயைப் பொறாமல் அழுதது கண்டு அவளது நாண் இழந்த பண்பைப் பற்றி கண்டோர் கூற தலைவி அவர்களுக்குத் தனது காம நோயின் தன்மைகளை விளக்கி உரைக்கிறாள்.

புரிவுண்ட புணர்ச்சியுள் புல்ஆரா மாத்திரை,
அருகுவித்து ஒருவரை அகற்றலின், தெளிவார்ண்,
செயநின்ற பண்ணினுள் செவிசுவை கொள்ளாது,
நயம் நின்ற பொருள் கெடப் புரி அறு நரம்பினும்
பயன் இன்று மன்றம்ம, காமம் - இவள் மன்னும்
ஒள்நுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்,
முள்நுனை தோன்றாமை முறுவல் கொண்டு அடகி, தன்
*கண்ணினும் முகத்தினம் நகுபவள்; பெண் இன்றி*
யாவரும் தண்குரல் கேட்ப, நிலை வெண் பல்
மீ உயர் தோன்ற, நகாஅ, நக்காங்கே,
பூ உயிர்த் தன்ன புகழ் சால் எழில் உண்கண்
ஆய் இதழ் மல்க அழும்.

ஓஓ! அழிதகப் பாராதே, அல்லல் குறுகினம்;
காண்பாம் - கனங்குழை பண்பு,

என்று, எல்லீரும் என் செய்தீர்? என்னை நகுதிரோ?
நல்ல நகாஅலிர் மற்கொலோ - யான் உற்ற
அல்லல் உறீஇயான் மாய மலர் மார்பு
புல்லிப் புணரப் பெறின்[14]

நெ. கலி. 142. 1-18.

தோழிமாருடன் விளையாடும் பொழுது சிரிக்காத நான் இப்பொழுது சிரித்து, அழுது, நாணம் இழந்து சத்தமாக பேசுகிறேன். இதற்கான காரணத்தை அறியாமல் நீர் எம்மை கேலி செய்கின்றீர். நான் இங்ஙனம்

நாணம் அற்றவளாக மாறியதற்கான காரணம் எது என்றும்; அது யாரால் நிகழ்ந்தது என்றும்; எங்ஙனம் நிகழ்ந்தது என்றும் எல்லாவற்றையும் எல்லோரும் அறிய உரைக்கிறாள் தலைவி இதனால் இப்பாடல் பெருந்திணையாயிற்று.

ஒரு குறிப்பிட்ட காலம் வரை பிரிவை ஆற்றியிருந்த தலைவி அகனைந்திணைக்குரிய உணர்வாகிய இருத்தல் என்னும் உரிப் பொருளைக் கொண்டிருந்தாள். ஆனால் எல்லை கடந்துவிட்ட பொழுது அவள் *தன் காதலை எல்லோருக்கும் உரைத்து பெருந்திணை ஒழுக்கத்தை மேற்கொள்கிறாள்*. இதற்கு காரணம் தலைவனின் கால நிலை நீட்டித்த பிரிவாகும். இப்பிரிவின் போது தலைவியின் அளவு தலைவனும் பிரிவுத் துயரத்தில் உழல்கிறான் என்பதையும் சங்கப்பாடல்கள் சுட்டுகின்றன.

**உடைமைச் சமூகத்தில் பெண் பதிவுகள்**

*முல்லை நிலத் தலைமக்களின் கால்நடை பொருளாதாரத்திலிருந்து அவர்களுக்குச் செல்வம் சேர்கிறது. அதனுடன் நிலையான இடத்தில் தங்கி மேற்கொள்ளப்படும் உழவுத் தொழிலும் வளர்ந்தது. இது ஒரு வளமையான புதுசமூக அமைப்புக்குக் கொண்டு சென்றது.* உழுவோர் உழுவித்துண்போர் என்னும் இரு பிரிவினர் தோன்றியது மருத நிலத்திலாகும். சங்கப் பாடல்களில் ஐரோப்பிய நாடுகளைப் போல் சுதந்திர அடிமைகள் இருந்தனர் என்பதற்கு ஒருசில குறிப்புகளைத் தவிர்த்து உறுதியான சான்றுகள் இல்லை. ஆனால் வர்க்கம் தோன்றிவிட்டதையும் பல படிநிலைகளைக் கொண்ட சமூக அமைப்பு உருவாகிவிட்டதையும் காணமுடிகிறது.

இச்சமூகத்தில்தான் முழுவதுமாக பெற்றோர் மட்டும் திருமணத்தை நிச்சயிக்கும் நிலை உருவாகிறது. இல்லக்கடன்களை ஆற்ற பெண்களுக்கான கடமைகள் கற்பிக்கப்பட்டு பெற்றோரால் தலைவனுக்கு மணம் முடித்து வைக்கப்படும் சூழல் உருவாகிறது. முல்லை நிலத்தில் தொடக்க கால கட்டத்தில் களவு ஒழுக்கம் மேற்கொண்டமை காணப்பட்டாலும் செல்வம் வளர்ந்த நிலையில் பெற்றோர் ஏற்பாடு

செய்து நடத்தி வைக்கப்பட்ட திருமணங்கள் நடந்தன என்பதையும் காணமுடிகிறது. மண வாழ்க்கை என்பது வாரிசுரிமைக்கான பற்றுறுதி என்பதை விளக்குகிறது பின்வரும் கூற்று,

> மணவாழ்க்கைக்குரிய மெய்யான பற்றுறுதி (fidelity) மனைக்குரியவன் தான் தேர்வு செய்த மணமகளோடு ஐக்கியமாவதைத் திருமணச் சடங்குகளால் நிலைப்படுத்திய பிறகு வாழும் இல்வாழ்க்கை என்று தமிழ் லெக்சிகன் விளக்குகிறது. உரிமையுடையோர் மணப்பெண்ணை மணமகனுக்கு மணமுடித்தலே கற்பு என்கிறார் தொல்காப்பியர். மணவாழ்விற்குரிய மெய்யான பற்றுறுதி என்பது திருமண பந்தத் தொடர்ச்சியின் மிக முக்கியமான அம்சமாகும். சங்க இலக்கியத்திலுள்ள குறிப்புகள் மெய்யான பற்றுறுதியையே உணர்த்துகின்றன.[15]
>
> கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 189.

*ஆண் பொருளாதாரம் நிலை கொண்ட பின் அவனுக்கான வாரிசுகளை உறுதி செய்யும் பொருட்டு திருமணம் நடைபெறுகிறது*. இது பேச்சளவில் கூறப்பட்ட ஒருதார மணமுறையாகும். ஒரு *பால்* மற்றொரு *பாலை* அடிமை படுத்துவதற்கான வாய்ப்பை இவ்வமைப்பு முறை ஏற்படுத்துகிறது. சமூக வரலாற்றில் முதன் முதலில் மருத நில பொருளாதார சமூகத்தில் *பால்* சச்சரவு உண்டாகிறது என எங்கல்ஸ் கூறுகிறார். குடும்ப கட்டுக்கோப்பு என்னும் நிலையில் இத்திருமண வாழ்வு முற்போக்கானது. வெளியில் ஒருதார மணம் என்றும் நடைமுறையில் ஆண் பரத்தை மேற்கொள்ள ஒப்புக் கொள்ளும் நிலை என்ற இருநிலை, சமூகத்தில் தோன்றுவதையும் காணமுடிகிறது.

> நாகரிகம் படைத்தவை அனைத்தும் எப்படி இரு தரப்பும், இரு பேச்சும், சுய முரண்பாடும் பகைமையும் கொண்டிருக்கின்றனவோ, அப்படிப்பட்டதே இதுவும்: ஒரு பக்கத்தில் ஒரு தார மண முறை, மறு பக்கத்தில் பொதுமகளிர் முறை – இதனுள் விபச்சாரம் என்ற அதன் மிகத் தீவிரமான வடிவமும் அடங்கும். மற்ற எந்தச்

சமுதாய உறவுமுறையையும் போலப் பொதுமகளிர் முறையும் ஒரு சமுதாய உறவுமுறையே. அது பழைய புணர்ச்சிச் சுதந்திரத்தின் தொடர்ச்சியே - ஆண்களுக்குச் சாதகமான தொடர்ச்சி. குறிப்பாக ஆளும் வர்க்கத்தினர் எதார்த்தத்தில் இதைச் சகித்துக் கொள்வது மட்டுமன்றி ஆர்வத்துடன் கடைப்பிடித்தாலும் அதைப் பேச்சளவில் கண்டிக்கிறார்கள். ஆனால் எதார்த்தத்தில் இந்தக் கண்டனம் விபசாரத்தில் ஈடுபடுகின்ற ஆண்களைத் தாக்கவில்லை. பெண்களைத்தான் தாக்குகிறது.[16]

பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், பக். 103-104.

*சங்க இலக்கியத்தின் மருதத் திணைப் பாடல்கள் முழுவதிலும் பரத்தமை ஒழுக்கமும் அதைத் தலைவி கடிதலும், வாயில் நேர்தலும் நிகழ்வதைக் காணமுடிகிறது. தலைவியானாலும் பரத்தையானாலும் பெண்கள் எந்த உரிமையும் இல்லாமல் வாழ்ந்துள்ளனர். ஒப்பீட்டளவில் தலைவியைக் காட்டிலும் பரத்தை சுதந்திரமானவளாக இருப்பதைக் காணமுடிகிறது. மேலும் தலைவி போல தலைவன் ஒருவனுடனே வாழும் இல்லக் கிழத்தியையும் காணமுடிகிறது.*

**தலைவி கூற்றில் பரத்தமை கடிதல்**

மருத நிலத் தலைவிக்கு வீட்டு வேலைகளைச் செய்வதும் தலைவன் எந்தப் பரத்தை வீட்டில் இருப்பான் எப்பொழுது வருவான் என எண்ணுவதும் வேலைகளாக இருந்துள்ளன. அவன் வீட்டுக்கு வந்த பொழுது ஊடுவதும் பின் கூடுவதையும் காணமுடிகிறது. அவளுக்கு ஊடலையும் கூடலையும் தவிர வேறு வழி அற்றவளாக இருக்கிறாள். பின்வரும் இப்பாடல்களில் இரு வகைப்பட்ட பெண்களைக் காணமுடிகிறது. தலைவனின் தலைவியாகிய பெண் பற்றிய பதிவுகளும் தலைவனின் பரத்தையாகிய பெண் பற்றிய பதிவுகளும் காணப்படுகின்றன.

அறிந்தேன், குதிரை தான்;
பால் பிரியா ஐங் கூந்தற் பல் மயிர்க் கொய் சுவல்,
மேல் விரித்து யாத்த சிகழிகைச் செவ் உளை,
நீல மணிக் கடிகை வல்லிகை, யாப்பின் கீழ்
ஞால் இயல் மென் காதின் புல்லிகைச் சாமரை,
மத்திகைக் கண்ணுறையாகக் கவின் பெற்ற
உத்தி ஒரு காழ், நூல் உத்தரியத் திண் பிடி,
நேர் மணி நேர் முக்காழ்ப் பல்பல கண்டிகை,
தார் மணி பூண்ட தமனிய மேகலை[17]

ம. கலி. 96. 7-15.

தலைவனின் பரத்தை ஒழுக்கம் காரணமாக தலைவி ஊடுகிறாள். *பரத்தையைக் குதிரையாக உருவகித்து பலவாறு கூறி தலைவனையும் அவளையும் இகழ்கிறாள். வெள்ளிவீதியார் ஒரு பாடலில் பரத்தமை ஒழுக்கம் மேற்கொண்டு திரும்பி வந்த தலைவனிடம் பெருங்கோபம் கொண்ட தலைவியைச் சித்திரிக்கிறார்.* தலைவனின் எதிர் நின்று பேசி, பரத்தை ஒழுக்கம் கொண்ட தலைவனை ஊடி, ஒருவனுக்கு ஒருத்தியாக வாழ வேண்டும் என்ற வேட்கையோடு உள்ளம் சென்று சேருவதையும் உரைக்கும் பாடல் இது.

சுரம் செல் யானைக் கல்உறு கோட்டின்
தெற்றென இறீஇயரோ - ஐய! - மற்றுயாம்
நும்மொடு நக்க வால்வெள் எயிறே;
பாணர் பசுமீன் சொரிந்த மண்டை போல
எமக்கும் பெரும் புலவுஆகி
நும்மும் பெறேஎம், இறீஇயர் எம்உயிரே.[18]

குறுந். 169.

இப்பாடலில் தண்ணீர் இல்லாத பாறையை முட்டி தண்ணீரைத் தேடி யானை தனது தந்தத்தை இழக்கும். அத்தகைய யானையைப் போல் தலைவி மீது அன்பில்லாத தலைவனிடம் மீண்டும் மீண்டும் அன்பு

செய்து மகிழ்ந்து சிரித்திருந்த தலைவி, தனது அழகிய பற்கள் உதிர்ந்து போகட்டும் எனக் கூறுவதாய் அமைந்துள்ளது மேற்கண்ட பாடல். தலைவியின் உயிர் மீன் இட்ட பாத்திரம் மீண்டும் மீன் வைப்பதற்கு உதவும் அதுபோல தலைவனை நினைத்த உயிர் வேறு யாரையும் எண்ணாத தன்மை உடையது என்றும் அத்தகைய உயிர் வெறுப்பை அளிப்பதாகவும் கூறியுள்ளார். இங்ஙனம் பரத்தமை ஒழுக்கத்தால் தலைவியின் காதல் வாழ்வு பாதிக்கப்பட்ட நிலையைப் பல சங்கப்பாடல்கள் சுட்டுகின்றன.

*ஒரு பெண் செல்வ செழிப்பில் தலைவியாக இருக்கிறாள். ஒருத்தி அச்செல்வத்தின் ஒரு பகுதியை எதிர்பார்த்து பரத்தையாக இருக்கிறாள்.* பெண்ணின் கற்பு, குற்றம் என்ற இரு முரண்பட்ட சமூக நிலைக்குப் பொருளாதார அடித்தளம் காரணமாக இருந்ததை அறியமுடிகிறது. எனினும் மேட்டிமைக் குடி மகளிரும் பொருளாதார உரிமை அற்றவர்களாக இருந்துள்ளனர். இவ்விரு பெண்களும் ஒப்பீட்டளவில் ஆண்களைக் காட்டிலும் சுதந்திரம் அற்றவர்களாக இருக்கின்றனர். இவ்விரு பெண்களும் அவர்களின் வாழ்க்கை நிலையும் அக்கால பொருளாதார நிலையின் விளைவாகும். ஒருபுறம் செல்வம் சேர மறுபுறம் வறுமை வளர்கிறது. இவற்றில் ஒன்று ஒன்றின் விளைவாகும். ஒரு பெண் குடும்பத் தலைவியாக இருப்பதற்கும் மற்றொரு பெண் பரத்தையாக இருப்பதற்கும் அச்சமூகத்தின் பொருளாதார அமைப்பு காரணமாக அமைகிறது. ஆண்கள் பரத்தையரை நாடிச் சென்ற அந்தச் சமூக அமைப்பு நிலப்பிரபுத்துவ சமூக அமைப்பாகும்.

மருத நில மகளிருக்குப் பிரிவுத் துயரோடு ஒரு வித சலிப்புத் தன்மையும் ஏற்படுகிறது. வெறும் வீட்டு வேலைகளைச் செய்து தலைவனின் ஒழுக்கக் கேட்டைச் சகித்து வாழும் தலைவியின் மனநிலை சோர்வுற்றதாக இருக்கிறது. இது பொருளாதார உற்பத்தியைப் பாதிக்கிறது. பெண்கள் சமூக உற்பத்தியில் இருந்து விலக்கி வைக்கப்பட்ட விதத்தைப் பின்வரும் கூற்று விளக்குகிறது.

வீட்டு நீர்வாகம் தனது பொதுத் தன்மையை இழந்தது. அது சமூகத்தின் அக்கறையைப் பெற்ற விவகாரமாக இனிமேல் இல்லை. அது தனிப்பட்ட சேவை ஆகிவிட்டது. மனைவி முதல் வீட்டு வேலைக்காரியாக மாறினாள். அவள் சமூக உற்பத்தியிருந்து வெளியே தள்ளப்பட்டாள். [19]

பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.115.

*இங்ஙனம் சமூக உற்பத்தியில் இருந்து வெளியே தள்ளப்பட்ட பெண்கள் தலைவன் மற்றும் வாயிலோருடன் பரத்தை குறித்து சச்சரவு செய்யும் அயற்சியான வாழ்க்கை வாழ்கிறாள்.* இது ஒரு பக்கத்தில் அவளிடமும் கூடா ஒழுக்கத்தை ஏற்படுத்திவிடுகிறது. இதனைப் பின்வரும் எங்கல்ஸின் கூற்றின் மூலம் அறியலாம்.

பொது மகளிர் முறையின் மூலம் சொகுசான வாழ்க்கை நடத்துகின்ற கணவனுக்குப் பக்கத்திலேயே புறக்கணிக்கப்பட்ட மனைவியும் நிற்கிறாள். ஆப்பிளில் ஒரு பாதியைத் தின்று விட்ட பிறகு முழு ஆப்பிளைக் கையில் வைத்திருக்க முடியாது என்பதைப் போல, முரண்பாட்டில் ஒரு பாதி இல்லாமல் மறு பாதியை மட்டும் கொள்வது சாத்தியமல்ல. எனினும் ஆண்கள் வேறுவிதமாக நினைத்துக் கொண்டதாகத் தோன்றுகிறது – மனைவியர்கள் அவர்களுக்குப் பாடம் புகட்டுகின்ற வரை. ஒரு தார மண முறையுடன் அதற்கு முன்பு இல்லாத இரண்டு நிரந்தரமான சமுதாயப் பிரமுகர்கள் காட்சியில் தோன்றுகிறார்கள் – மனைவியின் கள்ளக் காதலனும் மனைவியால் வஞ்சிக்கப்பட்ட கணவனும். பெண்கள் மீது ஆண்கள் வெற்றி பெற்றுவிட்டார்கள், ஆனால் வெற்றியாளர்களுக்கு முடி சூட்டுகிற வேலையைத் தோற்றவர்கள் பெருந்தன்மையுடன் மேற்கொண்டார்கள். மனைவியின் கூடா ஒழுக்கம்–அது தடைசெய்யப்பட்டது. கடுமையாகத் தண்டிக்கப்பட்டது. ஆனால் அதை ஒழிக்க முடியவில்லை – ஒரு தார மண முறைக்கும் பொதுமகளிர்

முறைக்கும் பக்கத்தில் தவிர்க்க முடியாத சமுதாய உறவுமுறையாகி விட்டது.[20]

பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.104.

சங்க இலக்கியம் உயர்ந்த ஒழுக்கத்தினை வலியுறுத்தும் பொருட்டு தொகுக்கப்பட்ட நூல்களின் தொகுப்பாகும். ஆகையால் சங்க இலக்கியத்தில் தலைவியர் பிற ஆடவருடனும் தொடர்பு கொண்டிருந்த செய்தி ஏதும் காணப்படவில்லை. இருப்பினும் சமூக நடைமுறை இங்ஙனம் இருந்திருக்க வாய்ப்பில்லை. ஆகையால் தான் இது போன்ற ஒழுக்கங்களைப் பெருந்திணை என பாகுபடுத்திச் சுட்டினர். ஆனால் காரண காரியத் தொடர்போடு ஆராயுங்கால் எங்கல்ஸ் கூற்றின் உண்மையை அறியமுடியும்.

**தலைவி கூற்றில் பாணன்**

பரத்தை ஒழுக்கம் மலிந்த மருத நிலத்தில் தலைவியிடமும் தலைவனிடமும் வாயில்கள் நிகழ்கின்றன. ஊர் சுற்றித் திரிந்து கலை வளர்த்த கலைஞர்கள் வாயில்கள் என்னும் தகுதி குறைந்த நிலையில் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் தூது செல்கின்றனர். இதனைப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

அன்னாய்! இவன் ஓர் இள மாணாக்கன்;
தன் ஊர் மன்றத்து என்னன் கொல்லோ?
இரந்தூண் நிரம்பா மேனியொடு
விருந்தின் ஊரும் பெருஞ் செம்மலனே [21]

குறுந். 33.

என பாணனை எள்ளுகிறாள் தலைவி. இங்கு பாணன் ஆண் எனினும் தலைவி பெண் எனினும் ஆண் தாழ்ந்தவனாகவும் பெண் உயர்ந்தவளாகவும் காணப்படுகிறாள். அவனது நா வன்மை சொந்த ஊரில் மட்டும் அல்லாது விருந்து ஊரிலும் செம்மாந்துள்ளது என நயக்கிறாள். மற்றொரு சங்கஇலக்கியப் பாடலில் பாய்ந்து வந்த பசுவைக்

கண்டு பயந்து ஒதுங்குவதற்காக தலைவியின் இலத்தில் புகுந்த பாணனைக் தலைவி தோழியிடம் கேலி செய்வதாக அமைந்துள்ளது.

எருமை தெளிந்த நீரில் இறங்கி அதைக் கலக்கிக் கெடுத்து அதில் உள்ள குவளை மலரை உண்டு அசை போட்டுக் கொண்டே தன்னுடைய கொட்டடிக்கு வந்து சேரும். அத்தகையத் தன்மை கொண்ட ஊரைச் சேர்ந்த தலைவன் எனக் கூறுகிறாள். தலைவனை எருமையுடன் ஒப்பிட்டு பரத்தை ஒழுக்கத்தைச் சுட்டுவதைக் காணமுடிகிறது. *பாணன் தலைவனைப் புதிய பரத்தையுடன் கூட்டுவித்தவன் என்பதாகக் கூறி அவன் பசுவிற்குப் பயந்து, தன் யாழினைக் கீழே போட்டுவிட்டு வீட்டிற்குள் புகுந்த காட்சி நகைப்புக்குரியதாகக் கூறுகிறாள். இதுபோலப் பலப் பாடல்களில் பாணர்கள் இழிவு படுத்தப்படுவதைக் காணமுடிகிறது. இது சமூகப் படிநிலையில் பெண்களுக்குக் கீழ் ஆண்கள் இருந்துள்ள நிலையைச் சுட்டுகிறது.*

**தோழி கூற்றில் பரத்தமை கடிதல்**

தோழி தலைவியின் நன்மை விரும்புபவளாக இருக்கிறாள். தலைமக்களுக்கு இடையில் வாயிலாகச் செயல்படுகிறாள். தலைவன் பரத்தையிடம் இருந்துவிட்டால் தலைவியின் நிலை மோசமானதாக மாறிவிடும். அதைத் தடுக்க பரத்தை இலத்திற்குச் சென்று தலைவனுக்கு அறிவுரை கூறும் திறன் கொண்டவளாகத் தோழி இருக்கிறாள். தலைவன் பரத்தை இல்லம் புகேன் என்று சூள் உரைத்து, அதை விடுத்து பரத்தை இல்லத்தில் இருக்க, அவனிடம் வாயிலாக சென்ற தோழி, தலைவியிடமிருந்து அவனது சூளினைத் திரும்பப் பெற்றுச் செல்லும்படி கூறுகிறாள். இதனைப் பின்வரும் பாடல் விளக்குகிறது.

பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்புஅணைத் துயிற்றி,
ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்

தொண்டி அன்ன என்நலம் தந்து
கொண்டனை சென்மோ – மகிழ்ந! – நின் சூளே[22]

குறுந். 238.

சூள் பிழைத்தோர்க்குத் தீங்கு நேரும் என்பது அக்கால நம்பிக்கை. பரத்தையிடம் சென்றிருந்தாலும் தலைவனுக்குத் தீங்கு நேர்ந்துவிடக் கூடாது என எண்ணும் தலைவியின் மனநிலை அக்கால பெண்களின் மனநிலைக்குக் காட்டாகும். வாரிசுரிமையாகக் கிடைத்த சொத்தில்தான் உழைக்காமல் செல்வம் பெறும் வளமையான சமூகச் சூழலில் தலைவன் பல பெண்டிருடன் இருந்தாலும் தலைவி அவனை எண்ணி துயரம் அடைகிறாள். இது தனிச் சொத்துடைமையில் ஆணின் அதிகார நிலைப் பரவலைக் காட்டுகிறது.

**பாணர் கூற்றில் பரிசில் நீட்டித்தல்**

பாணர் என்போர் தொடக்க காலத்தில் சிறப்புற்று இருந்த ஒரு மக்கட் பிரிவினர் ஆவர். பெருங் கலைஞர்களாக இருந்தோர் வரலாற்றின் ஒரு கட்டத்தில் வர்க்கத்தின் மேல் தட்டில் இருந்தோருடன் இயல்புடன் பழகும் தன்மை கொண்டோராக இருந்துள்ளனர். இதனை கைலாசபதியின் கூற்றின் மூலம் அறியலாம்.

> பல பாடல்களால் ஆதாரம் கூறப்படுவதுமான மற்றோர் உண்மை இக்கலைஞர்கள் சமுதாயத்தில் பெற்றிருந்த நிலை குறித்ததாகும். அவை சொல்லுமாறு அவர்கள் தலைவன் தலைவியரின் காதல் விவகாரங்களிலும் வீட்டுச் சண்டைகளின் இடையேயும் நடுவர்களாக இருந்தனர். அந்த அளவுக்கு அவர்கள் செல்வக் குடும்பங்களின் வீடுகளுக்குள் எளிதாகச் சென்று பழகும் நிலை பெற்றிருக்க வேண்டும்.[23]

க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, பக். 138-139.

பாணர்க்கான கூற்றுகளைக் குறித்து கூறும் போது தொல்காப்பியர் தலைவியுடன் பாணர்க்குக் கூற்று நிகழும் என்றும், *தலைவியின்*

*தன்மையைத் தலைவனுக்கு எடுத்துரைக்கும் போது பாணர்க்குக் கூற்று நிகழும் என்றும் கூறுகிறார். இதனைப் பின்வரும் நூற்பா சுட்டுகிறது.*

கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்,
மெல்லியற் பொறையும், நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலும், சுற்றமும் ஓம்பலும்,
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்,
முகம் புகல் முறைமையின் கிழவோர்க்கு உரைத்தல்
அகம் புகல் மரபின் வாயில்கட்கு உரிய[24]

தொல். 1098.

ஆகையால் தலைவியின் நற்செயல்களை முகம் மலர்ந்து தலைவனுக்கு உரைத்தல் என்னும் நிலையில் பாணர்க்குக் கூற்று நிகழும் என்று கூறுகிறார். இவர் தலைவர்களைப் பரத்தையரிடம் கூட்டுவிக்கும் செயலையும் செய்துள்ளனர். ஒரு புறம் தலைவியின் துயரைப் பொறுக்க மாட்டாமல் தலைவனிடம் வாயிலாகச் சென்று அவனைத் தலைவியுடன் கூட்டுவிப்பதையும் காணமுடிகிறது. இப்பாணர்கள் பேரரசர்கள் அவர்களுக்கு கீழ் நிலையில் இருந்த சமூகத் தலை மக்களுடன் சிறப்புடன் இணைந்திருந்தமையைப் பின்வரும் கூற்று தெளிவுபடுத்துகிறது.

சிறுபாணர்களோ வேந்தர்கள், குறுநில மன்னர்கள், முதுகுடி மன்னர்கள், சீறூர் மன்னர்கள், நிலக்கிழார்கள், பெருந்தனக்காரர்கள், இன்னும் பிற வகையான முக்கியத் தலைவர்களை விதந்து போற்றிப் பரிசில் பெற்று வாழ்ந்தனர். இன்னும் சில பாணர்கள் சிற்றூகளில் வாழ்ந்த பல குடும்பத்தாரோடு நெருக்கமான உறவு கொண்டு இருந்தனர். [25]

பக்தவத்சல பாரதி, பாணர் இனவரைவியல், ப. 74

ஒப்பீட்டளவில் பேரரசர்களைக் காட்டிலும் அவர்களுக்கு அடுத்த நிலையில் உள்ள சமுதாயத் தலைவர்கள் பாண் சமூகத்தாரை அதிக அளவில் பாதுகாத்துள்ளனர். *மூதூர் மன்னர்களும், குறுநில மன்னர்களும்*

புலவர்களைப் போற்றியுள்ள செய்தியைச் சங்ககாலச் சமூகத்தில் காணமுடிகிறது. ஆனால் பேரரசுகள் பரிசில் நீட்டித்து புலவர்களை இழிவு படுத்தியுள்ளனர். இதனைப் பரிசில் அளிக்காத அல்லது நீட்டித்த புலவர்களின் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

பெருங்குன்றூர் கிழார் சேரமான் குடக்கோச் சேரல் இரும்பொறையை பரிசில் நீட்டித்தமைக்காக பாடிய பாடலில் தனது மனைவி குறித்து கூறுகிறார்.

செயிர் தீர் கொள்கை எம் வெங் காதலி
உயிர் சிறிது உடையள் ஆயின், எம்வயின்
உள்ளாது இருத்தலோ அரிதே;அதனால்,
அறன் இல் கூற்றம் திறன் இன்று துணியப்
பிறன் ஆயினள் கொல்? இறீஇயர், என் உயிர்; என
இடுக்கண் மனையோள் தீரிய[26]

புறம். 210. 5-11.

இதே போன்று மற்றொறரு புறநானூற்றுப் பாடலிலும் பாணரின் முதிய தாய் மற்றும் மனைவி வறுமையினால் துன்புறும் நிலை கூறப்பட்டுள்ளது. *வறுமை நிலையில் வாழும் பாண் குலத்தோரின் மனைவி மற்றும் சுற்றம் வறுமையில் வாடிய நிலை குறுநில சீறூர் மன்னர்கள் காலத்தில் இல்லை.* குறுநில மன்னர்களும் சீறூர் மன்னர்களும் பேரரசுகளால் அழிக்கப்பட்ட காலம் பாண் மக்கள் வறுமையுற்ற காலமாக இருந்திருக்க வாய்ப்புகள் உண்டு.

எவ்வி இழந்த வறுமையர் பாணர்
பூஇல் வறுந்தலை போலப் புல்லென்று
இனைமதி வாழியர் நெஞ்சே![27]

குறுந். 19. 1-3.

எவ்வி என்னும் மன்னன் இறந்ததால் பாணர் வறுமை அடைந்தனர். அவர்களைப் போல தலைவனைப் பிரிந்த தலைவியின் நெஞ்சம்

வருந்துகின்ற நிலையைக் குறிக்கிறார் புலவர். பேரரசர்களும் பாணர்களை ஆதரித்துள்ளனர். அவர்களைக் காட்டிலும் பாணர்களுக்குப் பேராதரவு வழங்கியோர் குறுநில மன்னர்களும், முதுகுடித் தலைவர்களுமாவர். கலைஞர்கள் அக்கால மக்களுடன் கொண்டிருந்த உறவைப் பின்வரும் கூற்று தெளிவுபடுத்துகிறது.

> சங்க கால நாடோடிச் சமூகமாய் வாழ்ந்த மரபினர் சமூகத்தில் தலைவனின் ஊடல் தீர்க்கும் வாயில்களாகவும், விறலியர் தலைவியின் தோழியராகவும், தலைவனின் நண்பனாகப் பாணர்கள் இயங்கியதும் சமூகத் தளத்தில் தொடர்பு ஊடகமாய் இவர்கள் பயன்படுத்தப்பட்டதும் அறியமுடிகிறது. எனினும் விறலியரைப் பற்றி இல்லற மகளிர் கொண்ட அச்சத்தை நற்றிணை (170) பதிவு செய்துள்ளது. அரசு சமூகத் தளங்களில் இயங்கிய கலைஞரகள் கலைகளால் உயர்வாக மதிக்கப்பட்டதும் பிற ஒழுக்கங்களால் சுட்டப்பட்டதும் இலக்கியங்கள் சுட்டி நிற்கின்றன.[28]

க காந்திதாசம், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப. 109.

கலைஞர்கள் பொதுவாகக் குழுவாக இயங்கியுள்ளமையைக் காணமுடிகிறது. ஆங்காங்கே தனித்து இயங்கியமையையும் காணமுடிகிறது. புலவர்கள் சிறந்த அரசியல் அறிஞர்களாகவும் இருந்துள்ளதைச் சங்கப் பாக்கள் வழி அறிய இடமுள்ளது. இதற்கு ஔவையார், காக்கைப் பாடினியார் போன்றோரைக் கூறலாம்.

**பேரரசு காலத்தில் பெண்**

*பேரரசுகளின் உருவாக்கத்தில் உற்பத்தி வகைப்பட்ட வேலைகளைச் செய்வதைக் காட்டிலும் போர் செய்வது அதன் மூலமாகக் பிற அரசர்களின் செல்வங்களைக் கொள்ளையடிப்பது எளிமையானதாகவும் கௌரவமானதாகவும் இருந்துள்ளது.* தொடக்கக் காலத்தில் ஆக்கிரமிப்புக்காகவும் நில விரிவாக்கத்துக்காகவும் போர் செய்யப்பட்டது.

பின் கொள்ளையடிப்பதற்காக மட்டும் போர் செய்யப்பட்டது. அது ஒரு வாடிக்கையான தொழில் முறையாகப் போற்றப்பட்டது.

அரசுரிமை பரம்பரையாக அமைந்தது. தொடக்கத்தில் இது சகித்துக் கொள்ளப்பட்டது எனவும், பிறகு உரிமையாகக் கோரப்பட்டது எனவும், கடைசியில் அபகரிக்கப்பட்டது எனவும் அரசுரிமை குறித்து எங்கல்ஸ் குறிப்பிடுகிறார். மேலும், பேரரசு உருவாகிய சமூகத்தின் பொருளாதார நிலைமைகளை எங்கல்ஸ் பின்வருமாறு விளக்குகிறார்.

> தொழில்துறையும் பண்டப் பரிவர்த்தனையும் முன்னேறிய பொழுது விவசாயம், கைத்தொழில், பல்வேறு சிறு தொழில்களிலுள்ள பல வகைகள், வர்த்தகம், கப்பலோட்டுதல் முதலிய உற்பத்தியின் பல்வேறு பிரிவுகளுக்கு இடையில் உழைப்புப் பிரிவினை முன்னை விட அதிக முழுமையாக வளர்ச்சியடைந்தது.[29]

பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.179.

தேவைக்காக உற்பத்தி செய்யப்பட்ட நிலை மாறி வர்த்தகத்திற்காக உற்பத்தி செய்தல் என்னும் ஒரு முறை வளர்ந்தது. இதனால் வர்த்தகர் ஒரு தனித்த வர்க்கமாக வளரத் தொடங்கினர். இந்த வர்க்கம் உற்பத்தியில் எவ்வித பங்கும் வகிக்காமல் உற்பத்தியை நிர்ணயிக்கிற சக்தியாக மாறுகின்றனர். இந்நிலை செல்வ குவிப்பைத் துரிதப் படுத்தியது. பேரளவிலான உற்பத்தியை ஊக்குவித்தது. இத்தகைய சமூகத்தில் பெரும்பாண்மையான பெண்களின் நிலை துன்பகரமானதாக இருந்தது. பெண்கள் இந்நிலையை அடைந்த வளர்ச்சிப் போக்கை பின்வருமாறு விளக்குகிறார் எங்கல்ஸ்.

> வேட்டையாடும் சமூகத்தின் பெண்ணுக்கும் வேளாண் சமூகத்தின் பெண்ணுக்கும் இடையிலான வேறுபாடு உற்பத்தி முறை பற்றியதாகவே உள்ளது. *ஆதிவேளாண் சமூகம் வரையிலான மனித சமூகத்தின் வளர்ச்சியில் உற்பத்தியிலும், மறு உற்பத்தியிலும் பெண் மையமான இடத்தில் இருந்தாள்.* ஆனால் பெருவீத விவசாயம், நகரங்களின் வளர்ச்சி ஆகியவை காரணமாய் ஏற்பட்ட

*சமூகத்தில் தாய் வழிச்சமூகம் மறைந்து ஆணாதிக்க தந்தை வழிச்சமூகம் உருவானது. ஆண் வழி ஒருதார மணம் மீதான குடும்பம் ஏற்பட்டது. பெண் என்றென்றைக்கும் அடிமையாக்கப்பட்ட நிகழ்வுப் போக்கு தொடங்கியது. உற்பத்திச் சாதனங்களின் வளர்ச்சி குடும்ப வடிவங்களிலும், பெண் மீதான ஒடுக்கு முறையிலும் மாற்றங்களை ஏற்படுத்தியது.* அடிமை சமுதாயத்திலும், நிலப் பிரபுத்துவ சமுதாயத்திலும் நிலவிய குடும்ப வடிவங்கள் அந்த சமூக ஏற்பாட்டின் பொது வரையறைக்கும், பொருளாயத நலனுக்கும், வர்க்க வாழ்நிலைக்கும் உட்பட்டதே ஆகும். ஆண், பெண் பற்றிய சமூக மதிப்பீடுகள் இதிலிருந்தே தோன்றுகின்றன.[30]

பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.Xix.

என்னும் கூற்றின் மூலம் ஆண் பரத்தமை ஒழுக்கம் மேற்கொள்வதும் பெண் அதைப் பொறுத்துக் கொண்டு வாழ்வதும் அச் சமூகத்தின் வர்க்க வாழ்நிலைக்கு உட்பட்டது என்பதை அறியமுடிகிறது. ஒரு சில பெண்கள் பேரரசி என்னும் நிலையை அடைந்தனர். இத்தகைய பெண்கள் எண்ணிக்கையில் மிகச் சிலராவர். இவர்கள் சமூக பொருளாதார உற்பத்தியில் தீர்மானகரமான பங்கை வகிக்க முடியவில்லை. சங்கப் பாடல்களில் பேரரசியர் அரிதாக காணப்படுகின்றனர். அவர்கள் சதாரண பெண்களைப் போல பிரிவுத் துயரத்தில் உழல்வோராகவும், கைம்மை நோன்பிருந்து துயருறுவோராகவும் இருந்துள்ளனர்.

## முது பெண்டிர் கூற்றில் அரசியைத் தேற்றுதல்

முல்லைப் பாட்டில் அரசனின் பிரிவை ஆற்ற முடியாமல் துயருரும் அரசியின் நிலை காட்டப்படுகிறது. இப்பாட்டில் அகம் புறம் ஆகிய இரண்டு நிகழ்வுகளும் ஒருங்கே காட்டப்பட்டுள்ளன. இப்பாட்டில் புறப்பொருள் தன்மை காணப்படினும் தலைவன் பெயர் சுட்டப்படவில்லை. இதனால் இது சிறந்த அகப்பொருட் பாடலாகவும் அமைந்துள்ளது. அரண்மனையில் அரசிக்குச் சேகவம் செய்யும் முது

பெண்டிர் அரசியின் துயரை ஆற்றுவதாக பின்வரும் பகுதி அமைந்துள்ளது.

சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி, ஆய்மகள்
நடுங்குசுவல் அசைத்த கையள், "கைய
கொடுங்கோற் கோவலர் பின்நின்று உய்த்தர
இன்னே வருகுவர், தாயர்" என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம்: அதனால்
நல்ல, நல்லோர் வாய்ப்புள்; தெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருதல், தலைவர், வாய்வது; நீநின்
பருவரல் எவ்வம் களை, மா போய்; என
காட்டவும் காட்டவும் காணாள், கலுழ்சிறந்து,
பூப்போல் உண்கண் புலம்புமுத்து உறைப்ப[31]

முல்லை. 12-23.

இப்பாடலில் ஆயர் மகள் பசுவைப் பார்த்து நின் தாயார் வருவார் என்று கூறியது நன்னிமித்தமாகக் கருதப்படுகிறது. தலைவர் போர் முடித்து கவர்ந்த செல்வத்தைக் கொண்டு உடனே வருவார் ஆகையால் ஆற்றி இருக்குமாறு முது பெண்டிர் அரசியைத் தேற்றுகின்றனர். நெடுநல் வாடையிலும் தலைவியாக அரசி சுட்டப்படுவதைக் காணமுடிகிறது. இவ்விரு பாடல்களிலும் அரசி தலைவனைப் பிரிந்த தலைவி என்ற நிலையில் சுட்டப்படுகின்றனர்.

முல்லை நிலத்தில் தலைமக்கள் பிரிந்து இருப்பினும் தலைவி குடும்பக் கடன்களைச் செய்து இருந்தமைக் காணப்படுகிறது. ஆனால் அரசிக்கு எவ்வகையான கடமைகள் இருந்தன என்பவை ஏதும் சங்கப் பாடல்களில் சுட்டப்படவில்லை.

வேந்தர்கள் பாணர்களுக்குப் பரிசு வழங்குவதாக பல பாடல்கள் இடம்பெற்றிருக்கின்றன. ஆனால் அவற்றில் எதிலும் அரசியின்

பங்களிப்பு குறித்த செய்திகள் இல்லை. இப்பெண்களுக்குச் சமூக பொருளாதார இயக்கத்தில் என்ன பங்கு என்பதை அறியமுடியவில்லை. அரசன் இறந்தால் அரசியும் கைம்மை நோன்பு நோற்க வேண்டும் என்பதை ஒரு சில பாடல்களில் காணமுடிகிறது.

இப்பெண்கள் உழைக்கும் பெண்களைப் போல எந்த உரிமையும் இல்லாமல் இருந்திருக்க வாய்ப்பு இல்லை. அவர்களுக்கான எல்லா வசதியும் கலை நுகர்ச்சியும் அரண்மனையில் கிடைக்கப் பெற்றதால் அவர்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருக்க முடியும். ஒரு கீழ்தட்டு ஆண் மகனைக் காட்டிலும் இவ்வரசியர் சுதந்திரத்துடனும் மகிழ்ச்சியுடனும் வாழ்ந்திருக்க முடியும். ஆனால் பொருளாதார அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட்டமைக்கான வாய்ப்புகள் குறைவாக இருந்துள்ளன. இதற்கு அவர்களின் வர்க்க நிலை காரணமாக உள்ளது.

**புலவர் கூற்றில் பாரி மகளிர்**

பேரரசுகள் உருவாகிவிட்ட காலத்து அவர் தம் நில எல்லைகளை விரிவுபடுத்த குறுநில மன்னர்களிடமும் மூதூர் தலைவர்களிடம் போரிட்டு வென்ற செய்திகளைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. தோல்வியுற்ற குறுநில மன்னர்களின் நிலையைக் கபிலர் பாடல்களில் காணமுடிகிறது. பாரி இறந்துபட்ட போது கபிலர் பாரி மகளிரை நல்ல முறையில் வாழ வைக்க முயன்ற நிலையைக் காணமுடிகிறது. கபிலர் பாடல்கள் மற்றும் அங்கவை, சங்கவை பாடல்களில் துயருறும் மன்னனின் பெண்கள் குறித்த பதிவுகளைக் காணமுடிகிறது.

இவர் யார்? என்குவை ஆயின், இவரே
ஊருடன் இரவலர்க்கு அருளி, தேருடன்
முல்லைக்கு ஈத்த செல்லா நல் இசை,
படுமணி - யானை, பறம்பின் கோமான்
நெடுமாப் பாரி மகளிர்; யானே
தந்தை தோழன்; இவர் என் மகளிர்;[32]

புறம். 201. 1-6.

*என பாரி மகளிரை இருங்கோவேளிடம் கொண்டு சென்ற கபிலர் அவர்களை ஏற்றுக் கொண்டு பாதுகாக்குமாறு வேண்டுகிறார். ஒரு குறுநில மன்னர் தோற்கடிக்கப்பட்டமையால் அவன் மக்கள் தனித்து வாழ முடியாத நிலை இருந்துள்ளது. இருங்கோவேள் மூவேந்தருக்கு அஞ்சி பாரி மகளிரை ஏற்கவில்லை என்னும் செய்தியையும் அறியமுடிகிறது. இதன்மூலம் குறுநில மன்னர்களை மூவேந்தர் அச்சுறுத்தினர் எனக் கொள்ள இடமுள்ளது. பேரரசு காலத்தில் தோற்கடிக்கப்பட்ட பெண்கள் பாதுகாப்பின்றி இருந்துள்ளதையும் அறியமுடிகிறது.*

**புலவர் கூற்றில் மறமகளிர்**

பேரரசு உருவாக்கதில் போரின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது. ஆண்கள் போருக்குச் சென்றனர். *பெண்கள் போர் உணர்வை ஊட்டி பிள்ளைகளை வளர்த்தனர்.* பெண்பாற் புலவர்களின் பாடல்களிலும் ஆண் பிள்ளையின் சிறப்புகள் பாடப்பட்டுள்ளன. எல்லா நிலங்களிலும் ஆண்களின் முக்கியத்துவம் பாடப்பட்டுள்ளது. அவர்கள் போர் பொருளாதாரத்திற்கு ஆதாரமாக இருந்துள்ளனர். பின்வரும் புறப்பாட்டில் புலவர் ஒரு மறத் தாயின் செயலை வியக்கிறார்.

கெடுக சிந்தை; கடிது இவள் துணிவே;
மூதில் மகளிராதல் தகுமே;
மேல்நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை
யானை எறிந்து, களத்து ஒழிந்தனனே;
நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்,
பெரு நிரை விலக்கி, ஆண்டுப் பட்டனனே;
இன்றும், செருப்பறை கேட்டு, விருப்புற்று, மயங்கி,
வேல் கைக் கொடுத்து, வெளிது விரித்து உடீஇ,
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி,
ஒரு மகன் அல்லது இல்லோள்,
'செருமுகம் நோக்கிச் செல்க' என விடுமே![33]

புறம். 279.

வீரத்தைப் போற்றுதல் புலவர்களின் கடமையாக இருந்துள்ளது. அது மட்டுமின்றி அது அக்காலத் தேவையாகவும் இருந்துள்ளது. சமூகம் முழுமையும் வீரத்தைப் போற்றும் தன்மையைக் காணமுடிகிறது. சமூக உறுப்பினர்கள் அனைவரும் ஒரு நிகழ்வுக்கு முக்கியத்துவம் அளிக்கும் போது அந்நிகழ்விற்கு ஆதரவு கூடுகிறது. ஆகையால் அந்நிகழ்வு மேலும் மேலும் நடைபெறுகிறது. இதற்குப் போரை உதாரணமாகக் கூறலாம்.

பெண்கள் மென்மையான இயல்புடையவர் என்ற போதும் போரைச் சமூக முன்னேற்றத்திற்கான செயல்பாடாக உணர்ந்துள்ளனர். ஆங்காங்கே போரைத் தவிர்க்க புலவர்கள் தூது சென்ற போதும் பெரும்பாண்மையான பாடல்கள் போரை வற்புறுத்தி எழுதப்பட்டுள்ளன. அதற்குப் பெண்பாற் புலவர்களும் விலக்கல்ல.

**மறமகள் கூற்றில் மரணத்தின் துயரம்**

போரில் மரணமடைவதென்பது இயல்பாகக் கருதப்பட்டது. போரில் இறப்பது வீரம் என்றும், போரில் இறந்தவர், விழுப்புண் பெற்றவர் சொர்க்கம் புகுவர் என்பன போன்ற நம்பிக்கைகளும் அம்மக்களிடம் காணப்பட்டன. இருப்பினும் போரில் இறந்த தனது கணவனை எண்ணி வருந்தும் மனைவியின் நிலைகளையும் பாடல்கள் விளக்குகின்றன. தன் கணவனின் மரணத்திற்கு அவனது தாய் உறும் துயரை எண்ணி மனைவி தவிப்பதாக அமைந்துள்ளது பின்வரும் பாடல்.

இளையரும் முதியரும் வேறு புலம் படர,
எடுப்ப எழாஅய், மார்பம் மண் புல்ல,
இடைச் சுரத்து இறுத்த மள்ள! விளர்த்த
வளை இல் வறுங்கை ஓச்சி, கிளையுள்,
'இன்னன் ஆயினன், இளையோன்' என்று
நின் உரை செல்லும் ஆயின், 'மற்று
முன் ஊர்ப் பழுனிய கோளி ஆலத்து,
புள் ஆர் யாணர்த்தற்றே, என் மகன்
வளனும் செம்மலும் எமக்கு' என நாளும்

ஆனா புகழும் அன்னை
யாங்கு ஆகுவள் கொல்? அளியள் தானே![34]

புறம். 254.

போருக்குச் சென்ற இளைஞரும் முதியோரும் அவரவர் வீடுகளுக்குச் சென்றனர். நீ இங்கே உன்னை எடுத்தாலும் எழுந்திருக்கவில்லை. நான் என் வளைகளை கலைந்துவிட்டு வெறுங் கைகளை தலைமேல் வைத்துக் கொண்டு என் இளைய கணவன் இறந்துவிட்டான் என்று சுற்றத்தாரிடம் புலம்பிச் செல்வேன். ஊரில் உள்ள பெரிய ஆலமரத்தில் பறவைகள் வந்து தங்கி வாழும் தன்மையை ஒத்தது என் மகனின் செல்வமும் தலைமையும் என நாளும் சொல்லிக் கொண்டிருக்கும் உன் அன்னைக்கு உன் இறப்பைச் சொல்ல, அவள் என்ன ஆவாளோ, பாவம் அவள் நிலை எனக் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. பரிதாப உணர்வைத் தோற்றுவிக்கும் இப்புறப்பாடலில் போரின் தன்மை குறித்தோ அதனால் ஏற்படும் இது போன்ற உயிரிழப்புகள் குறித்தோ கூறப்படவில்லை.

மற்றொரு பாடலிலும் தலைவனை இழந்த தலைவி உன் பிரிவை என்னால் ஆற்றமுடியாது. ஆனால் அதற்காக நீ வருத்தம் கொள்ளாதே. உன்னோடு போர் செய்ய வந்த இளைஞர்களுடன் போரிட்டு மகிழாமல் இறந்துவிட்டாய். கைவளை இன்றி வெறும் கையைத் தலையில் வைத்துக் கொண்டு நம் சுற்றத்திற்கு இதை தெரிவிப்பேனோ, என்ன செய்வேனோ, எனக்கு சொல் என தன் தலைவனின் உடலிடம் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல்.

மேலும், தலைவனின் பிரிவைக் காட்டிலும் மீண்டும் போர் செய்ய அவன் இல்லை என்னும் தலைவியின் வருத்தமே மீதுறுகிறது. இதன் மூலம் போரின் முக்கியத்துவமும், போரைப் போற்றி பாட வேண்டிய அக்கால சமூக பொருளாதார நிலையையும் அறியமுடிகிறது.

## கைம்மை நோன்பு

சங்க காலத்தின் முக்கிய பொருளார நடவடிக்கையாக போர் இருந்த போது, உயிரிழப்பும் பேரளவில் இருந்துள்ளது. இதனால் அதிக அளவிலான பெண்கள் கைம்பெண்களாக மாறினர். பொருளாதார நிலையில் மேல் நிலையில் இருந்த பெண்களால் இக்கைம்மை நோன்பு தீவிரமாக கடைபிடிக்கப்பட்டிருந்ததையும் காணமுடிகிறது. இது பெண்களை ஒழுக்கக் கட்டுக்குள் வைத்திருக்கும் முயற்சியாகும். சொத்து கைமாறிவிடும் அபாயத்திலிருந்து சொத்தைக் காப்பாற்ற உடைமை வர்க்கம், தலைவனை இழந்த பெண்கள், மறுமணம் செய்து கொள்ள தடைவிதித்திருந்தச் சமூகத்தில் இக்கொடுமைகள் நிகழ்ந்துள்ளது.

என்னை மார்பில் புண்ணும் வெய்ய;
நடு நாள் வந்து தும்பியும் துவைக்கும்;
நெடு நகர் வரைப்பின் விளக்கும் நில்ல;
துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்;
அஞ்சுவர குராஅல் குரலும் தூற்றும்;
நெல்நீர் எறிந்து விரிச்சு ஓர்க்கும்
செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா;
துடிய! பாண! பாடு வல் விறலி!
என் ஆகுவிர்கொல்? அளியிர் நுமக்கும்
இவண் உறை வாழ்க்கையோ, அரிதே! யானும்
மண்ணுறு மழித் தலைத் தெண் நீர் வார
தொன்று தாம் உடுத்த அம் பகைத் தெரியற்
சிறு வெள் ஆம்பல் அல்லி உண்ணும்
கழி கல மகளிர் போல,
வழி நினைந்திருத்தல், அதனினும் அரிதே![35]

புறம். 280.

தனது கணவனின் இறப்பை முன்னறிவிக்கும் நிகழ்வுகளாக, நண்பகலில் வண்டுகள் ஒலித்தல், மாளிகைகளில் ஏற்றி வைத்த

விளக்குகள் அணைதல், உறங்காத கண்கள் துயிலுதல், கூகைகள் கூவுதல், செம்முது பெண்டிர் கேட்ட விரிச்சியும் பொய்யாதல் போன்றவை அமைகின்றன. தன் கணவன் இல்லாமையால் இந்த பாணரும் *விறலியரும் என்ன ஆவரோ, இவர்கள் இரங்கத்தக்கவர்கள் எனக் கூறி, இனி நீங்கள் இங்கு இருக்க முடியாது என்றும் கூறுகிறாள். மேலும், தலைவன் இல்லாமல் தலையை மழித்துவிட்டு, அல்லி அரிசியை உண்டு, அணிகலன்கள் கலைந்து கைம்மை நோன்பிருந்து வாழ்தல் எனக்கு அரிது எனக் கூறுகிறாள் தலைவி.*

கைம்பெண்களுக்கு நல்ல உணவு கூட வழங்கப்படவில்லை என்பதை இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. அணிகலன்களைக் களைந்து, தலையை மழித்து தனது அழகினைக் கெடுத்துக் கொள்ள நிர்பந்திக்கப்பட்டுள்ளனர் சங்க காலப் பெண்கள். போரை ஆதரித்த பெண்கள், போருக்காக தங்கள் வீட்டு ஆண்களைப் பெருமையோடு அனுப்பி வைத்த பெண்கள், ஒரு போதும் மனப்பூர்வமாக கைம்மை நோன்பிருக்க ஒப்புக் கொள்வதில்லை என்பது எளிய உண்மை.

கைம்மை குறிப்புகள் காணப்படும் எல்லா பாடல்களிலும் அதன் கொடுமைகள் சுட்டப்பட்டுள்ளன. அதற்கு தானும் தன் கணவனுடன் இறப்பது மேல் என்று கருதும் நிலை பெண்களிடம் காணப்படுகிறது. பெண்களால் பொறுத்துக் கொள்ள முடியாத அளவிற்கு இவ்வழக்கம் இறுக்கமுடையதாக இருந்துள்ளது. இவ்விடத்தில் பெண்கள் மீதான ஆணாதிக்க சமூகத்தின் காழ்ப்பைப் பெண்கள் வெளிப்படையாகக் கூறுவதைக் காணமுடிகிறது.

**உடன்கட்டை**

சமூக இயக்கம் இயல்பாக வளர்ந்து வந்து ஓரிடத்தில் இறுக்கம் அடைந்துவிட்டது. அது வர்க்க சமூகமாகும். மனித வாழ்விற்குத் தேவையான பொருளாதார நிலைகள் வரலாற்றின் ஒரு கட்டத்தில் பொருளாதார நிலையைக் காப்பதற்காக மனித வாழ்வை அழிக்கும் நிலையை எய்தியது. இதன் அடையாளங்கள்தான் ஒரு சமூகம் பெண்கள்

மீது திணித்த அடக்குமுறைகளான உடன்கட்டை ஏறுதல் மற்றும் கைம்மை நோன்பு போன்றவை.

கணவன் இறந்த பின் பெண் வாழ்வு கொடுமையானது ஆகையால் அவனுடனே இறந்துபடுதல் நன்று என்ற கருத்து சங்ககாலத்தில் இருந்துள்ளது. இதனை விளக்கும் கூற்று;

> 'ஆஞ்சிக்காஞ்சி' என்பது கணவன் எந்த வேலினால் மரணமடைந்தானோ அதே வேலைக் கொண்டு மனைவியும் தன்னுயிரை மாய்த்துக் கொள்வதைக் குறிக்கிறது. போர்க்களத்தில் மரணமடைந்த கணவனது முகத்தைத் தனது முகம் மற்றும் மார்பகங்களோடு அணைத்து அக்கணமே உயிர் துறப்பதைத் 'தலையோடு முலையும் முகனும் சேர்த்தி முடிந்த நிலை' என்றும், கணவனோடு சென்ற மனைவி அவன் எதிர்பாராமல் இறந்தவுடன் அவளும் உடன் இறந்துவிடுவதைக் கண்ட மற்றவர்கள் செய்வதறியாது புலம்பி நிற்கும் நிலை 'மூதானந்தக் காஞ்சி' என்றும் வகைப்படுத்துகிறது.[36]

செ. ஜெயவீரதேவன், உடன்கட்டை, ப. 38.

இங்ஙனம் தலைவனை எரிக்கும் சிதையில் விழுந்து உயிர் விடுதல், போர்க்களத்தில் இறந்த தலைவின் உடலில் பாய்ந்துள்ள வேலை எடுத்து தன் நெஞ்சில் பாய்த்து உயிர்விடுதல், என பல நிலைகளில் பெண்கள் தங்கள் உயிரை மாய்த்துக் கொள்ள கைம்மை நோன்பினால் தூண்டப்பட்டுள்ளனர் என்பதைக் காணமுடிகிறது. மேலும் தொல்காப்பியர் காஞ்சித் திணையின் உட்துறைகள் குறித்து கூறிய பொழுது உன்கட்டை ஏறுதலைக் கூறுகிறார்.

> நல்லோள் கணவனோடு நனியழல் புகீஇச்
> சொல்லிடை இட்ட பாலை நிலை.[37]

தொல். 1025. 30-31.

உடன்கட்டை ஏறுவது அக்காலத்தில் பெண்கள் துணிந்து ஏற்றனர் என்றும் கருத இடமுள்ளது. கைம்மை நோன்பென்பது சமூகத்தின் நிர்ப்பந்தம் எனக் கொள்ளவும் இடமுள்ளது. கைம்மை நோன்பினைத் தவிர்க்க பெண்கள் தீப்பாய்ந்த நிலையைப் பின்வரும் பெருங்கோப் பெண்டின் பாடல்மூலம் அறியலாம்.

*பல் சான்றீரே! பல் சான்றீரே!*
*செல்க எனச் சொல்லாது, ஒழிக என விலக்கும்,*
பொல்லாச் சூழ்ச்சி பல் சான்றீரே
அணில் வரிக் கொடுங் காய வாள் போழ்ந்திட்ட
காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது,
அடை இடைக் கிடந்த கை பிழி பண்டம்,
வெள் எட் சாந்தொடு, புளிப் பெய்து அட்ட
வேளை வெந்தை, வல்சி ஆக,
பரற் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம்மாதோ;
பெருங் காட்டுப் பண்ணிய கருங் கோட்டு ஈமம்
நுமக்கு அரிதாகுகதில்ல; எமக்கு எம்
பெருந் தோட் கணவன் மாய்ந்தென, அரும்பு அற
வள் இதழ் அவிழ்ந்த தாமரை
நள் இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே![38] புறம். 246.

இப்பாடல் அச்சமூகம் குறித்த நேர்மையான எதிர்வினை ஆகும். ஒரு பெண் உணர்ச்சி வசத்தால் புலம்பியதன்று இப்பாடல். பிராமணர்களின் சூழ்ச்சியை உணர்ந்து அவர்களைச் சுட்டி பாடப்பெற்றதாக உள்ளது. *பொல்லா சூழ்ச்சி பல் சான்றீரே* என்று துணிந்து கூறுகிறாள். தனிநபர் தாக்குதலாக இல்லாமல் பிரக்ஞை பூர்வமாக பிராமண சமூகத்தைத் தாக்குகிறார் பெருங்கோபெண்டு. இதனைப் பல் சான்றீரே என்னும் தொடர் நிறுவுகிறது. மற்றுமொரு பாடலில் இறந்தோரை புதைக்கும் முதுமக்கள் தாழியில் தன் கணவனுடன் தன்னையும் புதைப்பதற்கு ஏற்ற

வகையில் பெரிய அளவில் செய்யுமாறு கலம் செய்வோரைத் தலைவி ஒருத்தி வேண்டும் நிலையையும் காணமுடிகிறது.

கலம் செய் கோவே! கலம் செய் கோவே!
அச்சுடைச் சாகாட்டு ஆரம் பொருந்திய
சிறு வெண் பல்லி போல, தன்னொடு
சுரம் பல வந்த எமக்கும் அருளி,
வியல் மலர் அகன் பொழில் ஈமத் தாழி
அகலிதாக வனைமோ
நனந் தலை மூதூர்க் கலம் செய் கோவே![39]

புறம். 256.

இப்பாடலிலும் முந்தைய பாடலிலும் காட்டப்படும் தலைவியரின் வர்க்கம் இங்கு புலப்படுகிறது. பெருங்கோப் பெண்டு கைம்மை நோன்பு நோற்றலின் அவனுடன் இறந்து படுதல் இனிது எனக் கருதினள். இப்பாடலின் தலைவி சக்கரத்தில் இருந்த பல்லி அச்சக்கரம் எங்கெல்லாம் சென்றதோ அங்கெல்லாம் செல்லும் அது போல நான் தலைவன் எங்கெல்லாம் சென்றானோ அங்கெல்லாம் சென்றேன். கடைசியாக அவனுடன் செல்ல பெரிய கலம் செய்து அருள்க எனக் கேட்கிறாள். இவள் கைம்மை நோன்புக்கு அஞ்சியவள் இல்லை. தலைவனைப் பிரிந்து வாழ அஞ்சியவளாகக் காட்டப்படுகிறாள். இப்பாடலை எழுதியவர் யாரென்று தெரியவில்லை. பெண்பாற் புலவராக இருந்தால் ஒரு வேளை பெருங்கோப் பெண்டைப் போல கைம்மை நோன்பை எதிர்த்திருக்கலாம். இப்பாடல் ஆசிரியர் தன் துன்பத்தைத் தெற்றென விளக்குவதை இப்பாடலில் காணமுடிகிறது.

பிரிவாற்றாமையால் மரணத்தை வேண்டும் பெண்ணாக சித்திரித்திருப்பதன் மூலம் இப்பாடலை இயற்றியவர் ஆணாகவும் இருந்திருக்க வாய்ப்புண்டு. அவரால் கைம்மை நோன்பின் கொடுமையை உணர முடியாமல் இருந்திருக்கலாம். மற்றொரு பாடலில் ஆய் அண்டிரன் இறந்த போது அவனது மனைவி மட்டுமல்லாமல் அவனது உரிமை மகளிரும் உடன்கட்டை ஏறிய செய்தியும் உள்ளது.

ஆடு நடைப் புரவியும், களிறும், தேரும்,
வாடா யாணர் நாடும் ஊரும்
பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்
கோடு ஏந்து அல்குல், குறுந்தொடி மகளிரொடு,
காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப,
மேலோர் உலகம் எய்தினன் எனாஅ,[40]

புறம். 240. 1-6.

புரவியும், களிறும், தேரும், ஊரும் பரிசிலர்க்குத் தரும் ஆய் அண்டிரனின் இறப்பைக் கூறுகிறது இப்பாடல். ஆய் அண்டிரன் ஒரு குறுநில மன்னன். அவன் இறந்தது அவன் மனைவிக்கும் அவனது உரிமை மகளிருக்கும் பெரும் இழப்பாகும். இவ்வகை மன்னர்கள் அரசர்களைப் போல அல்லாமல் மக்களுடன் நெருங்கி பழகி வாழ்ந்தோர். இவனது இழப்பு அவ்வூர் மக்களுக்கும் அவனது மனைவிமார்க்கும் பெரும் துயரத்தை அளிக்க வல்லது ஆகையால் அவர்கள் அவனது மனைவிமார் அவனுடன் உடன்கட்டை ஏறி மேலோர் உலகம் எய்தினர்.

இப்பெண்களின் நிலை பெருங்கோப் பெண்டின் நிலையைக் காட்டிலும் வேறுபட்டதாகும். தன் மன்னன் மீது கொண்ட அன்பினால் இவர்கள் அவனுடன் இறந்து போயினர். அவன் இல்லாமல் இம்மகளிரின் வாழ்க்கை மிகவும் துயரமுடையதாய் அமைந்திருக்கவும் பல காரணங்கள் உள்ளன. பேரரசுகளின் ஆதிக்கம் இம்மகளிர்க்குத் துயர்தர வல்லது. இக்காரணம் கொண்டு அம்மகளிர் அவனுடன் இறந்திருக்கலாம் என எண்ண இடமுளது.

### பெண்களுக்கு மறுக்கப்பட்ட அக வெளிப்பாடுகளும் மீறல்களும்

பெண்கள் தன் தலைவனிடம் தன் காதலைக் கூறுவது முறையில்லை எனத் தொல்காப்பியம் கூறுகிறது. அங்ஙனம் கூறினால் அது கீழ்நிலை மக்களின் செயல் எனக் கண்டிக்கிறது. புதுப் பானையில்

வைக்கப்பட்ட நீர் போல தானே கசிந்து வெளிப்பட வேண்டும் என்று பின்வருமாறு இலக்கணம் வகுக்கிறார் தொல்காப்பியர்.

தன்னுறு வேட்கை கிழவன் முன் கிளத்தல்
எண்ணுங்காலை கிழத்திக்கு இல்லை[41]

தொல். 1064

இது பெண்ணிடம் உள்ள நாணம் என்னும் குணத்தின் அடிப்படையில் கூறப்பட்ட இலக்கணமாகும். இது ஒரு வகையில் இலக்கியச் சுவை கூட்ட கூறப்பட்ட இலக்கணம் என்றும் கொள்ளலாம். இலக்கியத்தில் தலைவன் முன் தலைவி தன் காமத்தை வெளிப்படுத்துவது படிப்போருக்குச் சுவை தராது எனக் கருதியிருக்கலாம்.

ஆனால் தலைவன் வரைவு இடை வைத்து பிரிந்த காலத்தும், வரைவற்கு முற்பட்ட நாட்களில் தன்னைத் தேடி வந்த போதும், அவனைக் கண்டிக்கும் விதமாக தோழியிடம் கூறுவது போல் சினந்து கூறலாம் என்றும் தொல்காப்பியம் கூறுகிறது. மேலும் தலைவனைப் பிரிந்திருந்த காலத்து அவனைத் தேடிப் போவது போல் கூறலாம் என்றும் தொல்காப்பியர் கூறுகிறார். தனது காதல் மிகுதியால் வருந்தி கோபமுற்று ஊரைத் தூற்றுவதை ஔவையாரின் பாடலால் அறியலாம்.

முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல்
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்டு
ஆஅ ஒல்லெனக் கூவுவேன் கொல்
அலமர லசைவளி யலைப்ப வென்
உயவு நோய் யறியாது துஞ்சு மூர்க்கே[42]

குறுந். 28.

தனது காதல் துன்பத்தை அறியாமல் தூங்கும் இந்த ஊரை முட்டுவேனோ தாக்குவேனோ ஆஅ என சத்தமிடுவேனோ எனச் சினந்து கூறுகிறாள் தலைவி. தனது காதல் துயரை எல்லோரும் அறியும்படி சினந்து கூறி தனது காதலை வெளிப்படுத்துகிறாள். இதனால் பெண்பாற்

புலவரான ஔவையார் மரபை மீறியுள்ளதாகக் கருதலாம். தன்னுணர்வை வெளிப்படையாகக் கூற புலமையும் கல்வியும் அவசியம் என்பதை ஔவை தம் பாடலில் தெள்ளிதின் உணர்த்துகிறார். மற்றொரு பெண்பார் புலவரான அள்ளூர் நன்முல்லையார் என்ற புலவரும் தனது காதலைப் பின்வருமாறு வெளிப்படுத்தி மரபை மீறியுள்ள திறத்தைக் காணமுடிகிறது.

> 'குக்கூ' என்றது தோழி; அதன் எதிர்
> துட்கென்றன்று என் தூஉ நெஞ்சம் -
> தோள் தோய் காதலர்ப் பிரிக்கும்
> வாள்போல் வைகறை வந்தன்றால் எனவே[43]

குறுந். 157.

வைகறை வந்துவிட்டதால் தலைவனின் தோள் பிரிய வேண்டும் என்று அவள் நெஞ்சம் துட்கென்று அச்சம் கொண்டதாகக் கூறுகிறாள். தலைவி வாடிக்கையான பிரிவைப் பொறுக்க முடியாமல் வருந்தும் நிலையை இப்பாடல் பாடுகிறது. ஐந்திணைப் பாடல்களுக்குள் இங்ஙனம் தலைவியின் காதல் வெளிப்பாடுகள் மரபு மீறலாக அமைந்துள்ளதைக் காணலாம்.

**விறலி பரத்தையாக மாறுதல்**

புறநானூறு *விலைநலபெண்டு என்று பரத்தையைக் குறிக்கிறது*. மதுரைக் காஞ்சி பரத்தையர் பொருளுக்காக தங்களை அலங்கரித்துக் கொண்டு செல்வ இளைஞரைக் கவர்ந்தனர் எனக் கூறுகிறது. இப்பதிவுகள் பெண்களுக்குப் பொருறளாதார உரிமை மறுக்கப்பட்டதால் ஏற்பட்ட சமூக முரண் என்பதை அறிய வேண்டும். இருப்பினும் இப்பரத்தையர் பொருளுக்காகத் தங்களை விற்றதாக அகப்பாடல்களில் குறிப்புகள் இல்லை.

*கலை நடவடிக்கைகளில் சிறந்து விளங்கிய தொடக்க கால விறலி காலப் போக்கில் பல பொருளாதார சூழ்நிலைகளுக்கு ஆட்பட்டு பரத்தை என்னும் நிலைக்கு வருகிறாள்.* ஊர் ஊராகச் சென்று கலைச்

சேவை செய்து வந்தது பாணர் குழாம். பேரரசு காலத்தில் விறலியரின் அழகும் அவளது கலை திறனும் பெரும் செல்வம் கொண்ட ஆண்களைக் கவர்ந்தன. பாணர் தம் வறுமை நிலை அவர்களைக் கூட்டுவித்து வாழும் இழி நிலைக்குக் கொண்டு வந்து விட்டது. இதனைப் பின்வரும் கைலாசபதியின் கூற்று விளக்குகிறது.

> அவர்களின் உருவ அழகும், பண்பட்ட சாயலும் அவர்களின் கலையை மேம்படுத்தியதாகத் தோன்றுகிறது. பல குறிப்புகள் வழியே, அவர்களின் நீண்டு சுருண்டு கருத்த குழல், இனிய நகை, ஒளிபொருந்திய நுதல், மைதீட்டப்பெற்ற கண்கள், சிற்றிடை, வெண்பல் மற்றும் உறுப்புகள், குறிக்கத்தக்க விவரங்கள் பற்றி விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இப்பண்புகள், உருவ நலன்கள் பற்றிய கூற்றுகள் அவர்களின் பாடலுக்கும் ஆடலுக்கும் உரிய பாசாங்குகளாக இருந்தன. பின்னர் இவர்கள் அரசவை மகளிராகவும் காமக்கிழத்தியராகவும் மாறினர்; இடைக்காலத்தில் அவர்கள் பரத்தையராகவும் விலைமகளிராகவும் தாழ்ந்தனர். அவர்களை ஒழுக்கக்கேட்டின், இழுக்கிய நடத்தையின் பண்புக்கூறுகள் சார்ந்தன.[44]

க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப. 154.

ஆண் ஆதிக்க உடைமைச் சமூகம் அழகிய மற்றும் கலை திறன் கொண்ட பெண்டிரின் வறுமையைப் பயன்படுத்தி அவர்களைப் பரத்தை என்னும் மற்றொரு சமூகப் பிரிவினராக மாற்றியுள்ளது. இப்பெண்டிர் கலை, கலாச்சரத்தில் சிறந்தோர் ஆவர். இவர்கள் தங்கள் உடலை விற்பதென்பது அவர்களது தொழிலின் சிறுபகுதியாகும். செல்வந்தர் பரத்தையைப் போற்றியதற்குக் கலை நுகர்ச்சி முக்கிய காரணமாக அமைந்துள்ளது.

> *இத்தகைய செழுமையான நிலப்பிரபுத்துவ அமைப்பில் வீரயுகத்தின் விறலியர்கள் பரத்தையராக மாறியது வியப்பை அளிக்கும் செயலன்று. அரசியல் ஆதிக்கத்தின் பொருளாதார அடிப்படையில் ஏற்பட்ட மாற்றத்தால் (கொள்ளையடிப்பதிலிருந்து உற்பத்தி*

*செய்வது வரை) வீரயுகத்தின் பெண்குலக் கலைஞர்கள், நிலப்பிரபுத்துவ யுத்தத்தில் பரத்தையர்களாக மாறினர்.*[45]

கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், பக். 28-29.

விறலி பரத்தையாக இருந்தமைக்கு நேரடி சான்றுகள் கிடைக்கவில்லை எனினும் *பரத்தை குலம் உருவாகிய வரலாற்று வளர்ச்சி போக்கு விறலியில் தொடங்கியிருக்கலாம் என ஊகிக்க இடம் உள்ளது.* நற்றிணைப் பாடலில் விறலியைக் கண்டதும் மனைவிமார் தம் கணவர்களை வீட்டுக்குள் வைத்து பூட்டியதாகக் கூறப்படுகிறது. சங்க காலத்தில் பொருளுக்காக தங்களை விற்ற பரத்தையரைக் காண முடியவில்லை. தங்கள் கலைகளைக் காக்கும் முயற்சிக்குத் பரத்தமையைத் துணைக் கொண்டனர் விறலியர் என்று கருதவும் இடமுளது.

கலை வளர்க்க பெரும் செல்வம் தேவை. அத்தேவை செல்வந்தரின் கலை நுகர்ச்சியால் சாத்தியப்படும் என்ற நிலையில் பெண் கலைஞர்கள் தங்கள் உடலைக் கொண்டு கலை வளர்த்தனர் என்றும் கருதலாம். தற்காலத்தில் சிறந்து விளங்கும் பரதம், சங்கீதம் போன்றவை ஒரு குறிப்பிட்ட காலத்தில் தேவதாசியரால் வளர்க்கப்பட்டவை என்பது இதனுடன் ஒப்பிட்டு கருதத்தக்கது. இதன் மூலம் பரத்தையின் தொடர்ச்சியும் கலைச் செழிப்பின் தொடர்ச்சியும் விறிலியரிடம் இருந்து வந்திருக்கலாம் என ஊகிக்கலாம்.

**முடிவுரை**

மனித சமூகம் குறிஞ்சி நிலத்தில் தனது தொடக்க கட்ட வாழ்வைத் தொடங்கியது. குறிப்பிட்ட காலம் வரை அது அவ்விடத்தில் வாழ்ந்தது. பின் முல்லை நிலைக்குப் பரவியது. அதற்கு இணையாக நெய்தல் நிலத்திலும் தனது வேட்டை தொழிலை மேற்கொண்டு வாழ்ந்தது. நிலையாக வாழ மருத நிலத்தில் குடிகொண்டு உடமையையும் அரசையும் உருவாக்கியது. கடல் கடந்து வாணிபம் செய்து மருத நிலத்திற்கு இணையாக நெய்தல் நிலத்திலும் நிரந்தரமாக

வாழ முற்பட்டது. இங்ஙனம் வரலாற்றில் வர்க்க சமூகம் உருவாகி வளர்ந்து வந்துள்ளது.

சங்க இலக்கியப் பாடல்களில் மனித இன வளர்ச்சியின் இத்தகைய படிநிலைகள் ஐந்திணைகளாகப் பகுக்கப்பட்டு அவற்றிற்கான பாடல்கள் புனையப்பட்டன. எனவே சங்க இலக்கியம் தொடக்ககால மக்கள் வாழ்வின் படிநிலைகளை ஒருவாறு விளக்குகின்றன. குறிஞ்சி மற்றும் முல்லை நிலத்தில் ஆண் பெண் பாகுபாடு பெரிய அளவிலான வேற்றுமையாக அமையவில்லை. குறிஞ்சி நிலத்தைக் காட்டிலும் முல்லை நிலத்தில் பெண் கற்பு என்னும் விலங்கிடப்பட்டு அடக்கப்படுதல் தொடங்கப்பட்டிருந்தது. ஆகையால் பெண்கள் அடிமைப்பட்ட இடம் முல்லை என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

ஆனால் முல்லை நிலத்தில் பெண் அனுபவித்த எல்லா துயரங்களையும் ஆண்களும் அனுபவித்தனர். பெண்களைப் போலவே ஆண்களும் பிரிவுத் துயரத்தை அனுபவித்தனர். பெண்களைக் காட்டிலும் ஆண்கள் அதிக துயரங்களை இந்நிலத்தில் அடைந்தனர். போரில் ஈடுபட்டனர். கால் நடை மேய்க்க காடுகளில் கடுங்குளிரில் தங்கினர். இதன்மூலம் சிறிய அளவிலான உடைமையை அடைந்தனர்.

உண்மையில் பெண்கள் முழுமையாக அடிமைப்படுத்தப்பட்ட இடம் மருத நிலமாகும். முல்லை நிலத் தலைவி போல் மருத நில தலைவிக்குச் சுற்றம் காக்கும் பெருஞ்சுமை இல்லை. அவள் தன் தலைவனின் பரத்தை ஒழுக்கத்தை எண்ணி வாழும் ஒரு சலிப்பான வாழ்வை மேற்கொண்டாள். ஒரு புறம் தனது காமத்தை வெளியில் சொல்ல முடியாத அளவுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. மற்றொரு புறம் பரத்தை என்னும் நிலையில் ஒரு பிரிவு பெண்கள் சமூகத்தில் இழிவாக மதிக்கப்படும் நிலைக்கு வந்து சேர்ந்தனர்.

வர்க்க சமூகம் உற்பத்தியை அதிகரிக்க செல்வ குவிப்பும் அதிகரித்தது. இதனால் பேரரசுகள் உருவாகின. இதன் உடன் நிகழ்வாக போர்கள் அதிகரித்தன. அங்கே பரத்தை வாழ்க்கைத் தொடங்கியது. குறுநில மன்னர் சிற்றூர் மன்னர் காலத்தில் பெண் பரத்தையாக

பார்க்கப்பட்டதில்லை. மருத நிலத்தில் அதிக அளவிலான கைம்பெண்கள் உருவாகினர். அதற்குத் காரணம் மருத நிலப் பொருளாதார நிலை என அறியலாம். இதனால் ஒழுக்கம் காக்க கைம்மை நோன்பு தீவிரமாகக் கடைபிடிக்கப்பட்டது. கைம்மை நோம்பின் கொடுமைக் கண்ட பெண்கள் தாமாகவே உடன் கட்டை ஏறி தங்களது எதிர்ப்பைத் தெரிவித்தனர். அதனை ஏற்க மனம் கொள்ளாத கணவனோடு உடன்கட்டை ஏறிவிடவே பெரு விருப்பம் கொண்டனர். அதுபற்றி கைம்மை நோன்பை வெறுத்தனர்.

கலை உணர்வு மிக்க விறலியர் பரத்தையராக மாறினர். பொருளுடைமை அற்ற பெண்களுக்கு அடிமை முறை விதிக்கப்பட்டது. இத்தகைய முரண்பாடுகள் எல்லாம் ஒரு சமூக இயக்கத்தின் விளைவுகளாகும். வாழ்வு இல்லாமல் மரணமில்லை, மரணமில்லாமல் வாழ்வு இல்லை. “மேல்” இல்லாமல் “கீழ்” இல்லை. “கீழ்” இல்லாமல் “மேல்” இல்லை. இது போன்று நன்மை தீமை, மகிழ்ச்சி துயரம், பெரு நில உடைமையாளர் குத்தகை விவசாயி என சமூகம் முரண்பாடுகளால் இயங்கி வருகின்றது.

ஐந்தாவது இயலில் சங்க இலக்கியத்தில் பெண்களுக்கு மறுக்கப்பட்ட சமூக உரிமைகள் என்பதே சமூக வீழுச்சி அடைந்திருக்கிறது என்ற உள்ளீட்டு பார்வையில் பொதுமை நோக்கில் சுட்டி நிற்கிறது இவ்வியல்.

பழந்தமிழர் வாழ்க்கை தாய்வழிச் சமூகத்தை படைத்த ஒரு சமத்துவ காலம். இத்தாய்வழிச் சமூகத்தில் தாய் பல்வேறு நிலைகளில் தலைமை பெற்றிருந்தால், ‘பகுத்துண்டு பல்லுயிர்’ ஓம்புதல் என்ற பொதுமை உடைய பெண்களாகவே இருந்ததை நாம் அறிவோம். இருப்பினும், முல்லை நிலத்தில் உருவான பல்வேறு தொழில்களும், உற்பத்திக் கருவிகளின் பெருக்கமும் பொருளாதார வளர்ச்சிக் கண்ட சமூகம் பெண்ணை இரண்டாம் நிலைக்குத் தள்ளியது. முல்லை நிலத்து புள்ளி, மருதநிலத்தில் அரசு உருவாக்கம் பெற்று கோலோச்சியது.

இதனால் பெண்களுக்கான உடைமை கேள்விக்குள்ளானது. சமத்துவ சமுதாயம் மறைந்தது. ஐவகை நிலங்களிலும் நூற்றுக்கணக்கான தொழில்களோடு வாழ்ந்து பின்னிபிணைந்திருந்து நாட்டுவளம் சேர்த்த அவர்கள் பொருளாதாரத்தில் பின்தங்கிய நிலைக்கு தள்ளப்பட்டனர்.

அதில் குறிப்பாக முந்நீர் வழக்கம் மகடூஉ இல்லை என கடல் கடந்து வணிகம் செய்யும் உரிமை மறுக்கப்பட்டதும், மேலும் சொத்துடமை என்ற ஒன்று அவர்களிடமிருந்து பறிக்கபட்டு, தாய்வழிச் சமூகத்திலிருந்து தனிமைப்பட்டிருக்கின்றனர். இதனை ஆண்டான் அடிமைச் சமூகம், அதிகாரம், நிலவுடமை என்ற இந்த சொல்லாடல்கள் மூலம் தெளிவாக நாம் அறிய முடியும்.

அன்றைய பெண்களுக்கு சமஉரிமை கொடுத்திருந்தால் இன்றைய ஜான்சிராணி போலவும், ஒரு வேலுநாச்சியார் போலவும், குயிலிப் போலவும் எல்லாநிலைகளிலும் (போர், விளையாட்டு, அரசியல்) என இருந்திருக்க முடியும்.

ஆக முன் முடிவு என்பது சங்க இலக்கிய முழுவதுமாக ஆராயப்பட்டு மறு வாசிப்பு செய்யப்பட்டிருக்கிறது. அந்த மறுவாசிப்பு அடிப்படையில் பெண்களுக்கும் சம உரிமை இல்லை என்று அரிதியிட்டு சொல்ல முனைகிறது இவ்வாய்வேடு.

சங்க இலக்கியம் நமக்கு கிடைத்த ‘சட்டவரைவு’ என்றே எண்ணிப் பார்க்க வேண்டும். அந்த வகையில் தமிழரின் சமூக பொருளாதார அரசியல் என்ற நேர்கோட்டில் வைத்து பார்ப்பதென்பதும், எதிர்காலத்தில் இடைவெளி இல்லாமல் படைப்புகள் உருவாக வேண்டும் என்பதை எதிர்கால சந்ததியினருக்கு உரைப்பதும், ஒருப்பாளர் சமூக, சமத்துவ அடையாளத்தை உள்வாங்கிக் கொண்டே அந்தப்படைப்புகளையும் உருவாக்க வேண்டும் என்பதை சமூகத்திற்கு சொல்லும் பயன்பாட்டாய்வாக இந்த ஆய்வேடு அமைகிறது.

## சான்றெண் விளக்கம்

1. சிலம்பு நா. செல்வராசு, இலக்கிய மீள்பார்வைகள், பக். 12 – 13.
2. குறுந். 3.
3. குறுந். 5
4. குறுந். 235.
5. கேபி. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர், ப. 22.
6. மு. கலி. 61-75.
7. குறுந். 358.
8. பெரும். 167-180.
9. தொல். 980.
10. அகம். 11. 1-11.
11. பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.121.
12. நற். 21
13. மு. கலி. 112.
14. நெ. கலி. 142. 1-18.
15. கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், ப. 189.
16. பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், பக். 103-104.
17. ம. கலி. 96. 7-15.
18. குறுந். 169.
19. பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.115.
20. பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.104.
21. குறுந். 33.
22. குறுந். 238.
23. க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, பக். 138-139.
24. தொல். 1098.
25. பக்தவத்சல பாரதி, பாணர் இனவரைவியல், ப. 74
26. புறம். 210. 5-11.
27. குறுந். 19. 1-3.
28. க காந்திதாசம், சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், ப. 109.
29. பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.179.
30. பி. எங்கல்ஸ், குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,ப.Xix.

31. முல்லை. 12-23.
32. புறம். 201. 1-6.
33. புறம். 279.
34. புறம். 254.
35. புறம். 280.
36. செ. ஜெயவீரதேவன், உடன்கட்டை, ப. 38.
37. தொல். 1025. 30-31.
38. புறம். 246.
39. புறம். 256.
40. புறம். 240. 1-6.
41. தொல். 1064
42. குறுந். 28.
43. குறுந். 157.
44. க. கைலாசபதி, தமிழ் வீரநிலைக் கவிதை, ப. 154.
45. கார்த்திகேசு சிவதம்பி, பண்டைத் தமிழ்ச் சமூகம், பக். 28-29.

## மேலாய்வுக் களங்கள்

**சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்** எனும் தலைப்பிலான இவ்வாய்வில் மேலாய்வு களங்களாகப் பின்வருவன பரிந்துரை செய்யப்படுகின்றது.

- **சங்ககால வளர்ச்சிப் போக்கில் பெண்கள் அடிமைப்பட்ட நிலை**
- **சங்க இலக்கியத்தில் பெண்களின் நேரடி உற்பத்தி பங்களிப்பும் மறைமுக உற்பத்திப் பங்களிப்பும்**
- **சங்க இலக்கியப் பெண்களும் தற்கால பெண்களும் ஓர் ஒப்பீட்டுப் பார்வை**

ஆகிய தலைப்புகளுக்கான மேலாய்வுக் களங்களை இவ்வாய்வேடு முன் மொழிகிறது.

## துணைநூற் பட்டியல்

### முதன்மை ஆதாரங்கள்


சங்கஇலக்கியம் — சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு - 2007

சங்கஇலக்கியம், — நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு - 2004.


### துணைமை சான்றாதாரங்கள்


பக்தவத்சல பாரதி — பாணர் இன வரைவியல், அடையாளம், திருச்சி, பதிப்பு - 2015.

செல்வராசு அ. — ஆண் ஆளுமையில் பெண் கற்பு, எழில், திருச்சி, பதிப்பு - 2003.

மாதையன் பெ. — சங்ககால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும், பாவை பப்ளிஷர்ஸ், சென்னை, பதிப்பு - 2004.

ராகுல சாங்கிருத்தியாயம் — வால்காவிலிருந்து கங்கை வரை, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, பதிப்பு - 2000.

கே.கே.பிள்ளை — தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,சென்னை,பதிப்பு- 2009.

கே. கே. பிள்ளை — தென் இந்திய வரலாறு தொ. II, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, பதிப்பு - 2007.

| | |
|---|---|
| மயிலை சீனி. வேங்கடசாமி | தமிழர் வளர்த்த அழகுக் கலைகள், ஸ்ரீசெண்பகா பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2010. |
| மாதையன் பெ. | சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு – 2010. |
| சிவசுப்பிரமணியன் ஆ. | அடித்தள மக்கள் வரலாறு, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு – 2016. |
| பக்தவத்சல பாரதி, | பண்பாட்டு மானிடவியல், அடையாளம், திருச்சி, 2011. |
| ஸ்டீபன் ஞா. | இலக்கிய இனவரைவியல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு – 2017. |
| மயிலை சீனி. வேங்கடசாமி | மயிலை சீனி. வேங்கடசாமி தொகுப்பு நூல்கள், தொ. 2, மே. து. ராசுகுமார் (பதி. ஆ) மக்கள் வெளியீடு, சென்னை, பதிப்பு – 2003. |
| கைலாசபதி க. | பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, பதிப்பு – 1999. |
| கைலாசபதி க. | சமூகவியலும் இலக்கியமும், குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, பதிப்பு – 2009. |
| மேனகா ஏ. | ஆய்வறிஞர் முனைவர் க.அ. ஜோதிராணி, கலைஞன் பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2016 |
| இராமகிருட்டினன் ஆ. | தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும், சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, பதிப்பு – 2007. |
| ஜெகஜீவன்ராம் சு. | ஆசியபாணி உற்பத்தி முறை, வெள்ளோட்டம் வெளியீட்டகம், சென்னை, பதிப்பு – 2006. |
| முத்தப்பன் பழ. | திருமுறைகளில் அகக் கோட்பாடு, மீனாட்சி நூலகம், மயிலம், பதிப்பு – 1986. |

| | |
|---|---|
| சுப்பிரமணியபிள்ளை கா. | இலக்கிய வரலாறு, காவ்யா, சென்னை, பதிப்பு – 2007. |
| வரதராசன் மு. | காலந்தோறும் தமிழ், பாரி நிலையம், சென்னை, பதிப்பு – 2003. |
| சூரியநாராயண சாஸ்திரியார்வி. கோ. | தமிழ் மொழியின் வரலாறு, பூம்புகார் பதிப்பகம் சென்னை, பதிப்பு – 2008. |
| ரொமிலா தாப்பர் | வரலாறும் வக்கிரங்களும், நா. வானமாமலை (மொழி. ஆ) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு – 2008. |
| அண்ணாமலை வே. | சங்கஇலக்கியத் தொன்மக்களஞ்சியம், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், பதிப்பு – 2000. |
| மாருதிதாசன் (தொகு. ஆ) | நர்மதாவின் தமிழ் அகராதி, நர்மதா பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2007. |
| கைலாசபதி க. | இலக்கியமும் திறனாய்வும், குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, பதிப்பு – 1990. |
| வரதராசன் மு. | இலக்கியத் திறன், பாரி நிலையம், சென்னை, பதிப்பு – 1979. |
| அகிலா சிவசங்கர் (தொகு. ஆ) | தமிழ் இலக்கியங்கள் காட்டும் தொழில்கள், ஜனகா பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2011. |
| அருள்ராசு வே. சா. | பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், பதிப்பு – 2000. |
| கண்ணகி கலைவேந்தன் | தமிழர்கள் வளர்த்த ஆயகலைகள் அறுபத்து நான்கு, தமிழய்யா வெளியீட்டகம், தஞ்சாவூர், பதிப்பு – 2006. |

கலைவாணி இரா. சங்க இலக்கியத்தில் இசை, ஏழிசைப் பதிப்பகம், மயிலாடுதுறை, பதிப்பு – 2005.

கோசாம்பி டி.டி. பண்டைய இந்தியா அதன் பண்பாடும் நாகரிகமும் பற்றிய வரலாறு, இந்தியன் கவுன்ஸில் ஆப் ஹிஸ்டாரிக்கல் ரிசர்ச், நியூ தில்லி அண்ட் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,சென்னை, பதிப்பு – 1989.

சங்கரன் எஸ். உயிர்களின் தோற்றமும் வளர்ச்சியும், அமராவதி பதிப்பகம், சென்னை, பதிப்பு – 1999.

சசிவல்லி வி.சி. தமிழர் திருமணம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – 2003.

சசிவல்லி வி.சி. பண்டைத்தமிழர் தொழில்கள்,உலகத் தமிழாராய்ச்சிநிறுவனம், சென்னை, பதிப்பு–1989.

சாமி ஆர். என். 3000 ஆண்டுகள் தமிழனின் கடல் வழி வாணிகம், எமரால்டு பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2005.

சுப்புலட்சுமி மோகன் செ. நரம்புக் கருவிகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – 2012.

சோமசுந்தரம் பூ. (மொழி. ஆ) மனித இனங்கள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு – 2012.

தட்சிணாமூர்த்தி அ. சங்கஇலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், மங்கையர்க்கரசி பதிப்பகம், தஞ்சாவூர், பதிப்பு – 2001.`

தேவ நேயப்பாவாணர்.ஞா. தமிழர் வரலாறு, பூம்புகார் பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2007.

தேவ நேயப்பாவாணர்.ஞா. பண்டைத் தமிழர் நாகரிகம், ஸ்ரீகணபதி பப்ளிகேஷன், சென்னை, பதிப்பு – 2013.

பாக்யமேரி எஃப். காலந்தோறும் தமிழர் கலைகள், பூவேந்தன் பதிப்பகம், சென்னை, பதிப்பு - 2005.

பாலுசாமி நா. பழந்தமிழ் இலக்கியத்தில் பொருளியற் கூறுகள், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, பதிப்பு - 1999.

பெருமாள் எஸ். ஏ. மனித குல வரலாறு, கஸ்தூரிப் பதிப்பகம், கோவை, பதிப்பு . 2008.

மரிசகூசை ஆ (தொகு. ஆ) இந்தியப் பழங்குடிப் பண்பாடும், தமிழ்ப் பண்பாடும், போதிவனம், சென்னை, பதிப்பு - 2011.

வேங்கடசாமி சீனி. மயிலை. பழங்காலத் தமிழர் வாணிகம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு - 1991.

வேங்கடசாமி சீனி. மயிலை. நுண்கலைகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு - 2001.

வேங்கடசாமி சீனி. மயிலை. சங்ககால வரலாற்று ஆய்வுகள், கமலகுகன் பதிப்பகம், சென்னை, பதிப்பு - 2007.

ஜோதிராணி க.அ. சங்க இலக்கியத்தில் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல் நிலை, காவ்யா பதிப்பகம், சென்னை, பதிப்பு - 2015.

முல்லை முத்தையா தமிழர் வாழ்வியல், மணிவாசகர் நூலகம், மதுரை, 1981.

வரதராசன் வெ. தமிழப் பாணர் வாழ்வும் வரலாறும், பண்ணன் பதிப்பகம்,

காந்திதாசன் க. சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2011.

| | |
|---|---|
| கார்த்திகேசு சிவதம்பி | பண்டைத் தமிழ்ச் சமூகம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2010. |
| அருணன் | மார்க்சிய அழகியல், வசந்தம் வெளியீட்டகம், மதுரை, பதிப்பு - 2009 |
| அஜய் கன்சால், மொழி. ஆ. ரமேஷ் | கடவுள் உருவான கதை, பாரதி புத்தகலாசம், சென்னை, பதிப்பு – 2015. |
| கி. எங்கல்ஸ் | மனிதக் குரங்கு மனிதனாக மாறிய இடைநிலைப் படியில் உழைப்பின் பாத்திரம், முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ. |
| ச. வே. சுப்பிரமணியன் | சங்க கால மகளிர், மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், பதிப்பு – 2014. |
| ஃபிரடெரிக் எங்கல்ஸ் | குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2008. |
| மணவாளன் அ.அ. | இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2010. |
| வாசுகிஜெயரத்னம் | பெண்ணியச் சுவடுகள், அறிவுப்பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2009. |
| தசரதன் ஆ. (பதி. ஆ,) | தமிழில் ஆவணங்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – 2001. |
| வரதராசன் மு. | மொழி வரலாறு, பாரி நிலையம், சென்னை, பதிப்பு – 2010. |
| தேவநேயப்பாவாணர் ஞா. | பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், பூம்புகார் பதிப்பகம், சென்னை, 2009. |

| | |
|---|---|
| வேங்கடராமன் கா. கோ. | தமிழ் இலக்கிய வரலாறு, கலையக வெளியீடு, நாமக்கல், பதிப்பு . 2008. |
| சிலம்பு நா. செல்வராசு | இலக்கிய மீள்பார்வைகள், காவ்யா, சென்னை, பதிப்பு – 2007. |
| சக்திவேல் சு. | தமிழ் மொழி வரலாறு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2009. |
| ஜெயவீரதேவன் செ. | உடன்கட்டை, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, பதிப்பு – 2010. |
| சேதுப்பிள்ளை ரா.பி. | தமிழகம் ஊரும் பேரும், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, பதிப்பு – 2008. |
| ஸ்ரீசந்திரன் ஜெ. | தமிழ் இலக்கிய வரலாறு, தமிழ் நிலையம், சென்னை, பதிப்பு – 2007. |
| பாலசுப்பிரமணியன் சி. | தமிழ் இலக்கிய வரலாறு, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம் பதிப்பு – 2010. |
| வரதராசன் மு. | தமிழ் இலக்கிய வரலாறு, சாகித்திய அகாதெமி, புது தில்லை, பதிப்பு – 2010. |
| சுப்ரமண்யன் ந. | சங்ககால வாழ்வியல், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு – 2010. |
| வானமாமலை நா. | மார்க்சிய சமூகவியல் கொள்ளை, அலைகள் வெளியீட்டகம், பதிப்பு – 2008. |
| கிறிஸ்டோபர் காட்வெல், மொழி. ஆ. தோதாத்ரி | கானலும் உண்மையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, பதிப்பு – 2007. |
| வானமாமலை நா. | மார்க்சீயஅழகியல், மக்கள்வெளியீடு, சென்னை, பதிப்பு.1999. |

| | |
|---|---|
| கணேசலிங்கன் செ. | கலையும் சமுதாயமும், குமரன் பப்ளிஷர்ஸ், சென்னை, பதிப்பு - 2000. |
| நிர்மலாராணி வீ. | பெண் இலக்கியம், காவ்யா வெளியீடு, சென்னை, பதிப்பு - 2016. |
| தனிநாயகம் அடிகள் | தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு - 2002. |
| கிருஷ்ணராஜா சோ. | சங்ககாலச் சமூகமும் சமய - மெய்யியற் சிந்தனைகளும், குமரன் புத்தக இல்லாம், கொழும்பு - சென்னை, பதிப்பு - 2007. |
| ஜோதிராணி க. அ. | தமிழ் இலக்கியங்கள் சமுதாய அடையாளங்கள், தன்னனானே பதிப்பகம், சென்னை, பதிப்பு - 2004. |
| தனசேகரன் ஏ. | ஆதியிலிருந்து சாதி வரை. குமரன் புத்தக இல்லம், சென்னை, பதிப்பு - 2019. |
| பக்தவத்சல பாரதி | இலக்கிய மானிடவியல், அடையாளம், திருச்சி, பதிப்பு - 2014. |
| கைலாசபதி க. | தமிழ் வீரநிலைக் கவிதை, குமரன் புத்தக இல்லம், கொழும் - சென்னை, பதிப்பு - 2006. |
| கைலாசபதி க. | இலக்கியச் சிந்தனைகள், குமரன் புத்தக இல்லம், கொழும் - சென்னை, பதிப்பு - 2001. |
| கைலாசபதி. க. | கைலாசபதி முன்னுரைகள், குமரன் புத்தக இல்லம், கொழும் - சென்னை, பதிப்பு - 2007. |
| சிங்காரவேலர் ம. | விஞ்ஞான முறையும் மூடநம்பிக்கையும், பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவன வெளியீடு, சென்னை, பதிப்பு - 2016. |

அழகம்மை கேபி. சமூக நோக்கில் சங்க மகளிர், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2001.

பெ. மாதையன் சங்ககாலக் கலைகள், கோவை வாணவராயர் அறக்கட்டளைச் சொற்பொழிவுத் தொடர், மே, 2019.

பாலசுப்பிரமணியம் இரா. தமிழர் நாட்டு விளையாட்டுகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – 2008.

திருநாவுக்கரசு க.த. தமிழ்ப் பண்பாடு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – 2009.

கிரிஸ்டோபர் காட்வெல், மொழி. ஆ. ராகவன் வி. என். அழிந்து வரும் கலாச்சாரம் ஓர் ஆய்வு, அலைகள் வெளியீட்டகம், சென்னை, பதிப்பு – 2018.

ஜீவானந்தம். ப, மொழியைப் பற்றி ஜிவா, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 2009.

ஸ்டாலின், தொ.ஆ மகாராசன் மார்க்சியமும் மொழியியல் தேசிய இனப் பிரச்சினைகளும், தோழமை வெளியீடு, சென்னை, 2009.

புலியூர்க்கேசிகன் புறப்பொருள் வெண்பாமாலை மூலமும் உரையும், பாரி நிலையம், சென்னை, பதிப்பு – 1993.

பக்கிரிசாமிபாரதி கே. ஏ. திருக்கோயில் நுண்கலைகள், குசேலர் பதிப்பகம், சென்னை, 2004.

இரகுராமன் சே. தமிழர் நடன வரலாறு, நந்தினி பதிப்பகம், சென்னை, 2006.

இராசரத்தினம் சு. பண்பாடு – வேரும் விழுதும், தமிழ்க் கோட்டம், சென்னை, 2008.

| | |
|---|---|
| செம்மூதாய் சதாசிவம் | தமிழர் வாழ்வியல் மரபும் மாற்றமும், செம்மூதாய் பதிப்பகம், சென்னை, 2015. |
| பொற்கோ | பண்பாட்டு கருத்தோட்டம், பூம்பொழில் வெளியீடு, சென்னை, 2001. |
| விசுவநாதன்., அ., (உரை. ஆ] | கலித்தொகை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2004. |
| மீனாட்சி சுந்தரனார் தெ. பொ. | தமிழும் பிற பண்பாடும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1998. |

## இலக்கண நூல்கள்

| | |
|---|---|
| இளம்பூரனர் உரை | தொல்காப்பியம் (பொருள்) வ.உ. சிதம்பரம் பிள்ளை பதிப்பு, பதிப்பு – 1919. |
| இராமசுப்பிரமணியன் வ.த. | தொல்காப்பயிம் (பொருளதிகாரம்), பூம்புகார் பதிப்பகம், சென்னை, பதிப்பு – 2008. |
| சண்முகம்பிள்ளை மு. | தொல்காப்பியம் (பொருளதிகாரம்), முல்லை நிலையம், சென்னை, பதிப்பு – 1995. |
| நச்சினார்க்கினியர் உரை | தொல்காப்பியம் பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை, பதிப்பு – 1970. |

## ஆங்கில நூல்கள்

| | |
|---|---|
| William Durant | The Story of Civilization (Part 1) (Our Oriental Heritage) Simon and Suhuster, Newyork, 1964. |

Christopher Caudwell Illusion and Reality, London, 1937.

Chidambaranatha Chettiyar A. Advanced Studies in Tamil Prosody, Annamalai Nagar, 1943.

Christopher Caudwell, Studies in a dying culture, people's publishing house pvt. Ltd., New Delhi, 1990.

Kanakasabhai V. The Tamils Eighteen Hundred Years Ago, The South Indian Saiva Siddhanta Works Publishing Society, Madras, 1966.

Pope G.U. Tamil Heroic Poems, International institute of Tamil studies, Chennai, 1997.

Purnalingam pillai M.S. Tamil India, International Institute of Tamil Studies, Chennai, 1999.

Ramachandra Dikshitar V. R. Studies in Tamil Literature and Languages, Madras, 1956.

Singaravelu S. Social Life of the Tamils, International Institute of Tamil Studies, Chennai, 2001.

Singaravelu S. Social Life of the Tamils (The Classical Period), International Institute of Tamil Studies, Chennai, 2001.

Subramanian S. V. Heritage of the Tamils (Temple Arts), International Institute of Tamil Studies, Chennai. 1985.

Yesudhasan Issac Jayadhas V. — History of Tamil Society and Culture since 1336, Marthandam, 2002.

Pon. Kothandaraman — Mordern Studies in Tamil, Tamil Nulagam. Madras, 1976.


## அகராதிகள்


கழகப் புலவர் குழு — கழகத் தமிழ் அகராதி, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு – 1998.

கந்தையா ந.சி. — செந்தமிழ் அகராதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, பதிப்பு – 1999.

லேனா தமிழ்வாணன் (பதி. ஆ.) — மணிமேகலைத் தமிழ் அகராதி, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, பதிப்பு – 2008.

ஆறுமுக நாவலர் — சூடாமணி நிகண்டு, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, பதிப்பு – 1996.

வாழ்வியற் களஞ்சியம், தொகுதி. 12 — தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, தஞ்சாவூர், 1992.

# பின்னிணைப்பு 1

## அருஞ்சொற் பொருள்

அதள் - தோலினாலான படுக்கை

அம்பணம் - அளத்தல் கருவி

அம்பி - மரக்கலம்

அரவு, அரவாய் - அரம்

அரிச்சூட்டு - அருக்கப்பட்ட கதிர்கள் அடுக்கிக் கட்டப்பட்ட கட்டுகள்

அறுவை, கலிங்கம், துகில் - ஆடை

ஆம்பி - நீர் இறைக்கும் கூடை

ஆவணமாக்கள் - குடவோலை தேரும் மாக்கள்

இதணம், கழுது, பணவை - காவலுக்காக அமைக்கப்பட்ட பரண்

இதை - பயிற் செய்வதற்கேற்ற புதிய நிலம்

இருங்கல் அடார் - கல்லால் செய்யப்பட்ட பொறி

இருவி - கதிர் அறுக்கப்பட்ட தட்டை

இறடி - தினை

உமண் சாத்து - உப்பு வணிகர் கூட்டம்

உமணர் - உப்பு வணிகர்

உவலை - சருகு, தழை

எஃகு - கத்தி

ஐவனம் - மலை நெல்

கண்ணேணி - மூங்கிலின் கணுவைச் செதுக்காமல் கால் வைத்து ஏறுவதற்கு வசதியாக தயாரிக்கப்பட்ட ஏணி

கணிச்சி - ஒரு வகை கடப்பாரை, கோடரி, உளி

கவண் - கல்லெறியும் கருவி

கவலை - கிழங்குள்ள ஒருவகைச் செடி

கானகம் - காடு, குறிஞ்சி நிலம்

கானம் - அடர்ந்த காட்டுப் பகுதி

கானவர் - குறிஞ்சி, முல்லை, பாலை ஆகிய நிலங்களுக்குரிய மக்களைக் குறிக்கும் சொல்.

குந்தாலி - தோண்டும் கருவி

குயம் - அரிவாள்

குரம்பை - சிறு குடில்

குழிசி - மட்கலங்கள்

குளவி - காட்டு மல்லிகை

குளிர், தழல், தட்டை - கிளி விரட்டும் கருவிகள்

குறுநீர்க் கன்னல் - நாழிகைக் கணக்கெடுக்கும் கருவி

கூடு - நெற்குதிர்

கூவல் - கிணறு

கொய்வாள் - அரிவாள்

சுரிதகம் - ஒரு வகை தலையணை

சுருக்குவார் - சுருங்கப் பிடித்துக் கட்டிய தோலாலான கயிறு

செங்கேழ் வட்டம் – வட்ட வடிவமான விசிறி

செறுதல் – பாத்தி கட்டுதல்

ஞமன், தெரிகோல், சீரை – தராசு

ஞெகிழி – எரி கொள்ளி (கோபுர வடிவில் அடுக்கப்பட்ட மரக்கட்டைகளை எரித்து குளிர் காயப் பயன்படுத்தப்படும் அமைப்பு)

திகிரி – சக்கரம்

தீம்தேன் கொள்பவர் – தேனெடுப்பவர்

தீம்பிழி எந்திரம் – சாறு பிழியும் கருவி

துடவை – விளை நிலம்

நவியம் – கோடரி

நாஞ்சில் – கலப்பை

நீள் அமை – நீண்ட மூங்கில் குழாய்

நுவணை – தினை மாவு

பச்சூன் – பசிய ஊன்

படை – அர்வாள்

பரண் – மூங்கிலால் அடுக்கி செய்யப்பட்ட காவற்மேடை

பல்லியம் – பல்வகை வாத்தியங்கள்

பழங் கொல்லை – தரிசாக விடப்பட்ட புன்செய் நிலம்

பனுவல் – பஞ்சு நூல்

பாண்டில் – கட்டில்

பிணவு – பெண்

பிரசம் – தேன்

புன்புலம் – தரிசு நிலம்

புனம் – கொல்லை, நிலம், வயல்

புனவர் – குறிஞ்சி நில மக்கள், வேடுவர், புனத்தைக் காப்பவர்

பூஞ்சுமட்டு – பானைச் சுமப்போர் பயன்படுத்தும் சும்மாடு

பௌவம், பரவை – கடல்

மால்பு – ஏணி

மோதகம் – கொழுக்கட்டை போன்ற ஒரு வகை உணவுப் பண்டம்

வட்டி – கூடை

வயநாள் – வெற்றி தரும் நாய்

வயவர் மடமகள் – படைவீரர் மகள்

வில் – பஞ்சையும் கொட்டையையும் தனியாக பிரிக்கும் கருவி

விளக்கம் – தீப்பந்தம்

வீளை – நாவினை மடித்து எழுப்பும் ஒருவகையான சத்தம். இது தற்காலத்தில் சீட்டி என்றழைக்கப்படுகிறது.

வேட்டுவன் – வேடன், வேட்டையாளி

வேட்டை – இளைப்பு, துன்பம், வேட்டம்

வேய்பயில் அடுக்கம் – மூங்கிலால் ஆடுக்கி அமைக்கப்பட்ட படுக்கை

# பின்னிணைப்பு 2

## பெண்பாற் புலவர்கள் மற்றும் பாடல் எண்கள்

| பெண்பாற்புலவர்ககள் மற்றும் பாடல்கள் எண்ணிக்கை | பாடல் எண்கள் |
|---|---|
| ஔவையார் (59 பாடல்கள்) | அகம். 11, 147, 273, 303.<br>நற். 129, 187, 295, 371, 381, 390, 394.<br>குறுந். 15, 23, 28, 29, 39, 43, 80, 91, 102, 158, 183, 200, 364, 388.<br>புறம். (87 முதல் 104 வரை உள்ள பாடல்கள்), 140, 187, 206, 286, 290, 295, 311, 315. |
| வெள்ளிவீதியார் (13 பாடல்கள்) | நற். 70, 335, 348.<br>குறுந். 27, 44, 58,130, 146, 149, 169, 376.<br>அகம். 45, 362. |
| காக்கைப்பாடினியார் (12 பாடல்கள்) | பதிற். (51 முதல் 60 வரை உள்ள பாடல்கள்)<br>குறுந். 210. |
| அள்ளூர் நன்முல்லையார் (12 பாடல்கள்) | குறுந். 7, 15, 32, 40, 61, 68, 93, 96, 202, 237.<br>புறம். 306.<br>அகம். 46. |
| கழார்க் கீரனெயிற்றியார் (8 பாடல்கள்) | அகம். 163, 217, 235, 294.<br>குறுந். 35, 261.<br>நற். 28, 312. |

| | |
|---|---|
| ஒக்கூர் மாசத்தியார் (8 பாடல்கள்) | குறுந். 126, 139, 186, 220, 275.<br>அகம். 324, 384.<br>புறம். 279. |
| மாறோக்கத்து நப்பசலையார் (8 பாடல்கள்) | புறம். 37, 39, 126, 174, 226, 280, 383.<br>நற். 304. |
| கச்சிப்பேட்டு நன்னாகையார் (6 பாடல்கள்) | குறுந். 30, 172, 180, 192, 197, 287. |
| வெறிபாடிய காமக்கண்ணியார் (5 பாடல்கள்) | நற். 268.<br>அகம். 22, 98.<br>புறம். 7, 302. |
| பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் (3 பாடல்கள்) | புறம். 83, 84, 85. |
| வெண்பூதியார் (3 பாடல்கள்) | குறுந். 97, 174, 219. |
| நக்கண்ணையார் (3 பாடல்கள்) | நற். 19, 87.<br>அகம். 252. |
| பொன்முடியார் (3 பாடல்கள்) | புறம். 299, 310, 312. |
| பூங்கண் உத்திரையார் (3 பாடல்கள்) | புறம். 277.<br>குறுந். 48, 171. |
| நல்வெள்ளியார் ( 3 பாடல்கள்) | நற். 7, 47.<br>அகம். 32. |
| நெடும்பல்லியத்தை (2 பாடல்கள்) | குறுந். 178, 203. |

| | |
|---|---|
| மாற்பித்தியார் (2 பாடல்கள்) | புறம். 251, 252. |
| நன்னாகையார் ( 2 பாடல்கள்) | குறுந். 118, 325. |
| மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார் ( 2 பாடல்கள்) | நற். 250, 369. |
| தாயங்கண்ணியார் ( 1 பாடல்) | புறம். 250. |
| நச்செள்ளையார் (1 பாடல்) | புறம். 278. |
| வெண்ணிக்குயத்தியார் ( 1 பாடல் ) | புறம். 66. |
| காவற்பெண்டு ( 1 பாடல் ) | புறம். 86. |
| வெள்ளைமாளர் ( 1 பாடல் ) | புறம். 296. |
| குறமகள் இளவெயினி ( 1 பாடல் ) | புறம். 157. |
| பாரிமகளிர் ( 1 பாடல் ) | புறம். 112. |
| பூதப்பாண்டியன் தேவி கோப்பெண்டு ( 1 பாடல் ) | புறம். 246. |
| பேய்மகள் இளவெயினி ( 1 பாடல் ) | புறம். 11. |
| அஞ்சி அத்தைமகன் நாகையார் (1 பாடல்) | அகம். 325. |
| குமிழி ஞாழலார் நப்பலையார் ( 1 பாடல்) | அகம். 160. |
| முள்ளியூர்ப் பூதியார் ( 1 பாடல் ) | அகம். 173. |

| | |
|---|---|
| பொதும்பிற் புல்லாளங்கண்ணியார் ( 1 பாடல் ) | அகம். 154. |
| ஆதிமந்தியார் ( 1 பாடல் ) | குறுந். 31. |
| போந்தைப் பசலையார் ( 1 பாடல் ) | அகம். 110. |
| ஊண்பித்தை ( 1 பாடல் ) | குறுந். 232. |
| குன்றியனார் ( 1 பாடல் ) | குறுந். 50. |
| பொன்மணியார் ( 1 பாடல் ) | குறுந். 391. |
| வெண்மணிப்பூதி ( 1 பாடல் ) | குறுந். 299. |
| வருமுலையாரித்தி ( 1 பாடல் ) | குறுந். 176. |
| அஞ்சில் அஞ்சியார் ( 1 பாடல் ) | நற். 90. |
| குறமகள் குறியெயினி ( 1 பாடல் ) | நற். 357. |
| காமக் கணிப் பசலையார் ( 1 பாடல் ) | நற். 243. |

## பின்னிணைப்பு 3

## சங்க இலக்கியத்தில் பெண்கள் மேற்கொண்ட தொழில்கள்

### தொழில்கள்

தினைப்புனம் காத்தல் (நற். 22, 119, 134, 276, 306, 373, 393, அகம். 32, 88, 292, 392 ஐங். 246, 281, 285, 286, 288, 296 நற். குறுந். 54, 291, 342, 360 குறிஞ்சி. 160, 225 மலை. 243, 328, குறிஞ்சி. 43 )

தினை அறுத்தல் (குறுந். 375, நற். 44)

நீதி வழங்குதல் (மதுரைக். 489)

நீர் இறைக்கும் தொழில் (மதுரைக். 89)

கிழங்ககழ்தல் (குறுந். 379, 233 கலித். 39)

தேனெடுத்தல் (குறுந். 198, 273, 291, 392 மதுரை. 3 அகம். 242, மலை. 315, நற். 168, 292, கலித். 39 ஐங். 272)

குறி சொல்லுதல் (அகம். 52, 188 குறுந். 394 திருமுருகு. 242)

வெறியாடுதல் – (குறுந். 53, 111, 214, 263, 360, 362, 366)

கால்நடை மேய்த்தல் (அகம். 14, 21, 54, 74, 94, 124, 155, 253, 274, 321, 394, 399 குறுந். 221, 358 நற். 69, 169, 264, 268, 364, 371 பதிற். 21 புறம். 54, 224, 339 ஐங். 87, 439, 476 கலித். 106, 108, 110 நெடுநல். 3 பெரும். 169, 176 நற். 169, 9

, 274, 394)

தயிர் கடைதல் (கலித். 106, 110 பெரும். 156)

மோர் விற்றல் (கலித். 108, 109)

பால் கறத்தல் (கலித். 110, 111)

தயிர் விற்றல் (புறம். 33)

நெய் விற்றல் (பெரும். 164)

வெண்ணெய் விற்றல் (கலித். 115)

ஏறு தழுவல்

உழவுத் தொழில் (229 - 241)

உழுதல் (பெரும். 196, 188 பதிற். 8, 58 அகம். 26, நற். 60 புறம். 289, 220 குறுந். 131 கலித். 94. மதுரை. 89)

விதைத்தல் (நற். 60, 210 குறுந். 155 ஐங். 3 பெரும். 210 )

உரமிடுதல் (நற். 142, 343 கலித். 108, புறம். 33, 215, 311 பதிற். 13, பெரும். 154, அகம் 165, 394 மலை. 531)

களையெடுத்தல் (குறுந். 178, நற். 60, 332, பெரும். 213 அகம். 184, 194)

தினைப்புனம் காத்தல் (புறம். 344, அகம். 188. ஐங். 206, 281, 282, 285, 289 மலை. 328, குறிஞ்சி. 38, 41, 99 குறுந். 214, 360 நற். 22, 134, 204)

அறுவடை (அகம். 84, 116 மலை. 112, 471 பொருநர். 193, 242 பெரும். 230)

கடாவிடுதல் (பெரும். 237 அகம். 37, 366)

தானியங்களைத் தூய்மை படுத்துதல் (அகம். 37, 366)

மீன்பிடித்தல் (அகம். 10, 36, 60, 65, 70, 140, 210, 260, 300, 320, 330, 340, 350 குறுந். 54, 184, 304 ஐங். 180, 192, 278 பெரும். 283, 433 நற். 38, 45, 49, 63, 67, 74, 101, 207, 111, 175, 199, 219, 227, 303, 315, 331, 372, 388 புறம். 12, 24, 66, 126, 238,

303, 343 மதுரை. 83, 116, 321, 379 பட்டினப். 112, 174 மு. கலி. 6, பதிற். 48)

மீன்விற்றல் (நற். 45, 239, 349 மதுரை. 97 குறுந். 184 அகம். 30)

மீன் உலர்த்துத்ல் (நற். 4, அகம். 300 குறுந். 320 )

உலரும் மீன்களைக் காத்தல் (அகம். 20, 80)

உப்பு உற்பத்தி (சிறு பாண். 55, 60 அகம். 60, 119, 140, 159, 169, 207, 295, 366 நற். 30, 138, 183, 254, 354 புறம். 116 குறுந். 124, 269 பெரும். 58)

முத்தெடுத்தல் (அகம். 280, 350 ஐங். 194 )

பறை கொட்டுதல் (நற். 77)

இடுகாட்டுத் தொழில் (புறம். 360)

பாகன் (நற். 13, மலை. 325)

முத்து விற்பனை (அகம். 296 ஐங். 195)

கொள்ளையடித்தல் (அகம். 7, 9, 35, 63, 75, 79, 87, 89, 101, 105, 119, 121, 127, 129, 131, 143, 159 167, 169, 187, 231, 249, 265, 269, 284, 297, 313, 319, 327, 363, 377, 387 நற். 164, 298, 329, 387 புறம். 31, 43, 68, 88, 90 93, 97, 161, 174, 177, 259, 260, 399, 400 குறுந். 12, 16, 283, 297, 331 ஐங். 352, 363, 364 பா. கலி. 12, மலை. 489 மதுரை. 687)

இரும்புத் தொழில் (பெரும். 206, 436 குறுந். 155, 172 அகம். 55, 72, 81, 96 நற். 13, 125, 133 புறம். 312, 170)

தோற்பை செய்தல் (கலித். 106)

மரத்தொழில் (கலித். 72, 80 குறுந். 611, புறம். 87 பட்டினப். 24)

பொன் தொழில் (நற். 86, 153, 313, 364, 394 புறம். 160, 353 மதுரை. 511)

சமைத்தல் (புறம். 399 பெரும். 95, 167, 254, 275, 306, 377, 471 பொரு. 102 மதுரை. 524, 624)

மருத்துவம் (நற். 136 கலித். 17, 137 பதிற். 32 புறம். 180)

பூ கட்டி விற்றல் (அகம். 48, 391 பெரும். 217 நற். 97, 118 கலித். 11)

கள் விற்றல் (அகம். 157. 245)

ஏவல் தொழில் (பொருநர். 85)

ஆடை வெளுத்தல் (நற். 90, மதுரை. 721 அகம். 34, 89, 387 புறம். 311)

மட்பாண்டத் தொழில (புறம். 32, 168, 228, 238, மலை. 474 அகம். 77, 165, 369)

சானை பிடித்தல் (அகம். 1, 356)

பருத்தி விளைவித்தல் (புறம். 299, 393 அகம். 129)

பருத்தித் தொழில் (நற்.247, 299, 353 அகம். 133 புறம். 125, 326, 391)

ஆடை நெய்தல் (நற். 353)

உணவுப் பண்டம் விற்றல் (மதுரை. 535, 624 பெரும். 377)

நாழிகை கணக்கிடுதல் (அகம். 43)

போர்த்தொழில் (அகம். 187)

மேடை ஒப்பனை (மதுரை. 284)

இறைச்சி வெட்டுதல் (பதிற். 21, 67)

மணியடித்தல் ( பதிற். 31)

விசிறி செய்தல் (நெடுநல். 57)

எண்ணெய் எடுத்தல் (நற். 328)

காவல் தொழில் (மதுரை. 642 முல்லை. 53, 59 பட்டினப். 131)

சுங்கம் வசூலித்தல் (பட்டினப். 116 பெரும். 73)

சங்குத் தொழில் (அகம். 24, 350 நற். 77 மதுரை. 511)

அணிகலன் செய்தல் (மதுரை. 512, கலித். 11, 25, 74, 76, 96, 102)

தானியம் விற்றல் (பதிற். 13)

கட்டிடம் கட்டுதல் (கலித். 35, 83,)

பண்டமாற்று (பொருநர். 214)

புல்லரிசி எடுத்தல் (பெரும். 89)

சங்க இலக்கியத் தொழிற் கருவிகள்

நாஞ்சில் (பதிற். 58 பா.கலி. 36 பதிற். 21, 26 பரி. 1, 4, 13, 15 அகம். 42, 141 பெரும். 198)

ஏர் (நற். 3 பெரும். 40 கலித். 94)

கலப்பை (பெரும். 188)

படை – அரிவாள் (நற். 275)

குயம் – அரிவாள் (பொருநர். 242)

அரம் – அருக்கும் கருவி (பதிற். 60 மதுரை. 316 ஐங். 185 பரி. 10 நற். 235 அகம். 96, 349 புறம். 36 மலை. 35)

கொடுவாள் (பெரும். 471)

கணிச்சி – கூர்மையான கருவி (நற். 240 பதிற். 22 அகம். 21, 399)

பொன் – இரும்பு (பதிற். 22)

அம்பணம் – மரக்கால் (பதிற். 66, 71)

கூடு – நெல் சேமிக்கும் பொருள் (புறம். 148 நற். 60)

குதிர் – நெல் சேமிக்கும் பொருள் (பெரும். 186 மதுரை. 169)

உலக்கை (புறம். 9, 22, 393, 399 பதிற். 24, 29 அகம். 286 குறிஞ்சி. 41, 43 சிறுபாண். 193 பெரும்பாண். 226 முல்லை. 193)

வட்டி – கூடை அல்லது பெட்டி (ஐங். 47, 48 குறுந். 155 நற். 210 அகம். 391)

தீம்பிழி எந்திரம் – சாறு எடுக்கும் கருவி (பதிற். 19, பட்டினப். 9)

கரும்பிணேந்திரம் (ஐங். 55)

அடார் – பொறி (நற். 98, 119 புறம். 19, மலை. 193)

எந்திரத் தகைப்பு – (பதிற். 53)

வேல் (அகம். 7, 27, 81, 104, 117, 152, 216, 263, 269, 272, 303, 322, 338, 362, 365, 373, 392 புறம். 26, 37, 57, 201, 237, 317, 323, 346 நற். 18 பதிற். 61 திருமுருகு. 46 ஐங். 78)

வாள் (புறம். 3, 26, 50, 60, 131, 177, 292, 312, 323, 394 அகம். 143, 199, 213, 266, 309, 338 பதிற். 12, 51, 55 நெடுநல். 172 நற். 324 சிறுபாண். 58 மதுரை. 53 முல்லை. 212 திருமுருகு. 7)

தோல் – கேடயம் (அகம். 278 புறம். 4, 97, 285, 300, 311 குறுந். 392 நற். 197 பதி. 50, 52, 62, 82, 83, 88)

பலகை – கேடயம் (புறம். 15, 345 அகம். 67, 131)

அரணம் – கவசம் (பதிற். 62 புறம். 13)

உறை – வாள் வைக்கும் கருவி (அகம். 136 நற். 387 புறம். 323 பதிற். 19,24)

ஆவம் – அம்பு வைக்கும் கருவி (புறம். 323)

தூணி – அம்பு வைக்கும் கருவி (சிறுபாண். 238)

குந்தம் – ஈட்டி (பதிற். 11)

புட்பில் – கூடை (கலித். 117)

வட்டி – பெட்டி (கலித். 109)

உளி – எறியப் பயன்பட்ட கூர்மையான கல் (அகம். 210, 343 குறுந். 304, நற். 388 மதுரை. 641 நெடுநல். 119)

எஃகு – கத்தி ( அகம். 29)

ஞமன், தெரிகோல், துலாம், சீரை – தராசு (அகம். 349 புறம். 6, 39, 43)

தோட்டி, காழ், நிறப்படை – அங்குசம் (புறம். 14, 293 பதிற். 38, 40 பரி. 10 அகம். 360 கலித். 55)

இரும்பு வில் – பஞ்சடிக்கும் கருவி (நற். 247, 299 அகம். 133)

ஊசி (அகம். 48 புறம். 82)

ஊனம் – இறைச்சி வைத்து வெட்டும் பலகை (பதிற். 21, 67)

சம்மட்டி – 437

நவியம் – கோடரி (புறம். 23, 36)

## பின்னிணைப்பு 4

## சங்க இலக்கியத்தில் பெண்களைச் சுட்டும் பெயர்கள்

### நற்றிணை

மகட்கொடை (310)

மடம் கெழு பெண்டே (310)

தாயர் (310)

முதுபெண்டு (370)

புலைத்தி (90)

நல்கூர் பெண்டின் சில்வளை குறுமகள் (90)

செம்முது பெண்டிர் (288)

வயங்கு இழை மகளிர் (299)

கோமகள் (300)

ஆயம் (140)

மடத்தகை ஆயம் (300)

பிரிவிலாட்டி (140)

இழை அணி மகளிர் (302)

கொடிச்சி (22, 85, 95, 134, 204, 276, 306, 373, 379)

நிறைதொடி குறுமகள் (134)

மடமகளே (97)

மடமகள் (101. 102)

குறுமகட்க்கு (106)

ஆய் மட நிலையே (106)

இன்னகை மடந்தை (108)

செம்முது செவிலியர் (110)

விழவு ஆடு மகளே (138)

பரதவர் மடமொழி குறுமகள் (207)

சுடர்நுதற் குறுமகள் (208)

மழலை அம் குறுமகள் (209)

இலங்குவளை மகளிர் (215)

நேரிழை மகளிர் (191)

பெருமட மகளிர் (197)

குறுமகள் (20, 61, 66, 75, 77, 190, 202, 220, )

அயல் இலாட்டி (65)

எவ்வளை குறுமகள் (306)

அரிவை (81, 120, 374)

நல்நடை கொடிச்சி (82)

மனைவி (121)

தாய் (8)

மடவோள் (15)

கையள் (106)

குளிர்படு கையள் (306)

யாய் (301)

யாயே (376)

பொற்றொடி மகளிர் (258)

ஒள்நுதல் அரிவை (377)

ஒள்நுதல் மகளிர் (283)

ஒள்நுதல் குறுமகள் (240, 243)

ஒள்இழை குறுமகள் (253)

அயல்இற் பெண்டிரி (378)

வாள் இழை மகளிர் (380)

வாள் இழை குறுமகள் (76)

மடவோள் (384)

அன்னை (115, 122, 145, 147, 149, 173, 177, 236, 272, 288, 317, 339, 351, 365, 389)

வெவ்வாய் பெண்டிர் (133)

மடந்தை (113, 237, 264, 301, 341, 391)

ஒண்தொடிமகளிர் (391)

மகளிர் (145, 200, 238, 310, 320, 339, 395)

அணிநுதற் குறுமகள் (149)

மடமிகு குறுமகள் (319)

பார்ப்பன மகளிர் (321)

திருந்து இழை அரிவை (321)

திருந்து இழை மகளிர் (40)

சீர் கெழு மடந்தை (40)

கிளர் இழை அரிவை (41)

நறுநுதல் அரிவை (50)

மகள் (197, 271, 274, 305, 324)

கலம்பெறு விறலி (328)

மாண் இழை மகளிர் (30, 328, 330)

சூர் மகள் (34)

பைந்தொடி மகளிர் (330)

சேரி அம் பெண்டிர் (171, 175)

செய்வினை குறுமகள் (179)

மனையோள் (336)

பெதும்பை (339)

மடமா அரிவை (346)

மகளே (349)

இவள் (258, 265, 291, 309, 325, 326, 339, 351)

மாண்புடை குறுமகள் (352)

ஆளில் பெண்டிர் (353)

மடமகள் (201, 353)

தூங்கண் மடந்தை (355)

வாண் ஆர மகளிர் (356)

இன்று தரு மகளிர் (360)

பரத்தை (360)

துஞ்சா கண்ணர் பெண்டிர் (225)

முனிவு இல் பரத்தை (230)

பெருந்தோட் குறுமகள் (80, 221, 366)

மெல்லியல் அரிவை (366)

மெல்லியல் குறுமகள் (93, 142)

ஆடுமகள் (95)

அலர்வாய்ப் பெண்டிர் (36, 143)

அணங்கு (39)

இளையோள் (143)

இன்னகை மகளிர் (267)

படிவக மகளிர் (272)

வயவர் மகளிர் (276)

குறவர் மகளிர் (276)

குறுந்தொகை

புதல்வன் தாய் (359)

கொடிச்சி (36)

அன்னை (361, 83, 93 ,111)

எல்வளை மகளிர் (364)

வெறியாள் (366)

வெல்வாய் பெண்டிர் (373)

மடமா அரிவை (378)

குறுந்தொடி மகளிர் (384)

வாள் இழை மகளிர் (386)

தங்கை (392)

குறமகள் (394)

தாய் (397)

கணங்குழை மகளிர் (398)

மகளிர் (401)

ஒண்தொடி மகளிர் (238, 243)

மின்னிழை மகளிர் (246)

தெறிதீம் மகளிர் (250)

மடமான் (272)

மணிமிடை அல்குல் மடந்தை (274)

பனை தோட் குறுமகள் (276)

பெருந்தோட் குறுமகள் (280)

அரிவை (292, 323)

கடலாடு மகளிர் (326)

நன்மனை மடமகள் (327)

நலத்தகை புலைத்தி (330)

நறுதழை மகளிர் (333)

நேரிழை மகளிர் (335)

பெருந்தோட் கொடிச்சி (335)

மடமகளே (337)

நல்கேழ் அரிவை (338)

மெல்லியள் குறுமகள் (89)

அகவன் மகளே (298)

ஆயம் (311)

மடம் ஆர் அரிவை (321)

பெருந்தோட் குறுமகள் (95)

குறுமகள் (101)

ஆடுமகள் (101)

தலையணி அல்குல் மகளிர் (125)

மகளிர் (135)

மெல்லியள் அரிவை (137)

அன்னை (141)

நுண்பூண் மடந்தை (147)

பெண்டிர் (158)

மனையோள் (164)

அன்னை (141)

பெருமுது பெண்டிர் (181)

மடமகள் (184)

குறுமகள் (189)

அயலிலாட்டி (201)

கடுஞ்சூள் மகளிர் (287)

குறவர் மகளிர் (208)

கொடிச்சி (214, 272, 286, 291)

அரிவை (2, 14)

மகளிர் (9, 21, 26, 31)

தோழி (13)

மடந்தை (5, 20, 52)

இவள் (18)

அகவன் மகள் (23)

ஆடுகள மகள் (31)

வாள் இழை மகளிர் (45)

சிறுவன் தாயே (45)

யாயும் (51)

சூரரமகளிர் (53)

மெல்லியள் குறுமகள் (89)

பெண்டினை (91)

அன்னை (93)

குறுமகள் (70, 95, 101)

ஆடுமகள் (105)

அரிவை (63)

மகளே (71)

## ஐங்குறுநூறு

எயிற்றி (364, 365)

பூங்கணோள் (375)

பாவை (375)

பைங்கிளி (375)

புனை இழை மகளிர் (382)

மனைகெழு பெண்டிர் (382)

யாய் (385)

கடுஞ்சூள் மகள் (386)

பெண்டு (387)

மடந்தை (388, 389, 396, 415, 427, 462)

மடமகள் (393, 421,424)

குறுமகள் (394, 395)

மகளிர் (400)

அரிவை (168, 171, 172, 231, 302, 322, 185, 254, 404, 408, 414, 420, 466, 483, 492, 497)

மனையோள் (410)

பேரியள் அரிவை (413)

வாணர மகளோ (418)

கன்னி (479)

தெரியிழை அரிவை (482)

புரையோள் (486)

தையல் (489)

ஆய்தொடி (196, 330, 389, )

ஆயம் (83)

மடந்தை (86, 92, 149, 293, 294, 297, 351)

மனையோள் (87)

மங்கையர் (52)

இவள் (30, 56, 57, 58, 60, 91, 93, 96, 97, 98, 99, 100)

மகளிர் (54, 80, 84, 91, 100, 147, 186, 187, 295, 297)

தலைமகள் (82)

மகள் (29, 79, 91, 96, 97, 99 101, 258, 260, 281, 282, 288, 289, 290, 296, 298, 299, 300, 373, )

அன்னை (101, 102, 103, 104, 105, 106, 107, 108, 109, 110, 201)

பெண்டு (57, 68, 69, 113, 276, 283)

குறுமகள் (52, 254, 257, 305, 371)

பெண்டிர் (13, 271, 32, 33)

புனலாடு மகளிர் (15)

சிறு தொழு மகளிர் (16)

புதுவோர் (17)

வரையர மகளிர் (191, 204)

இளையர் (198)

மடமகள் (255, 256, 258, 259, 260, 283)

கொடிச்சி (256)

பெண்கள் (70)

குறமகள் (285)

பாண் மகள் (47, 49)

மடவரல் மகள் (361)

எயினர் தங்கை (363)

அரிவை (42, 46, 73)

மடமகள் (48, 98)

மடவரல் (76)

அந்தர மகளிர் (76)

மனையோள் (48, 81)

பரத்தை (48, 84)

**பதிற்றுப்பத்து**

ஆடு மடமகள் (51)

அசை நடை விறலியர் (51)

மின்னிழை விறலியர் (54)

ஆன்றோள் (55)

சில்வளை விறலி (57, 78)

ஒண்ணுதல் மகளிர் (57)

விறலியர் (58)

பாண் மகள் (60)

சாயினம் (60)

வேல் பாடினி (61)

மகளிர் (63, 73)

பேய்மகள் (13, 22, 30, 67)

ஒள்ளிழை மகளிர் (13)

வானுறை மகளிர் (14)

செறுவினை மகளிர் (71)

மெல்லியள் மகளிர் (78)

அரிவை (81, 89)

பாடினி (14, 17, 87)

புனிற்று மகள் (16)

புரையோர் (16)

விறலியர் (18)

அரிவை (19)

எல்வளை மகளிர் (27)

வளக்கை மகளிர் (29)

வெண்கை மகளிர் (29)

ஒண்ணுதல் மகளிர் (30)

மகளிர் (31, 43, 46, 50, 88, 89)

வசையின் மகளிர் (12)

சில்வளை விறலி (40)

மெல்லியள் மகளிர் (40)

நன்னுதல் விறலியர் (47)

விறலியர் (48, 49)

நல்யாழ் இளையர் (41)

பாடு விறலியர் (53)

பாடு மகள் (44)

**பரிபாடல்**

அரிவை (11, 12)

கன்னியர் (11)

முதல்வியர் (11)

தையல் மகளிர் (11)

ஆயம் (11)

காரிகை (11)

கிழவியர் (11)

நயன்இல் பரத்தை (12)

அடியுறை மகளிர் (14)

அழுகை மகளிர் (14)

தையல் (15)

ஆயத்தார் (15)

மடவார் (15)

விறலியர் (17)

பாடினி (17)

அவரவர் (17)

மணையவள் (19)

சூர் (19)

விறலியர் (19)

அகலிகை (19)

மகளிர் (20, 21, 91)

ஆயம் (20)

பெண் (20)

மகள் (20)

பொய்தல் மகளிர் (20)

மங்கையர் (20)

நாண் இழந்தோள் (1)

பிழையாத பெண்டிர் (2)

கெழு மகளிர் (5)

மனைவியர் (5)

இனியர் (6)

மகள் (6, 8, 9)

அரிவை (7)

மடநல்லார் (7)

கோதையர் (7)

மன மகளிர் (7)

நல்லவர் (7)

குறுந்தொடி மகளிர் (8)

அடியோர் (8)

ஏதிலர் (8)

பெண் (8)

இவள் (8)

பாவையர் (8)

அரிவையர் (8)

பரத்தை (9)

எய்யா மகளிர் (9)

பெண்டின் (9)

பதிவத மாதர் (10)

இளையர் (10)

முதியர் (10)

பரத்தையர் (10)

பாங்கர் (10)

மடநடை பாத்தியர் (10)

அரமகள் (10)

பாவையர் (10)

**கலித்தொகை**

மாதர் (86, 103)

மகளிர் (86, 92, 98,103, 110)

ஆயம் (92, 113, 122)

பரத்தை (94, 96)

நல்லார் (104)

யாய் (107)

ஆயத்தியர் (108)

ஆயர் மகள் (109, 111, 114)

இவள் (109)

ஆய்மகள் (110)

வாள் இழை மகளிர் (119)

மகளிர் (122)

துணையார் (124)

பெண்டிர் (61)

இவள் (61)

தளரியலவர் (66)

எழில் உண்கண் நல்லார் (67)

கொடியன்னார் (67)

மகளிர் (68)

மடந்தை (69)

பெண்டிர் (70)

கோதையர் (70)

பெண்டிர் (71, 74)

புலைத்தி (72)

கூடியார் (72)

இளையவர் (73)

புலத்தகை பெண்டிர் (73)

மகளிர் (75)

ஏதிலார் (78, 84)

ஏதிலாள் (81)

மடக் குறுமாக்கள் (82)

அம் தீம் சொல் நல்லார் (83)

பெண்டிர் (84, 94, 97, 109)

பரத்தை (84, 93)

தாயர் (84)

அன்னை (85, 94, 95, 115)

ஞாயர் (85)

இவள் (3, 5, 7, 10)

மகள் (9, 36, 52, 53, 54, 31, 49)

மாண் இழை மடவரல் (9)

தாய் (9)

புனையிழாய் (10. 16, 46)

வயங்கிழாய் (11)

மடவோள் (21)

மாதராள் (27)

தை இய மகளிர் (27)

வளையவர் (29)

தொடி மகள் (36)

பெண் (37)

தையாள் (37)

மட மகளிர் (39)

யாய் (39)

கொடிச்சியர் (40)

அரமகளிர் (40)

பெண்டிர் (40)

தையலாய் (43)

பெண்டிர் (47)

அணங்கு (49)

மகள் (50, 56)

அணங்கு (57)

பொய்தல மகள் (59)

பெண் (60)

**அகநானூறு**

பெண்டிர் (347)

விறலி (352)

நல்நுதல் அரிவை (366)

மங்கையர் (369)

சேய் இழை மகளிர் (369)

நல்சுவர் பெண்டிர் (369)

கோதையர் (370)

ஆடுமகள் (370)

இகுளை (359, 375)

ஆயம் (385)

மங்கை (386)

புலைத்தி (387)

மடநல்லோள் (392)

தன்னையர் (393)

மனையோள் (396)

தாய் (397)

மகள் (397)

செம்முது செவிலியர் (254)

மடந்தை (256)

பரத்தை (256)

அவள் (263)

கிழத்தி (275)

பெண்டிர் (275, 283)

குறுமகளிர் (286)

கையறு மகளிர் (294)

மடந்தை (295, 300)

மா ஆயோள் (296)

மகடூஉ (301)

யாய் (302)

மடவோள் (314)

இளையோள் (314)

மனை கெழு மடந்தை (316)

நகைமுக மகளிர் (317)

அன்னை (317, 358, 378, 388)

அரிவை (325, 374, 384, 394)

குறுமகள் (326)

பழையர் மகளிர் (331)

மகளிர் (334, 348, 368, 378)

குறுமகள் (335, 336)

நேர் இழை மகளிர் (336)

வரையர மகளிர் (342)

மடந்தை (346, 361, 373)

பாட்டி (196)

நன்னர் மாக்கள் (197)

அரிவை (198, 199)

பழையர் மகளிர் (201)

அம்பல் பெண்டிர் (203)

மனைகெழு பெண்டு (203)

மடந்தை (204)

தையல் (205)

பேடிப் பெண் (206)

மகளிர் (206, 208, 232)

அணங்கு சால் அரிவை (212)

பாண்மகள் (216)

பெண்டிர் (216)

மகளிர் (216, 217)

அன்னை (218, 248, 252, 272, 253, 274, 259, 292)

குறுமகள் (219, 256, 258)

மனையோள் (224)

மகளிர் (226, 266, 269, 288, 316)

கடிமகள் (244)

அரியலாட்டியார் (245)

அரிவை (245, 254, 284)

வெவ்வாய் பெண்டிர் (250)

அன்னை (122, 158)

தோழி (122, 171)

பாண்மகள் (126)

குறுமகள் (126, 172)

நல்கூர் பெண்டிர் (129)

கானவர் தங்கை (132)

கொடிச்சி (132)

மகளிர் (136, 181)

மடமகள் (140)

மகடூஉ (141)

குறுந்தொடி மகளிர் (141)

அஞ்ஞை (145)

மகளிர் (146)

ஆடு மகள் (151)

அரிவை (154, 181)

அரியற் பெண்டிர் (157)

இவள் (158)

ஆய் இழை குறுமகள் (161)

சூரர மகளிர் (162)

தாய் (165)

மகள் (165)

மனையோள் (166, 186)

விழவு ஆடு மகளிர் (176)

ஒண் தொடி மகளிர் (186)

குறமகள் (188)

குறுமகள் (189)

அன்னை (190, 201, 203, 209, 232)

கிளிகடி மகளிர் (194)

குறுமகள் (195, 229, 230)

ஏழையை (195)

மடந்தை (3)

அரிவை (4)

குறுமகள் (7, 9 12, 16, 25, 60)

பெதும்பை (7)

மகள் (7, 48, 49)

மகளிர் (9, 47)

யாய் (12)

காவலர் (12)

மனையோள் (14)

தோழி (15, 31, 48)

அஞ்ஞை (15)

அரிவை (16)

தாய் (16)

அன்னை (17, 48, 52)

ஆயம் (17, 20, 49, 60)

சிறு முது குறைவி (17)

பெண்டிர் (20)

அணங்கு (20)

மடந்தை (21, 36, 43)

முதுவாய் பெண்டிர் (22, 63)

செவிலி (26)

சுரர மகளிர் (32)

அரிவை (34)

புலைத்தி (34)

வெவ்வாய் பெண்டிர் (50)

குறமகள் (52)

கொச்சியர் (58)

அண்டர் மகளிர் (59)

## புறநானூறு

வால் இழை மங்கையர் (6)

ஆய்மகள் (215)

பெண்டிர் (9, 116, 149)

நொதுமலாட்டி (118)

தூவிலாட்டி (154)

மகளிர் (10, 44)

வால் இழை மடமங்கையர் (11)

பாடினி (11, 15)

மூதில் பெண்டிர் (19)

வயவுறு மகளிர் (20)

எல்வளை மகளிர் (24)

ஒண்டொடி மகளிர் (24, 56)

ஒள்நுதல் மகளிர் (25)

பின்றை மகளிர் (29)

ஒண்ணுதல் விறலியர் (32)

ஆய் மகள் (33)

அரிவைய்ர் (33)

மான் இழை மகளிர் (34)

குறுந்தொடி மகளிர் (36, 79)

தோழி (78, 79, 86)

மனையோட்டு (41)

நீர்தரு மகளிர் (42)

இலங்குவளை மகளிர் (53)

சில் வளை விறலி (60, 64)

கடைசியர் (61)

பேஎய்ப் பெண்டிர் (62)

பெண்டிர் (151)

தொடிக்கை மகளிர் (63)

மகளிர் (68, 96)

இன்னகை விறலி (70)

பல்லிருங் கூந்தல் மகளிர் (73)

மாண் இழை மகளிர் (78, 161)

வாள் நுதல் விறலி (89, 105)

குறுந்தொடி மகளிர் (97)

குறத்தி (108)

விறலியர் (109)

திணைமகள் (111)

குறுந்தொடி மகளிர் (113)

இன்னகை மகளிர் (116)

அரிவையர் (117)

மடந்தையர் (120)

பருத்திப் பெண்டின் (125)

இழை அணி மகளிர் (127)

ஆடுமகள் (128)

மெல்லியல் விறலி (133)

வலக்கை விறலி (135, 140)

தாய் (137)

விறலி (139)

மாணிழை மகளிர் (141)

பாடுவல் விறலி (152)

மனை கிழவோயே (163)

மனயோள் (164)

துணைவியர் (166)

விறலியர் (170)

பாடுவல் விறலியர் (172)

ஒண் தொடி மகளிர் (176)

தாய் (183)

மெல்லியல் குறுமகள் (196)

பாரி மகளிர் (200, 201, 202)

மகளிர் (201)

தெரியிழை மகளிர் (209)

ஆய் மகள் (215)

மகளிர் (221, 237, 224)

மெல்லியல் மகளிர் (224)

ஒண் தொடி மகளிர் (229)

காதலி (234)

தொடி கழி மகளிர் (238)

குறுந்தொடி மகளிர் (240)

பாடினி (242)

மகளிர் (243)

விறலியர் (244)

மடந்தை (245)

உயவற் பெண்டிர் (246)

மடந்தை (249)

குறுந்தொடி மகளிர் (251)

அன்னை (254)

புலைத்தி (259)

மனையோள் (260)

மனைவி (250)

மகடூஉ (261)

சிறுவர் தாயே (270)

மெல்லிழை மகளிர் (271)

தொடியுடை மகளிர் (272)

செம்முதுபெண்டிர் (276)

ஆய்மகள் (276)

முதியோள் (277)

மூதின் மகளிர் (279)

இவள் (279)

விருச்சி (280)

கழிகள மகளிர் (280)

பாடுவல் விறலி (280)

மென்தோள் மகளிர் (283)

மாசில் மகளிர் (287)

பூவிழை பெண்டே (293)

விடலை தாய் (295)

மகளிர் (299)

பாரி மகளிர் (301)

விளங்கிழை மகளிர் (302)

ஒண்ணுதல் அரிவை (306)

புலைத்தி (311)

மடவார் (314)

பாடினி (319)

மனையோள் (320, 333, 334)

பருத்திப் பெண்டின் (326)

இற்பொலி மகடூஉ (331)

மங்கள மகளிர் (332)

பண்புயில் தாயே (336)

தொடி தோள் மகளிர் (339)

இணையோள் (341)

மகள் (340, 342)

பெருந்தோட் குறுமகள் (342)

செறிவளை மகளிர் (344)

சேஎய் மகளிர் (356, 359)

தாய் (361)

பாடினி (361)

முள் எயிற்று மகளிர் (361)

வாடாமாலை பாடினி (364)

விலைநல பெண்டிர் (366)

செங்கண் மகளிர் (366)

பாசிழை மகளிர் (367)

பேய் மகள் (369, 370, 371)

மென்தோள் மகளிர் (373)

மான்கண் மகளிர் (374)

கற்புடை மடந்தை (383)

மகளிர் (399)

ஆடுமகள் (393)

மடந்தை (395)

அடுமகள் (399)

கிணைமகள் 399

## பொருநராற்றுப்படை

ஆய்தொடி (14)

மணங்கமழ் மாதர் (19)

பாடினி (47)

நன்னகை மகளிர் (85)

ஒண்ணுதல் விறலியர் (110)

தாய் (132)

பாடினி (162)

புனலாடு மகளிர் (241)

## பட்டினப் பாலை

மாமகளிர் (91)

தாய் (96)

மடமங்கையர் (106)

மகளிர் (109, 110)

வெறியாடு மகளிர் (155)

கொண்டி மகளிர் (246)

பேஎய் மகள் (260)

முற்று இழை மகளிர் (296)

நேரிழை மகளிர் (22)

## மலைபடுகடாம்

மடந்தை (31)

இலங்குவளை விறலியர் (46)

மங்கையர் (58)

குறமகள் (183)

வரையர மகளிர் (190, 194)

செறிதொடி விறலியர் (201)

கொடிச்சியர் (304)

பெண்டிர் (320)

மகளிர் (329, 349)

குறுமகளிர் (342)

இன்குரல் விறலியர் (358, 536)

கொடியோள் (424)

பழையர் மகளிர் (459)

விறலியர் (569)

## மதுரைக் காஞ்சி

பேய் மகளிர் (25, 163)

மட மங்கையர் (159)

அரந்தைப் பெண்டே (166)

விறலியர் (218)

பூங்கோதையர் (398)

தொல் முது பெண்டிர் (409)

இளம் பெண்டிர் (465)

பெண் (555)

பிணை நோக்கு மகளிர் (555)

பாசிழை மகளிர் (579)

வானவ மகளிர் (582)

கொண்டி மகளிர் (583)

மகளிர் (603, 446)

கடுஞ்சொல் (609)

ஒள் இழை மகளிர் (623)

மாண் இழை மகளிர் (680)

ஆய் தொடி மகளிர் (712)

பாட்டியர் (749)

இலங்கு இழை மகளிர் (779)

## நெடுநல்வாடை

மடவரல் மகளிர் (39)

கூந்தல் மகளிர் (53)

ஆடல் மகளிர் (67)

தூங்கு இயல் மகளிர் (120)

மெல்லியல் மகளிர் (151)

செம்முகச் செவிலியர் (153)

அரிவை (166)

## குறிஞ்சிப் பாட்டு

அன்னை (1)

தோழி (2)

மனையோள் (154)

அணங்கு உறு மகளிர் (175)

ஆடுமகள் (193)

வரையர மகளிர் (195)

பூந்தொடி மகளிர் (223)

## பெரும்பாணாற்றுப்படை

மகவு மகடூஉ (58)

எயிற்றியர் (94)

சூல் மகள் (136)

ஆய் மகள் (162)

செவிலி (251)

பெண்டிர் (251)

மகடூஉ (304)

மகளிர் (312, 327)

கள்ளடு மகளிர் (339)

மடவரல் மகளிர் (388)

விறலியர் (486)

அணங்கு (459)

## முல்லைப் பாட்டு

பெருமுது பெண்டிர் (11)

தாயர் (15)

மங்கையர் (47)

## சிறுபாணாற்றுப்படை

மாநில மடந்தை (1)

கற்பின் மெல்லியல் (30)

வாணுதல் விறலியர் (31)

துறையாடு மகளிர் (117)

கிணைமகள் (136)

நறும்பூங் கோதை (178)

தொடிக்கை மகடூஉ (192)

பேய் மகள் (197)

மகளிர் (262)

## திருமுருகாற்றுப்படை

சூரர மகளிர் (41)

பேய் மகள் (51)

நிணம்தின் வாயள் (56)

குறவர் மடமகள் (101)

வானர மகளிர் (116)

வால் நரை முடியினர் (127)

அவிர்தளிர் புரையும் மேனியர் (144)

திதலையர் (145)

மாசில் மகளிர் (147)

மடந்தை (175)

மடநடை மகளிர் (205)

குறமகள் (242)

மலைமகள் (257)

மங்கையர் (264)

# பின்னிணைப்பு 5

## தொல் பழங்காலம்

| | |
|---|---|
| பழைய கற்காலம் | - 2,50,000 முன் |
| இடைக் கற்காலம் | - 50,000 முன் |
| கடைக் கற்காலம் | - 30, 000 முன் |
| நுண் கற்காலம் | - கி.மு. 10,000 முன் |
| புதிய கற்காலம் | - கி.மு. 4,000 முன் |
| பெருங் கற்காலம் | - கி.மு. 1500 கி.மு. 500 |
| சங்க காலம் | - கி.மு. 500 |

## பழங்கால பண்பாடு மற்றும் நாகரிகத்தை விளக்கும் புகைப்படங்கள்



வேட்டைச் சமூக இனக்குழு மக்கள் வாழ்ந்த குகை



பாறைகளை கூர்மையான கற்கருவிகளாக மாற்றுதல்



பழங்கால மக்களின் வேட்டை வாழ்க்கை



வேட்டையின்போது பயன்படுத்திய குறியீடுகள்



வேட்டைப் பொருளை உணவுப் பொருளாக மாற்றுதல்

# <u>தொழிற் கருவிகள்</u>



கலப்பை



மரக்கல் கோடரி



கல் மற்றும் எலும்பு கருவிகள்



பலவகைப்பட்ட கலப்பைகள்




**<u>கற்கருவிகள்</u>**



**<u>ஏற்றம்</u>**

## போர்க் கருவிகள்



உலோக ஆயுதங்கள்




பல்வகைப்பட்ட உலோக ஆயுதங்கள்




பல்வகைப்பட்ட உலோக ஆயுதங்கள்



பல்வகைப்பட்ட உலோக ஆயுதங்கள்

# புழங்கு பொருட்கள்



மர ஊசி



கல்மற்றும் மரச்சாமான்கள்



மண்கிண்ணம்



சங்குப் பொருட்கள்

உரல் உலக்கை



பிற்காலப் பெண்கள் பயன்படுத்திய

உலக்கை, உரல், சுளவு



பிற்கால மண், கல் மற்றும்

உலோகக் கருவிகள்



முதுமக்கள் தாழி

# <u>இசைக்கருவிகள்</u>



வேய்ங்குழல்



ஆகுளி



யாழ்

எக்காளம்



கிடுகிட்டி



நாயினதாளம்



சுந்தரவளைவு



தம்பாட்டம்



பம்பை



துடி



தப்பு



உடுக்கை



உருமி



கொம்பு



பஞ்சமுக வாத்தியம்



# ஐவகை நிலங்கள்



குறிஞ்சிப் பெண் தினைப் புனம் காத்தல்



முல்லைப் பெண் மோர் கடைதல்



பாலை நில வாழ்க்கை



மருத நில பெண் நாற்று நடுதல்




நெய்தல் நிலப் பெண் மீன்விற்றல்



கூரைவேய்தலில் பெண்

# சங்க இலக்கியப் பதிவுகளில் சமூகப் பொருளாதார வளர்ச்சியும் பெண்களும்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக (பகுதிநேரம்)
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


**ஆய்வாளர்**

**ப.யோ. புவனேஸ்வரி**

**[பதிவு எண்: Ph.D/Regn./99/P.T/12/2012/5268]**

நெறியாளர்

முனைவர் **க.அ. ஜோதிராணி**

**எம்.ஏ.,எம்.ஃபில்.,பிஎச்.டி.,பி.எட்.,பி.ஜி.டி.ஜே.,சி.ஆர்.டி.,**

**இணைப்பேராசிரியர்**

**முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையம்**

**காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**சென்னை - 600 002**





**முதுகலைத் தமிழ் மற்றும் உயர் ஆய்வு மையம்**

**காயிதேமில்லத் அரசு மகளிர் கல்லூரி (தன்னாட்சி)**

**சென்னை - 600 002**

**நவம்பர் - 2021**

# நிறைவுரை

குரங்கு மனிதனாக பரிணாமமடைந்ததில் மொழிக்கு முக்கியப் பங்கு உண்டு. மனித இனமும் அவன் மொழியும் அவனுடன் தோன்றி வளர்ந்தன. மொழி மனிதனை வளர்த்தது மனிதன் மொழியை வளர்த்தான் இங்ஙனம் வளர்ந்த மொழியில் இலக்கியங்கள் தோன்றின. அவ்விலக்கியங்கள் அவை தோன்றிய சமூக எதார்த்தத்தையும் அவற்றை உருவாக்கிய மனிதனின் கனவுகளையும் வெளிப்படுத்தின.

தமிழ்ச் சமூகத்தின் மொழியும் இலக்கியமும் மிகப் பழமை வாய்ந்தவை. மனித சமூகத் தோற்றம் மற்றும் வளர்ச்சிப் போக்கை விளக்கும் அறிஞர்களின் கொள்கைகளைச் சங்க இலக்கியத்தின் சூழல்களில் காணமுடிகிறது. தொடக்க கால மக்கள் மலை பகுதிகளில் வாழ்ந்தனர் என அறிஞர்கள் நிறுவியுள்ளனர். அவர்கள் வேட்டைப் பொருளாதாரத்தில் இருந்து சிறிது சிறிதாக வளர்ச்சி கண்டனர். பின்னர் மேய்ச்சல் தொழிலை வந்தடைந்ததும் அவர்கள் பொருளாதார நிலையில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. மேலும், காட்டெரிப்பு முறையின் மூலம் வேளாண்மை செய்து, முல்லை நிலத்தில் பொருளாதார வளம் கண்டனர். அதன் வளர்ச்சி நிலை மருதநில நன்செய் வேளாண்மை பெருக்கத்திற்கு இட்டுச் சென்றது. இக்கால கட்டத்தை முல்லைப் பாடல்கள் மற்றும் மருதப் பாடல்கள் வழி அறியமுடிகிறது. இக்காலகட்டத்தில் மிக சொற்பமான உற்பத்தி கருவிகளைக் கொண்டு சமூகம் இயங்கி வந்துள்ளது எனக் கூறலாம். படிப்படியாக வேளாண்மையோடு இதர கைத்தொழில்களும் பெருக்கம் கண்டன. இந்த காலகட்டத்தில்தான் நாடு என்னும் கருத்தாக்கம் உருப்பெற்றது. ‘நாடு’ என்பது மேன்மையான பொருளாதார வளம் என்ற முழுமையை நிலையைப் பெற்றதாகும்.

உற்பத்தி முறைகளின் வேறுபாடு சமூக அமைப்பை உருவாக்குகிறது. சமூக அமைப்பு உற்பத்தி முறையை வளர்த்தெடுக்கிறது. இதுவரை உள்ள மனித சமூக வரலாற்றை புராதன பொதுவுடமைச் சமூகம், ஆண்டான் அடிமைச் சமூகம்,

பண்ணையடிமைச் சமூகம், முதலாளித்துவச் சமூகம், சோசலிச சமூகம் என சமூக அமைப்பின் அடிப்படையில் பிரித்துள்ளனர் அறிஞர் பெருமக்கள்.

இயற்கையை உற்று நோக்கி போலச் செய்து விதைத்துப் பயரிட்டவர்கள் பெண்கள். சிறிய களை கொத்துக் கருவிகளைக் கொண்டு வரகு, சாமை, தினை விதைத்து தினைப்புனம் காத்து வேளாண் தொழிலைப் பாதுகாத்தவர் பெண்கள். 'இந்தியாவில் தாயுரிமை' என்ற நூலில் இந்தியாவில் பெண்கள் முதல் விவசாயி என்பதை உறுதியாக முன்வைக்கிறார் எஃரன் பெல்ஸின்.

*உற்பத்தி கருவிகளின் வளர்ச்சியும் கைவினை தொழில்களின் பெருக்கமும் தான் செல்வ குவிப்புக்கு வழிவகுத்தது என அறிவோம்.* செல்வம் குவிந்த நிலையில் அரசு உருவாகிய வரலாற்று நிகழ்வு சங்க காலத்தின் மூவேந்தர் குறித்த பாடல்களில் சுட்டப்பெற்றுள்ள செய்திகளின் வாயிலாக அறியமுடிகிறது. அரசின் தொடக்க கால நிலையைக் குறுநில மன்னர்களின் செயல்பாடுகள் விளக்குகின்றன. அரசு உருவாக்கத்தில் போர் செய்தல், குறுநில மன்னர்களை ஒழித்தல், மகட்கொடை வேண்டுதல், மகட்கொடை மறுத்தவிடத்து போர் தொடுத்தல் என பல வழிகள் மேற்கொள்ளப்பட்டன.

முல்லை நிலத்தில் முதல் வேலைப் பிரிவினை உருவாகிறது. கால்நடை மேய்த்தல், வீட்டை பராமரித்தல் என ஆண்களும் பெண்களும் தங்களது வேலைகளைப் பகிர்ந்து கொண்டனர். ஆனால் ஆண்கள் வேலை பொருளுடைமையோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததால் சொத்துடைமை ஆண்களுக்கானதாக மாறிய நிலை உருவானது. பெண்கள் முல்லை நிலத்தில் உடைமையற்றவர் ஆயினர். பெண்களி வீட்டுப் பணிகள், குழந்தை வளர்ப்பு, சேமிப்பு, விவசாயப் பணிகள் மதிப்பு குறையத் தொடங்கியது.

இனக்குழச் சமூகத்திலும் குறுநில மன்னர்கள் காலத்திலும் இருந்த சமூகச் சமநிலை பெண்களுக்கு மறுக்கப்பட்டது. ஆண்கள் கால்நடை மேய்த்தலோடு போர் மேற் செல்லுதலும், பெண்கள் வீட்டு நிர்வாகத்தில்

சுற்றம் ஓம்பல், விருந்தினர் ஓம்பல் என்னும் பணிகளையும் மேற்கொண்டனர். இந்நிலத்தில் தலைமக்கள் பிரிந்திருந்து சமூக மற்றும் இல்லறக் கடமைகளைச் செய்து வந்துள்ளனர்.

இந்நிலத்தில் தலைமக்கள் காதல் சிறப்பாக அமைகிறது. பிரிவு காதலை வளர்ப்பத்தில் முக்கிய பங்கு வகிக்கிறது. நவீன காதலின் தன்மையை இக்காலகட்டத்தில் காணமுடிகிறது. பிரிவில் தலைமக்கள் தவித்திருக்கும் நிலை, தன் இணையைக் காண அவர்கள் மேற்கொள்ளும் முயற்சிகள் முல்லை நிலக் காதலரிடத்து காணப்படுகின்றன. சமூகத்தை அடுத்த கட்டத்திற்கு நகர்த்திச் செல்வதில் இத்தலைமக்களின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாகும். இந்நிலத்தில் சுய தேவைக்காக இல்லாமல் தன்னைச் சார்ந்துள்ள சுற்றத்திற்காக பொருளீட்டுதல் மேற்கொள்ளப் பட்டதால் இக்கால பொருளாதார நிலையும் தலைமக்களின் அக வாழ்வும் சிறப்பு நிலையை அடைந்திருந்தன என கூறமுடிகிறது.

அகவாழ்வின் சிறப்பை வெளிப்படுத்தும் பாடல்களின் ஊடே பெண்கள் வயலில் வேலை செய்யும் தன் குடும்பத்து ஆண்களுக்கு உணவு கொண்டு கொடுக்கும் வேலைகள் குறித்த குறிப்புகள் காணப்படுகின்றன. பால் கறக்கப் போகும் தன் தந்தைக்குக் கலம் கொண்டு கொடுக்கும் வேலையைச் செய்துள்ளாள் என்பதும் கன்றுகளை மேய்த்துக் கட்டும் வேலையைச் செய்துள்ளாள் என்பதும் புலனாகிறது. முல்லை நிலத்தில் பெண் தன் தலைவனைத் தாமே தேர்ந்து கொள்ளும் உரிமை உடையவளாக இருந்துள்ளாள் என்பதும் அறியலாகிறது.

சங்க இலக்கியப் பாடல்களுள் விறலி, பாடினி, பொருநன், சிறுபாணன், பெரும்பாணன், துடியன், பறையன், கடம்பன் என்ற தொழில் சார்ந்த பகுப்பு பண்பாட்டு நிலையைப் புலப்படுத்துவதாகவும் உள்ளது. ஆனால் சமூகப் பொருளாதார நிலை தொழில் அடிப்படையில் வர்க்கங்களாகப் பிரிப்பது நிற்பதை சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. பொருள் உடைமையற்ற கலைஞர்களான இவர்கள் பரத்தைப் பிரிவின் போது தலைவியால் இழிவு படுத்தப்பட்டுள்ளதையும் அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் ‘சான்றோர் (புறம். 266) – இழிசினர் (புறம். 82)’ என்னும் சொல்லாடல்கள் மூலம் வர்க்கப் பிரிவினை வெளிப்படுத்தப் பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் காட்டப்படும் தலைவி, தோழி, செவிலி, நற்றாய் போன்றோர் சமூகத்தின் பொருளாதார வளத்தின் மேல்தட்டு பெண்களாவர். இவர்கள் அரண்மனை அல்லது செல்வந்தர் குடும்பங்களைச் சேர்ந்தோர் என்பதையும் சங்கப் பாடல்கள் உறுதி செய்துள்ளன. ‘இழிசினர்’ எனக் குறிக்கப்பட்ட மக்கள் பொருளாதாரத்தில் பின் தங்கிய மக்களாகப் பார்க்கப்பட்டுள்ளனர். அம்மக்களுள் ஆண்கள் பெண்கள் என இருபாலரும் அடங்குவர்.

*முல்லை நிலத் தலைமக்களின் கால்நடை பொருளாதாரத்திலிருந்து அவர்களுக்கு செல்வம் சேர்கிறது. அதனுடன் நிலையான இடத்தில் தங்கி மேற்கொள்ளப்படும் உழவுத் தொழிலும் வளர்ந்தது. இது ஒரு வளமையான புதுசமூக அமைப்புக்கு கொண்டு சென்றது*

தாய் வழிச் சமூகத்தில் பெண்கள் தலைமை பண்பு ஏற்றிருந்தனர். தந்தை வழிச் சமூகத்தில் உருவான வர்க்கப் பிரிவினையின் காரணமாக, ஒரு குறிப்பிட்ட பெண்கள் இழிசின குலத்தைச் சேர்ந்தோராக மாற்றம் கண்டனர். தொழிற் பிரிவினையின் அவசியம் வர்க்கப் பிரிவினையை உருவாக்கியது. தற்காலத்தில் சாதி என்ற இறுகிய, ஒடுக்குமுறை பண்பு கொண்ட ஒரு நிலை உருவாவதற்குக் காரணமாய் தொழில் பிரிவு அமைந்திருந்ததைச் சமூகவியல் ஆய்வுகள் விளக்கி வந்துள்ளன.

புலைத்தி. பறை அடிப்பவர், கட்டில் பின்னுவோன் உள்ளிட்ட பிற உழைக்கும் மக்கள் இழிசினர் என்னும் பிரிவைச் சேர்ந்தோராகச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. *மருத நிலத்தில் செல்வம் ஒரு சிலரிடத்து குவிகிறது. அங்ஙனம் குவித்துக் கொண்ட சிறுபாண்மை மக்கள் சான்றோராக மருதப் பாடல்களில் சித்திரிக்கப்பட்டுள்ளனர்.* முல்லை நிலத்தில் கூட்டுவாழ்க்கையில் சிறப்புற்றிருந்த பெண்கள், மருதநில உற்பத்திக் கருவிகளால் துண்டுத் தீவுகளாகி சிதைந்துள்ளதையும் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது.

தோழி என்பவள் *வர்க்கப் பிரிவு உருவாகிய சமூகத்தில்* உயர்குடியைச் சேர்ந்தவள் என்பதை அறியமுடிகிறது. களவின் தொடக்கத்தில் தலைவியின் தோற்றத்தில் ஏற்படும் மாற்றங்கள் தொடங்கி தலைவன் வந்து தலைவியை மணந்து கொள்ள ஆற்றியிருக்கச் செய்வது வரை தோழி உடனிருக்கிறாள். தலைமக்களின் பிள்ளைக்குப் பாலூட்டும் கடமையைச் செவிலி மேற்கொள்கிறாள். இது தாய்மைப் பண்பிற்கு அடையாளமாக அமைகிறது. இதன்மூலம் தலைமக்களுக்கு அடுத்த படிநிலையில் இவர்கள் இருந்தமை மருதப் பாடல்களில் விளக்கப்பெற்றுள்ளன. ஆதிப் பொதுவுடைமைச் சமூகத்தில் குழந்தையைத் (மறுஉற்பத்தி) தாய் உருவாக்குகிறாள் என்பதனால் அவள் வளமை மிக்கவளாக போற்றப்பட்டாள். காலப் போக்கில் பெண்கள் `வளமை' என்ற நிலையில் இருந்து `வளமையின் குறியீடு' என்ற நிலைக்குத் தாழ்ந்து போன ஒரு இயக்கப் போக்கை சங்கப் பாடல்களில் கண்ணுறமுடிகிறது.

சமூகத்தில் விதை நெல்லை பாதுகாக்கும் முக்கியப் பொறுப்பைப் பெண் ஏற்றிருந்தாள். முல்லைநிலம் வரை இந்நிலை நீடித்துள்ளது. பெண்ணை பெருந்தொழில் உற்பத்தி நடவடிக்கைகளில் இருந்து விலக்கிய பிறகு பெண் படிப்படியாக அடிமை ஆனாள். உழைப்பிலிருந்து விலகிய ஒரு சிறு குழுவிடம் செல்வம் குவியும் நிலை, மற்றொரு புறத்தில் சீரழிவை ஏற்படுத்தியது. ஒருபுறம் ஒருவனுக்கு ஒருத்தி வலியுறுத்தப்பட்டது. மறுபுறம் பரத்தமை ஒழுக்கம் நடைமுறை படுத்தப்பட்டது. இவ்விரு நிகழ்வுகளும் மருதநிலப் பொருளாதாரத்தின் விளைவுகள் ஆகும். மருத நிலத்தில் பெண் `பரத்தை' எனும் இழிவான நிலைக்குத் தள்ளப்பட்டிருப்பதையும் காணமுடிகிறது. காமக் கிழத்தி, சேரி பரத்தை, காதற் பரத்தை என இழிவுகளோடு வாழும் நிலைக்கு ஒடுக்கப்பட்டிருக்கிறாள்.

உற்பத்தியினால் செல்வக் குவிப்பும் போரினால் அபகரிக்கப்பட்ட உடைமைகளும் பேரரசுகளையும், அரசரையும், அரசியரையும் உருவாக்கியது. அரண்மையிலும் பெண்களின் நிலை குறிப்பிடத்தக்க

வகையில் முன்னேற்றம் அடையவில்லை. ஏழை பெண்களுடன் ஒப்பிடுகையில் ஓரளவு சுதந்திரம் கொண்டோராக இப்பெண்கள் இருந்தனர். இருப்பினும் அவர்களது முழு ஆளுமையையும் வெளிக் கொணரும் வகையில் அக்காலச்சூழல் அமையவில்லை.

*ஆண் பொருளாதாரம் நிலை கொண்ட பின் அவனுக்கான வாரிசுகளை உறுதி செய்யும் பொருட்டு திருமணம் நடைபெறும் நிகழ்வு உருவாவதைக் காணமுடிகிறது.* திருமணச் சடங்குகளில் பெண்களுக்கு முன்னிடம் அளிக்கப்பட்டுள்ளது. இந்நிலை இன்றுவரை தொடர்வதையும் காணமுடிகிறது. திருமணம் என்பது புனர் உற்பத்திக்கு அடிப்படையாக அமைவதால் வளமையின் குறியீடான பெண்களைக் கொண்டு சடங்குகள் நடத்தப்படுகின்றன. மந்திரச் சடங்குகளிலும் தொடக்கக் காலத்தில் பெண்களுக்கு முதன்மை நிலை வழங்கப்பட்டுள்ளது. இனக்குழுச் சமூக வாழ்வில் மழை வேண்டி செய்யப்படும் சடங்குகளில் பெண்களுக்கு முக்கியத்துவம் வழங்கப்பட்டுள்ளதையும் அறிஞர்கள் குறித்துச் சென்றுள்ளனர்.

பெண்களுக்கு வீரமூட்டுதல் என்ற மிக முக்கிய கடமையைச் சங்ககாலச் சமூகம் வழங்கியிருக்கிறது. பல புறப்பாடல்கள் வீரமூட்டுதல் என்னும் நிகழ்வைச் சிறப்பாக சித்திரித்துள்ளதைக் காணமுடிகிறது. இயற்கை மரணம் அக்கால மக்களால் இகழ்ச்சியாகக் கருதப்பட்டது. இயற்கை மரணம் எய்தியோர் சொர்க்கம் செல்ல மாட்டர் என்ற கருத்தும் நிலவியுள்ளது. இயற்கை மரணம் அடைந்தோர் மார்பில் வாள் கொண்டு கீறி அந்தணரைக் கொண்டு சடங்கு நடத்தி இறந்தோர் சொர்க்கம் செல்ல வழிபாடு நடத்தபட்டுள்ளதையும் காணமுடிகிறது.

மாங்குடி மருதனார் பாடலில் (புறம். 335) தலைவி நடுகல்லைத் தவிர வேறெந்த கடவுளரையும் வணங்க மாட்டேன் எனக் கூறுவதாக அமைந்துள்ளது. இதன்மூலம் வீரத்திற்கு சங்ககால மக்கள் அளித்துள்ள முக்கியத்துவத்தைத் தெள்ளிதின் அறியமுடிகிறது. நடுகல் நடுதல் என்பது பெரும் மதிப்புடன் நடத்தப்பட்ட சடங்காக இருந்துள்ளது. கல்லைத் தேடுதல், நல்ல நேரம் குறித்தல், கல் நீராட்டு செய்தல்,

கல்லை நிறுவுதல், கொண்டாட்டம், விருந்து பிற வாழ்த்து வழிபாடு என்னும் படிநிலைகள் கடைபிடிக்கப் பட்டுள்ளமையைக் காணமுடிகிறது. இவை எல்லாம் போர் பொருளாதாரத்திற்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவம் என்பதைக் கண்ணுறலாம்.

தொடக்கக் காலத்தில் குடிகளுக்குள் பெண்களைக் கொடுத்தும் பெற்றும் மணம் புரிந்துள்ளனர். அரசு உருவாக்கத்திற்கு பிறகு, அந்தணரின் ஆதிக்கம் தொடங்கிய பின் அகமணமுறை கொஞ்சம் கொஞ்சமாக வழக்கத்திற்கு வந்துள்ளதை அறிகிறோம். பிற்காலத்தில் நில விரிவாக்கத்திற்காக அரசர்கள் முதுகுடி மன்னர்களுடன் திருமண உறவு கொண்டனர். இவ்வகை மண உறவுகளை முதுகுடி மன்னர்கள் விரும்பவில்லை. அதன் பொருட்டு போர்களும் நிகழ்ந்துள்ளதைக் காணமுடிகிறது.

குடும்பத்தைச் சமூகத்தை முன்னின்று நிர்வகித்த முது செம்பெண்டிர் எனப் பெயர் பெற்ற பெண்கள், மருத நிலத்தில் பொருளுற்பத்தியின் வளர்ச்சியால் விளைந்த, அரசு உருவாக்கம் பெற்ற, ஆணாதிக்கச் சமூகத்தில் எல்லாவற்றுக்கும் கணவனைச் சார்ந்திருக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

'பண்பாடு என்பது சமூக இயக்கம்'. சமூதாயத்தில் வாழும் மக்கள் தொகுதியின் வாழ்க்கைக்கு அடிப்படையாக அமையக்கூடிய உள்ளப்பாங்கு என வரையறை வழங்கப்பட்டுள்ளது. சமுதாய வளர்ச்சிக்கு ஏற்ப வாழும் மக்களின் பண்பு எனவும் கருதப்படுகிறது. பண்படுத்துவது பண்பாடாகும். பண்பட்ட நிலம் நல்ல விளைச்சலைத் தருவதைப் போல பண்பட்ட சமூகம் சிறந்த வளர்ச்சியை எய்தும். அவ்வகையில் சங்கச் சமூகம் பண்பட்ட சமூகமாக பண்பாட்டில் சிறந்தோங்கிய சமூகமாக இருந்துள்ளது. ஒரு மக்கட் தொகுதியின் வரலாறு, பண்புகள், புரிந்துணர்வுகள், அறிவின் வளர்ச்சிகள், வாழ்வியல் முறைகள், சமூகக் கட்டமைப்பு, மொழி, உணவு, கலை, சமய நம்பிக்கைகள், தொழில் சார் புரிதல்கள், கருவிகள் போன்ற பல கூறுகளை உள்ளடக்கியதாக பண்பாடு என்றும் கருத்தாக்கம் தற்காலத்தில் விளக்கம் பெறுகிறது.

சங்க இலக்கியத்தில் ஒரு பெரிய அளவிலான காலகட்டத்தின் நிகழ்வுகள் வெளிப்படுத்தப்படுகின்றன. அக்கால காலகட்டத்தின் எல்லாம் நிகழ்வுகளிலும் கலைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளன. ஆடல், பாடல், இசைக் கருவிகளை இசைத்தல், செய்யுள் இயற்றுதல் எனப் பல கலை நடவடிக்கைகளை அக்கால கலைஞர்கள் மேற்கொண்டிருந்தனர். பாண் சமூகத்தார் எனச் சுட்டப்பட்ட பல வகைப்பட்ட கலைஞர்கள் அக்காலத்தில் வாழ்ந்துள்ளனர். கலையில் மேன்மையான வளர்ச்சி கண்ட இச்சமூகத்தினர் பிற்காலத்தில் அரசர்களை அண்டிப் பிழைக்கும் நிலையை எய்தினர். உற்பத்திப் பெருக்கத்தின் விளைவான உபரி உற்பத்தியால் கலைத் தன்மையைப் பின்னுக்குத் தள்ளப்பட்டு பொருள் படைத்தோர் தங்களது சுய விருப்பத்திற்காக கலைஞர்களைப் பயன்படுத்திக் கொள்ளும் நிலைக்கு சமூக நிலை மாற்றம் கண்டுள்ளது. அந்நிலைக்கு ஆண் பெண் கலைஞர்கள் ஆட்பட்டிருந்தனர். இவர்கள் சமூக விளிம்பு நிலை கலைஞர்கள் என்ற நிலையில் இருத்தப்பட்டனர்.

அக்காலத்தில் அனைத்து வகை கலைகளிலும் சிறந்து விளங்கிய விறலி எனப்பட்ட ஒருவகை பெண் கலைஞர்கள் சிறப்பாக இயங்கி வந்தனர். இவ்விறலியர் ஒரு கட்டத்தில் தனிப்பட்ட வகைப் பெண்களாக உருவாயினர். அவர்கள் கலைகளில் வல்லவர்களாக இருந்தனர். பிற்கால தாசி குல உருவாக்கத்தின் அடிப்படைகளாக இவர்கள் இருந்துள்ளதையும் அறிஞர்கள் விளக்கியுள்ளனர். சிலப்பதிகாரத்தின் மாதவியை சங்க கால விறலியரின் தொடர்ச்சியாகக் கொள்ளவும் வாய்ப்புள்ளது. கலை வளர்ச்சியை முதன்மை நோக்கமாகக் கொண்டு இவர்கள் செயல்பட்டனர். இதனை கைலாசபதியும், கார்த்திகேசு சிவதம்பியும் சுட்டியுள்ளனர்.

ஆண் பெண் இருவரும் சேர்ந்து உணவு சேகரித்தல், சிறிய அளவிலான விவசாம் செய்தல் என்ற நிலையிலிருந்து, பெண்கள் வீட்டு வேலைகளைச் செய்யும் நிலைக்கு வளர்ந்தனர். இவ்வீட்டு வேலைகளில் விருந்தினர்க்கு உணவளித்தல், ஆடு மாடுகளை வளர்த்தல், தயிர்

கடைந்து மோர் மற்றும் நெய் போன்றவற்றை பிற நில மக்களுக்கு விற்றல், உப்பு உற்பத்தி செய்தல், அவற்றை பிற இடங்களுக்குக் கொண்டு சென்று விற்றல் என்னும் நிலைகளில் பெண்களின் பணிகள் அமைந்துள்ளன.

கள் உற்பத்தி செய்தல் மற்றும் விற்றல், துணி துவைத்தல், துணி நெய்தல், அவற்றில் அழகு வேலைப்பாடுகள் செய்தல் போன்ற பணிகளையும் பெண்கள் மேற்கொண்டிருந்தனர். அரண்மனையில் *ஏவல் மகளிராக* எல்லா வேலைகளையும் பெண்கள் செய்துள்ளனர். அரசியர்க்குப் பணிவிடை செய்பவராகவும் பெண்கள் இருந்துள்ளனர். மேலும் *போர் பயிற்சி பெற்ற சில பெண்கள்* போர்ப் பாசறையில் அரசனுக்கு உதவியாக இருந்த குறிப்புகளும் சங்க பாடல்களில் காணப்படுகின்றன.

ஆண்ஆதிக்க பொருளாதாரம் வளர்ந்த பிறகு அப்பொருளாதார நிலைக்கும் பக்கபலமாய் இருந்து செயலாற்றியோர் பெண்களாவர். சங்கச் சமூகம் முழுக்க முழுக்க போர்ச்சமுதாயமாக இருப்பினு போர்புரியும் ஆண்களை மட்டும் கொண்டு அச்சமூகம் இயங்கவில்லை. அங்ஙனம் ஆண்களை மட்டுமே கொண்ட சமூக இயக்கம் என்பது எங்கும் என்றும் இல்லை. ஆண்களால் தலைமை ஏற்று இயக்கப்பட்ட பொருளாதார சமூகமாக இருந்தாலும் சங்கச் சமூகத்தில் பெண்கள் அவ்வியக்கத்தின் சமபாகமாக இயங்கியுள்ளனர் என்பது எதார்த்த உண்மை.

சங்க காலத்துப் பெண்கள் ஆங்காங்கே மேலோங்கி வாழ்ந்த நிலையை அக்கால பெண்பாற் புலவர்களின் பாடல் எண்ணிக்கையின் மூலம் அறிலாம். இந்நிலையை அச்சமூகம் முழுமைக்கும் பொருத்திப் பார்க்க முடியாது. அச்சமூகத்தில் அடிமைப்பட்ட பெண்ணும் வாழ்ந்தாள் அடிமைப்பட்ட ஆணும் வாழ்ந்தான். அடிமைப் படுத்திய பெண்ணும் வாழ்ந்தாள் அடிமைப் படுத்திய ஆணும் வாழ்ந்தான்.

*வறுமை நிலையில் வாழும் பாண் குலத்தோரின் மனைவி மற்றும் சுற்றம் குறுநில சீறூர் மன்னர்கள் காலத்தில் இல்லை. சீறூர் மன்னர்கள் கலைஞர் பெருமக்களுடன் நெருங்கிய தொடர்பில் இருந்தனர்.*

பாணர்கள் கலைஞர்களாக இருந்ததுடன் தலைமக்களிடம் தூது செல்லும் நிலையிலும் இருந்துள்ளனர். இவர்களை இரண்டு நிலைகளில் நோக்கலாம் ஒன்று இவர்கள் தலைமக்கள் இருவரை கூட்டுவித்து வாழும் வறுமை, அன்றி தலைமக்களுக்கு இடையில் இணக்கத்தை ஏற்படுத்தும் நட்புரிமை என்ற இரு நிலைகளில் இவர்களது இயக்கம் இருந்துள்ளதைச் சங்கப்பாடல்களில் காணமுடிகிறது. பல பாடல்களில் பாணர்களைத் தலைவி இழித்துப் பேசுகிறாள். இது உரிமை குறித்ததாகவும், இகழ்ச்சி குறித்ததாகவும் இரு நிலைகளில் அமைகிறது. மேலும் சங்க இலக்கியத்தில் அடிமைகள் குறித்த குறிப்புகள் மறைமுகமாக காணப்படுகின்றன. அடிமை நிலையில் ஆண் பெண் இருவர் குறித்தும் ஒரு முற்றான முடிபிற்கு வர இயலவில்லை.

*ஆதிவேளாண் சமூகம் வரையிலான மனித சமூகத்தின் வளர்ச்சியில் உற்பத்தியிலும், மறு உற்பத்தியிலும் பெண் மையமான இடத்தில் இருந்தாள். தாய் வழிச்சமூகம் மறைந்து ஆணாதிக்க தந்தை வழிச்சமூகம் உருவானது. ஆண் வழி ஒருதார மணத்தின் மூலம் குடும்பம் ஏற்பட்டது. பெண் என்றென்றைக்கும் அடிமையாக்கப்பட்ட நிகழ்வுப் போக்குக்குத் தொடக்கம் ஏற்பட்டது. உற்பத்திச் சாதனங்களின் வளர்ச்சி குடும்ப வடிவங்களிலும், பெண் மீதான ஒடுக்கு முறையிலும் மாற்றங்களை ஏற்படுத்தியதைச் சங்கப்பாக்கள் மூலம் அறியமுடிகிறது.*

பெண்கள் உடன்கட்டை ஏறும் வழக்கம் இருந்துள்ளதையும் அதற்கு இறுக்கமான கைம்மை நோன்பு காரணமாக அமைந்ததையும் காணமுடிகிறது. தனிச் சொத்தின் மூர்க்கமான விளைவாக இவற்றைக் காணலாம். இந்நிலைக்கு அரசியரும் விலக்கல்ல. ஆண்பாற் புலவர்களைக் காட்டிலும் பெண்பாற் புலவர்கள் கலகக் கருத்துக்களை முன்வைத்துள்ளமையை சங்கப்பாடல்களில் காணமுடிகிறது. ஆங்காங்கே காமத்தை வெளிப்படுத்தும் பாடல்களை மரபு மீறலாகப் பெண் புலவர்கள் பாடியுள்ளனர். `பெருங்கோப் பெண்டு' என்னும் அரசி தன் கணவன் இறந்த போது அவ்வூர்ச் சான்றோரை இடித்துரைக்கும் வகையில் `பல்சான்றீரே பல்சான்றீரே' (புறம். 246) என்ற பாடலைப் பாடியுள்ளார்.

இப்பாடல் வழி திறம்மிக்கப் பெண்கள் கைமையை வெறுத்து, சமூக இழிவுகளை எதிர்த்துள்ளமையைக் காணலாம். இந்த அவலத்தில் இருந்து விடுபடும் கட்டாயத்தில் உடன்கட்டை ஏறும் மன திடமும் கொண்டவர்களாக இருந்துள்ளமை காணமுடிகிறது. காரணம் சமூகப் பொருளாதார நிலையில் ஏற்பட்ட மாற்றத்தின் விளைவான சமவுரிமை மறுக்கப்பட்ட நிலையாகும். மேற்கண்ட பாடல் அக்காலத்தில் `சான்றோர் எனப்பட்டோரின் செயல்பாடுகளை விளக்குவதா அமைகிறது. இவர்கள் தனிச் சொத்தினைக் காக்கும் பொருட்டு சில கடுமையான விதிகளை அரசின் ஆதரவுடன் வலியுறுத்தியுள்ளனர் என்பதை உணர முடிகிறது.

மனித குலம் வேட்டையாடி உணவு தயாரித்த காலத்தின் குறிப்புகள் முதல் அரசுகள், பேரரசுகள் உருவாகி, கப்பல் கட்டி, கடல் வாணிபம் செய்த காலத்தின் குறிப்புகள் வரை சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. சங்கப் பாக்களைப் பொருண்மை அடிப்படையில் ஆய்வு செய்யும் போது மனித இனத்தின் வளர்ச்சிப் போக்கை விளக்கும் வகையில் ஐவகை நிலப்பாகுபாடு அமைவதைக் காண இடமுள்ளது.

சமகாலத்தில் உள்ள பெண்ணியக் கருத்துக்களை அக்கால பெண்களின் செயல்பாடுகளுடன் பொருத்திப் பார்க்க இயலாது. கடுமையான சமூக விதிகள் மூலம் அரசர்கள் பெண்களுக்கு அநீதியை இழைத்துள்ளதை எண்ணிப் பார்க்க முடிகிறது. பெண்கள் முழுமையான சுதந்திரத்துடன் இயங்க அக்கால சமூக பொருளாதார அமைப்பு வாய்ப்பளிக்கவில்லை. ஆனால் ஆண்களுக்கு நிகராக நூற்றுக்கணக்கான தொழிலாளர்களாக பெண்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளனர்.

தற்கால பொருளாதார அமைப்பில் பெண் விடுதலைக்குச் சாத்தியமான நிலைமையை எய்திட துணியும் பெண் எழுத்தாளர்கள் இருப்பினும் முழுமையான சொத்துடைமை பகிர்வு இன்மை பெண் விடுதலையை தாமதப்படுத்துகிறது. சமூக ஏற்றத்தாழ்வு களையப்பட்டபின் பெண்கள் தங்களை சமூக உற்பத்தியில் முழுமையாக ஈடுபடுத்தும் பொழுது பெண் விடுதலை சாத்தியமாகும்.

பெண்களின் தனித்த ஆளுமை பண்பையும் உழைப்பின் திறத்தையும் அறிந்து அதற்கான வாய்ப்பைச் சமூகம் வழங்கினால் குறிஞ்சி நிலத்தில் காணப்படும் சமத்துவம் கொண்ட ஆண் பெண் வாழ்வை தற்காலத்திலும் அடையமுடியும் என்ற கருத்தை ஆய்வேடு முன்வைக்கிறது. அதற்கு இலக்கியங்களில் பெண்ணின் முக்கியத்துவம் தொடர்ந்து பதியப்பட வேண்டும். அவை சமத்துவம் பேணும் சட்டங்களாகவும் இயற்றப்பட வேண்டும். அத்தகைய பணி இந்த ஆய்வேட்டில் முன்னெடுக்கப்பட்டுள்ளது.

சமூக நீதி மறுக்கப்படாத நிலை உருவாக்கப்பட வேண்டும். அதற்கு முந்தைய இலக்கியங்கள் மறு வாசிப்புக்கு உட்படுத்தப்பட்டு, அவற்றில் காணப்படும் நன்மை தீமைகள் புரிந்துணரப்பட வேண்டும். பெண்களுக்கான சமவுரிமைகள் காக்கப்படும் வகையில் புதிய இலக்கியங்கள் இயற்றப்பட வேண்டும். சங்க இலக்கிய பொருளாதார வளர்ச்சியில் மேன்மை நிலையில் இருந்த பெண் 'பரத்தை' என்ற நிலைக்குத் தள்ளப்பட்ட நிகழ்வினை விளக்கும் 'எழுத்து' இன்னும் முழுமையாக வடிவம் பெறவில்லை. அந்த வகையில் உரிமை மறுக்கப்பட்ட பெண் குரலாக இவ்வாய்வேடு அமைகிறது.

பெண்ணின் உழைப்பின் சிறப்பு சங்க இலக்கிய பாடல்களிலும் பெரிதும் வலிமை கொள்ளவில்லை. காரணம் பெண்பாற் புலவர்களின் பாடல் பதிவின் குறைவுமாகும். இருப்பினும் ஆங்காங்கே சமூக வரலாற்று நூல்கள் சில பெண்ணின் உழைப்பைச் சுட்டுவதை அறியமுடிகிறது. இந்நிலையில் சங்க இலக்கியத்தின் மறுவாசிப்பு வழி பெண் வரலாறு எழுதும் முயற்சிக்கு பெரும் பங்காற்றும் வகையில் இவ்வாய்வேடு அமைக்கப்பட்டுள்ளது.